

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# சிவஞான முனிவர்

த.ந. ராமச்சந்திரன்



உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில், பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்தரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

நாகார்ஜுன் மலைச்சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு:

(பட உதவி: நேஷனல் மியூசியம், புது தில்லி)

**Sivagnana Muniver** - Tamil translation by K.V. Balasubramanian of T.N. Ramachandran's monograph in English, Sahitya Akademi, 2013
Rs. 50/-



முதல் பதிப்பு: 2013

**தலைமை அலுவலகம்:**

சாகித்திய அகாதெமி 'இரவீந்திர பவன்,' 35, பெரோஸ்ஷா சாலை, புது தில்லி - 110 001.

**விற்பனை அலுவலகம்:**

'ஸ்வாதி' மந்திர் சாலை, புது தில்லி - 110 001.

**விற்பனை அலுவலகங்கள்:**

மத்தியக் கல்லூரி வளாகம், பல்கலைக்கழக நூலகக் கட்டடம், டாக்டர் அம்பேத்கர் வீதி, பெங்களூரு - 560 001.

4, டி.எல். கான் சாலை, கொல்கத்தா - 700 025.

172, மும்பைய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை, தாதர், மும்பைய் - 400 014.

**சென்னை அலுவலகம்:**

குணா பில்டிங்ஸ், 443, அண்ணா சாலை, தேனாம்பேட்டை, சென்னை - 600 018.

ISBN-978-81-260-4122-0

Rs. 50/-

Visit our website at http://www.sahitya-akademi.gov.in
E.mail: sahityaakademichennai@gmail.com

ஒளி அச்சு: **Image Digital,** *Chennai - 17.*

அச்சகம்: ***Sriram Printing Press, Chennai - 116.***

## உள்ளடக்கம்

1

## சைவத்தின் பல பிரிவுகள்

அருமணித்தடம் பூண்முலை அரம்பையரொடு அருளிப்பாடியர்
உரிமையில் தொழுவார் உருத்திர பல்கணத்தார்
விரிசடை விரதிகள் அந்தணர் சைவர் பாசுபதர் காபாலிகள்
தெருவினில் பொலியும் திருவாரூர் அம்மானே

இப்பாடல் அப்பரடிகள் என மிக்க புகழொடு அறியப்பெற்ற திருநாவுக்கரசர் அருளியது. இது தமிழ்நாட்டில் கி.பி. ஏழாம் நூற்றாண்டின் சமயச் சூழலை விளக்குவதாக உள்ளது. இப்பாடல் திருவாரூரில் உள்ள மூலவராகிய பெருமானின் புகழைக் கீழ்வருமாறு ஏத்துகின்றது:

எம்பெருமானின் திருவாரூர் வீதிகளில், அரிய மணிகளைப் பூண்ட பெரிய மார்பகங்களை உடைய வானவ மகளிரும், இறையருளைப் பாடுவாரும், உரிமையால் தொழுவோரும், உருத்திர பல்கணத்தாரும், விரிந்த சடை உடைய மகாவிரதிகளும் அந்தணர்களும், சைவர்களும், பாசுபதர்களும், காபாலிகளும் பொலியக் காண்க.

திருஞானசம்பந்தப் பெருமான் வருவது கேட்டுத் திருக்காளத்தி அடியவர்கள் அவரை வரவேற்கப் புறப்பட்டனர். அவர்களில் காபாலிகரும், சைவத்தின் பல பிரிவுகளைச் சார்ந்த பற்பல சைவரும் (காபாலக் கையர், பலவேடச் சைவர்) இருந்தனர்.[1]

மேற்குறித்த அப்பர் பெருமானின் பாட்டில் சைவத்தின் பல பிரிவைச் சார்ந்வர்களும் பட்டியலிடப்பட்டுள்ளனர். ‘உருத்திர பல்கணத்தார்’ எனக் கூறப் பெற்றோர் காளமுகராவர். இவ்வாறு இவர்களைச் சுட்டுவது கருத்து வேறுபாட்டுக்கு உரியதாக உள்ளது.[2] அப்பர் பெருமான் காளாமுகரையும் இவ்வெண்ணிக்கையில் சேர்த்துள்ளதாக நம்முடைய கருத்திற் கொள்ளுவோம். இச்சைவர்களைத் தவிர, பாரதம் எனப்பெறும்

இந்தியாவின் பல பகுதிகளில் உள்ள காஷ்மீர சைவம் போன்றவற்றைப் பின்பற்றுவோரும் தங்களின் தெளிவான பண்பாட்டுத்தொலைவுகளைப் பொருட்படுத்தாமல் ஒருங்கிணைந்து சைவத்தை வளர்ந்தனர். இத்தொடர்பில் நாம் நினைவில் கொள்ள வேண்டியது. சைவம் பல பிரிவுகளைக் கொண்டதாயினும் அஃது ஒரே சமயம் என்பதே. 'ஒன்றாய் முளைத்தெழுந்து எத்தனையோ கவடுவிட்டு'[3] என்பது மாணிக்கவாசகப் பெருமானின் கூற்றாகும். 'பல வழிகளில் பேசப்பட்டாலும் உண்மை ஒன்றே' என்று வேதம் கூறும் உறுதிப்பொருளின் விளக்கமே இதுவாம்.

கற்பவர், சைவத்தின் பல பிரிவு குறித்தும் ஓரளவு அறிவுடையராதல் வேண்டும். அப்பர் பெருமானின் நோக்கில் பல்வேறு சைவப் பிரிவினர் வருமாறு: 1. வழிபாட்டு உரிமை பெற்றவர் (ஆதிசைவர்) 2. மகா விரதிகள், 3. அந்தணர்கள், 4 சைவர்கள், 5. பாசுபதர்கள், 6. காபாலிகர்கள், 7. பைரவர்கள்.

### 1. ஆதி சைவர்கள்

இவர்கள் மட்டுமே, கருவறையில் நுழையவும் சிவன் அல்லது லிங்கத்தைத் தொடவும், சடங்குகளின்படி அதனைத் திருமுழுக்காட்டவும், அணிவிக்கவும், அதற்கு அர்ச்சனை செய்யவும் உரிமை உடையோர் ஆவர். இவர்கள் கோயிற் குருக்களாவர். தமிழ்நாட்டில் வேறு யாரும், பிராமணர்கள்கூட, இத்தகைய உரிமைகளைப் பெறவில்லை. இவ்வுரிமைபெற்ற சைவர்கள் ஆதிசைவர் எனப் பெயர் பெற்றனர். இவர்கள் மட்டுமே வழிபடு வோரின் சார்பாகச் சிவபெருமானுக்குச் செய்யப்படும் 'பரார்த்த பூசை'யினைச் செய்யமுடியும். இவர்கள் சைவ ஆகமங்கள் குறித்த விதிகளையும் நியதிகளையும் சரியாகக் கடைப்பிடிப்பர். எனவே அவர்கள் சிவபிராமணர் அல்லது சிவாச்சாரியர்கள் என அழைக்கப் பெற்றனர். சுந்தரமூர்த்தி நாயனாரே ஒரு சிவாச்சாரியர். அவர் 'முப்போதும் திருமேனி தீண்டுவார்க் கடியேன்"[4] (ஒரு நாளின் மூன்று பொழுதுகளின் சிவனது திருமேனியைத் தீண்டி அர்ச்சனை செய்வோர்க்கு யான் அடியவன்) என உறுதியுறக் கூறுவர்.

குறித்த ஒரு சிவன்கோயிலில் நிகழ்த்தப்பெற வேண்டிய சடங்குகள் அக்கோயிற்குரிய ஆகமவிதிகட்கு ஒத்தனவாக இருத்தல்

வேண்டும். எடுத்துக்காட்டாக தஞ்சாவூர்ப் பெரிய கோயிலுக்குரிய ஆகமம் மகுடாகமம் ஆகும். இவ்வாகமே பெரிய கோயிலின் சடங்குகளுக்கும், விழாக்களுக்கும் பிறவற்றிற்கும் வழிகாட்டுகின்றது. எல்லாப் பேராகமங்களும் ஏறத்தாழ சம மதிப்புடையன எனினும், குறிப்பிட்ட கோயிலின் சடங்குகளும் பிறவும், அக்கோயிலுக்குரிய விதிகளையும் நியதிகளையும் கடைப் பிடிக்கவேண்டும். எனவே சிவாச்சாரியர்கள் வேறுபட்ட பல் பிரிவுகளாக உள்ளனர். அவர் களின் ஒவ்வொரு பிரிவும், அது தேர்ந்துகொண்ட துறையில், அதற்குரிய ஆகமம் கற்பித்த வண்ணம் நன்கு பயிற்சி பெற்றதாக விளங்க வேண்டும். இவ்வாகமங்களின் படி, இந்த ஆதிசைவர்கள் மிகவுயர்ந்த நிலையைத் துய்ப்பவர்கள். இவர்கள் அனாதிசைவரான சிவனுக்கு மிகஅடுத்த் நிலையில் உள்ளவர்கள். ஆனால் இந்நாளைய ஆதி சைவர்கள் தமக்குரிய புகழையும் பெருமையையும் அறியாதவர்களாக இருத்தல் வருந்தத் தக்கது. இக்காலச் சமூகமும் இக்குற்றத்திற்குரியது. சிவாச்சாரியர்களுக்கு ஆகமம் அளித்த உயர்நிலை குறித்து உணராததாக இக்காலச் சமூகம் இருக்கிறது. எனினும், சிவபெருமானின் அர்ச்சகர்களாகத் தமக்குள்ள உயர் நிலையையும் மதிப்பையும் நிலைநிறுத்திக் கொண்டிருக்கும் தில்லைக் குருக்கண்மாரின் நீங்காத பெருமையைக் காணும்போது நம்பிக்கை ஊட்டுவதாக உள்ளது.

## 2. மகா விரதிகள்

**ம**கா விரதம் என்பதன் பொருள் 'பெரிய பிரமாணம்' என்ப தாகும். ஒரு மகா விரதி என்பவர் ஒரு பெரிய பிரமாணத்தைக் கடைப்பிடிப்பவராவர். உண்மையில் அவர் சிறப்புமிக்க இயற்கை யின் திரண்ட பல பிரமாணங்களைக் கடைப்பிடிப்பவர் ஆவார். மனிதரின் மண்டை ஓட்டில் அவர் உணவை உண்கிறார். சிவபெருமான் பிச்சையேற்பதைப் பெருமையாகக் கருதிக் கையில் மண்டை ஓட்டோடு பிச்சைக்குச் செல்கிறார். 'கை ஓர் கபாலத்தார்'[5] என்பது அப்பர் பெருமானின் வாக்காகும். மகாவிரதி என்பவர் பிச்சையேற்பதிலும் பிறவற்றிலும் சிவனையே பின்பற்றுகின்றார். மகாவிரதி சுடுகாட்டுச் சாம்பலைத் தன் உடலில் பூசிக்கொள் கிறார். திருஞானசம்பந்தர் சிவபெருமானைக் 'காடுடைய சுடலைப் பொடி பூசியவராகக்'[6] குறிப்பிடுகின்றார். அப்பரும், சிவனைக் குறித்துக் கூறுகையில், சுடுகாட்டுப் பிணமெரித்த சாம்பலைப்

பூசியிருகின்றார் என்கிறார். (சவம் தாங்கு மயானத்துச் சாம்பல்.... தரித்தான்).[7] எரிக்கப்பட்ட பிணங்களின் சாம்பல் மகாவிரதிகட்கு அழகிய அணிகலன் என்றும் அவர் கூறுகின்றார். (வெந்த நீறு அருங்கலம் விரதிகட்கு எல்லாம்).[8] மகாவிரதி மனிதத் தலைமயிரின் இழையைத் தன் புனித நூலின் புரியாக அணிந்திருப்பார். இது 'பஞ்சவடி' எனப்படும். அப்பர் பெருமான் இதனை 'மயிர்க்கயிறு'[9] எனக் கூறுவர். சேக்கிழாரின் பெரிய புராணத்தில் மகாவிரதியின் கோலம் கொண்ட சிவபெருமானின் வருணனை கீழ்வருமாறு இடம்பெறும்.

முண்டநிறை நெற்றியின் மேல் முண்டித்த திருமுடியில்
கொண்டசிகை முச்சியின்கண் கோத்தணிந்த எற்புமணி
பண்டொருவன் உடல் அங்கம் பரித்த நாள் அது கடைந்த
வெண்தரளம் எனக்காதின் மிசை அசையும் குண்டலமும்

அவ்வென்பின் ஒளிமணிகோத் தணிந்ததிருத் தாழ்வடமும்
பைவன்பேர் அரவொழியத் தோளிலிடும் பட்டிகையும்
மைவந்த நிறக்கேச வடப்பூணு நூலும்மனச்
செவ்வன்பர் பாவம்மாற்றும் திருநீற்றுப் பொக்கணமும்

ஒருமுன்கைத் தனிமணிகோத் தணிந்தஒளிர் சூத்திரமும்
அருமறைநூற் கோவணத்தின் மிசை அசையும் திருவுடையும்
இருநிலத்தின் மிசைதோய்ந்த எழுதரிய திருவடியும்
திருவடியில் திருப்பஞ்ச முத்திரையும் திகழ்ந்திலங்க

பொடிமூடு தழல்என்னத் திருமேனி தனிற்பொலிந்த
படிநீடு திருநீற்றின் பரப்பணிந்த பான்மையராய்க்
கொடிநீடு மறுகணைந்து தம்முடைய குளிர்கமலத்
தடிநீடும் மனத்தன்பர் தம்மனையின் அகம்புகுந்தார்[10]

### 3. பிராமணர்கள்

**பி**ராமணர்களுள்ளே சிவபெருமானையே தலைமைத் தெய்வமாக வழிபடுவோர் முன்பும் இருந்தனர்; இப்போதும் இருக்கின்றனர். சங்கர பகவத் பாதரே, ஏறத்தாழ எல்லா பிராமணரையும் ஸ்மார்த்தராக ஆக்கும் புரட்சியைக் கொண்டு வந்தவர். எனவே இவர்கள் பெருமைக்குரிய தம் ஆசாரியரின் புனித வழியைத் தொடர்ந்தனர். சைவம், வைணவம், சாக்தம்,

காணாபத்யம், கௌமாரம், சௌரம் என்ற ஆறு நெறிகளை நிறுவியர் அல்லது மாற்றியமைத்தவர் என்ற நிலையில் 'ஷண்மத ஸ்தாபகர்' எனச் சங்கரர் போற்றப்பட்டார். இந்த நம்பிக்கைகளில் எந்த ஒன்றைப் பின்பற்றுபவரும் முத்தியையே அடைகின்றனர் என்பது சங்கராச்சாரியார் கருத்தாகும். அவர் வருகைக்கு முன் சிவபெருமானுக்கே முற்றாகவும் முழுமையாகவும் பூரணமாகவும் பக்திபூண்ட பிராமணர்கள் இருந்தனர். சம்பந்தரின் பெற்றோரைக் குறித்துச் சேக்கிழார் கூறுகையில் அவர்களின் குடிமரபுகள் சைவநெறிக்கே ஆட்பட்டிருந்தன என்று கூறுகின்றார். 'மரபு இரண்டும் சைவ நெறி வழிவந்த கேண்மையினார்' என்பது சேக்கிழாரின் வாக்காகும். அரவணிந்த சடைமுடியை உடைய பெருமானின் இரண்டு திருவடிகளைத் தவிர மற்றன அறியாதவர்கள் அவர்கள். (அரவணிந்த சடைமுடியார் அடியலால் அறியார்.[12] அவர்கள் திருநீற்றுக்கு அன்பு பூண்டவர்கள் (திருநீற்று அன்பு பாலிக்கும்).[13]

அப்பைய தீட்சிதர், நீலகண்ட தீட்சிதர் அவர்களின் வழிமுறையினர். ஹரதத்தரின் குடியில் வந்தோர் ஆகிய பிராமணர்கள் யாவரும் சிவனையே தலைமைத் தெய்வமாக வழிபட்டாரன்றிப் பிறவற்றை வழிபட்டாரிலர்.

## 4. சைவர்கள்

**த**ருமபுர ஆதினத்தின் ஏழாவது சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ திருவம்பல தேசிகர் இயற்றிய வர்ணாசிரம சந்திரிகை என்னும் நூலில் ஏழுவகையான சைவர்கள்குறிக்கப் பெறுகின்றனர். அவர்கள் 1. அநாதி சைவர், 2. ஆதி சைவர், 3. மகா சைவர், 4.அணு சைவர், 5. அவாந்தர சைவர், 6. ப்ரவர சைவர், 7. அந்திய சைவர் என்போராவர். அநாதி சைவரென்பவர் சிவபெருமானே என நாம் அறிவோம். ஆதி சைவர் என்பவர் சிவாச்சாரியர்கள். மகா சைவர் என்பவர் சிவபெருமானுக்கே தம்மை அர்ப்பணித்துக்கொண்ட மகா பிராமணர்கள். அணு சைவர் என்பவர் சிவபெருமானே தலைமைத் தெய்வம் எனக் கொண்ட சத்திரியர் அல்லது வைசியராவர். அவாந்தர சைவர் என்பார் சிவனையே வணங்கும் சூத்திரராவர். இளையான் குடிமாற நாயனாரும் வாயிலார் நாயனாரும் அவாந்தர சைவராவர்.[14] ப்ரவார சைவர் என்பவர்

ஒரு கலப்பான பிறப்புடையவர். மற்ற சைவரெல்லாரும் அந்திய சைவராவர். இவர்களில் முதலிற் குறிப்பிட்ட நால்வரும் இரு பிறப்பாளராவர். சூத்திரரும் தீட்சை பெற்ற நிலையில் இரு பிறப்பாளராக ஆகிறார்.

பிறப்பால் சைவரான ஒருவர் தீட்சை பெற்ற பின்னரே உண்மைச் சைவராகிறார். தீட்சையினால் அவர் சாதி, வளர்ப்பு எனும் எல்லைகளைக் கடக்கிறார். நெருப்பிடும்போது அவ்வெரிபொருள் மரம் என்ற தன் பெயரை இழப்பதைப் போலத் தீட்சையில் சாதி வேறுபாடுகள் எரிக்கப்பட்டு விடுகின்றன.

எல்லாச் சைவர்களும் சைவசித்தாந்திகள் ஆவர். இத் தொடர்பில் டேவிட் லொரென்சன் அவர்களின் கருத்துக்கள் நோக்குதற்குரியன. அவர் "சைவர் என்ற சொல்லும் சைவா என்ற சொல்லும் வேறுபடக் காணப்படுகின்றன; முன்னது சிவனையே குறித்து வழிபடும் எவர்க்கும் பொருந்துவது; பின்னது சைவ சித்தாந்தத்தைப் பின்பற்றுவோர்க்கு உரியது' என்கிறார்.[15]

## 5. பாசுபதர்கள்

**கா**பாலிகம், மகாவிரதம், காளாமுகம் ஆகியவற்றின் தத்துவக் கோட்பாடுகள் பற்றி நாம் சிறிது அறிவோம். ஆனால் பாசுபதத்தைப் பொறுத்தவரை அந்நிலை இல்லை. பாசுபத சூத்திரங்களிலிருந்தும், அவற்றுக்கான கௌண்டினியரின் உரையி லிருந்தும் நாம் சில முக்கியமான உண்மைகளை அது குறித்துத் தெரிந்து கொள்ளலாம். இந்நெறி சிவபெருமான் நகுலீசராக அவதரித்தாகவும் பாசுபத சூத்திரங்களை அருளியதாகவும் கூறுகின்றது. உரையாசிரிரான கௌண்டின்யர் நான்கு, ஆறாம் நூற்றாண்டுகளுக்கு இடையே தோன்றியவராதல் கூடும். சுரேந்திரநாத் தாஸ் குப்தா, இதன் சூத்திரங்களிலிருந்தோ, உரையிலிருந்தோ தத்துவம் சார்ந்ததாக மிகுந்த செய்திகளைத் திரட்ட முடியாது என்று கருதுகின்றார்.[16] இவை சடங்குகள் அல்லது வாழ்க்கை முறைகளைக் குறிக்கின்றன. இவ்விடத்தில் நையாயிகர் பாசுபதரோடு கடவுள் நம்பிக்கையில் ஒத்துச் செல்வதைக் கருதவேண்டும். இவ்விரண்டு அமைப்புகளுக்கும் இடையே உள்ள வேறுபாட்டைக் கீழ்வருமாறு சுருக்கமாகக் கூறலாம். பாசுபதம் சடங்குகளை வற்புறுத்துகின்றது. நையாயிகம்

இதனின்றும் வேறுபட்டு, அமைப்பைக் குறித்து தருக்க அறிமுகத்தில் கவனம் செலுத்துகின்றது.

பாசுபத சமயத்தின் விவாதத்திற்குரிய ஐந்து அம்சப் பொருண்மைகள் காரியம் (விளைவு), கருமம் (காரணம்), யோகம் (தியானம்), விதி (நடத்தை/ஒழுக்கம்), துக்கந்தம் (துயரநீக்கம்) ஆகியவற்றை உள்ளடக்கியது. இச்சிந்தனைப்பள்ளி, வீடுபேறு சிவனருளால் வருவதெனக் கருதுகின்றது. 'பசு' என்னும் சொல் உயிருள்ளன எல்லாவற்றையும் உள்ளடக்கியது. எனினும், துறவிகளையும் உயர்பேற்றுக்குரியவர்களையும், பசு என்ற சொல்லால் குறிப்பதில்லை. பசுவின் வலிவின்மையே அதன் தளை உண்டானமைக்குக் காரணமாகும். காரணம் காரியம் எனப் பொருள்படும் பாசத்துடன் பசு பிணைக்கப்பட்டிருக்கிறது. கௌண்டின்யர் கருத்துப்படி, மீட்சி என்பது ஞானம், வைராக்யம், தர்மம், ஐசுவர்ய தியாகம் ஆகியவற்றால் அடையப் பெறவில்லை; சிவனருளால் அடையப்பெறுகின்றது.

## 6. காபாலிகர்கள்

**கா**பாலிக சமயத்தின் முழுநிலை விளக்கம் கிடைப்பதாக இல்லை. காபாலிக நெறியின் அடிப்படை இறைவனுக்குரிய பக்தியாகும். இந்த பக்தி உலகியல் வழிகளை முற்ற அறியாமையால் வளர்க்கப்படுகிறது. காபாலிகரின் பக்தி, தமக்குரிய கடவுளின் மீது தமக்குரிய அன்பினை ஆதாரமாகக் கொண்டது. இங்குத் தமக்குரிய கடவுளாக அவர்க்குச் சிவபெருமான் விளங்கி நின்றார். காபாலிகரின் சமயச் சடங்குகள் அவர் தேர்ந்தெடுத்துக்கொண்ட கடவுளோடு அவர் ஒன்றுபடுதலை வளர்க்க உதவுகின்றன. வழிபடுகின்றவர் காலப்போக்கில் சித்திகளைப் பெறுகின்றார்; இறுதியில் மறுபிறப்பிலிருந்து விடுபடுகிறார். முடிந்த நிலையில் இன்பப் புணர்ச்சியின் ஈறற்ற துறக்க நிலையில் அவர் வதிகிறார்.

காபாலிகர் ஒரு தாந்திரிக உட்பிரிவை உருவாக்கியுள்ளனர். அவர்களின் வாழ்க்கை நெறி ஓர் ஐந்து மகரங்களைக் காட்டுவதாக உள்ளது[17] பஞ்சகமரம், பஞ்சத்திரவியம், பஞ்சதத்துவம் என்பன தாந்திரிக மூலநூலில் காணப்படும் ஒரு பொருட் பலசொற்கள் பஞ்ச மகரங்களானவன: மது, மாமிசம், மச்சம் (மீன்), மைதுனம் (உடற் புணர்ச்சி), முத்திரை (தானியம்) என்பன.

குலார்னவ தந்திரத்தின் பாடல்கள் 79-80 கூறுவதாவது; "மது (சுரா) என்பது சக்தி; இறைச்சி சிவம்; இவற்றைத் துய்ப்பவர் பைரவரேயாம்." மகாநிர்வாண தந்திரத்தின்படி, மது என்பது திரவ வடிவிலுள்ள தாராதேவியேயாவள். அவள் உயிர்களைக் காப்பவள்; இன்ப அனுபவம் மற்றும் விடுதலைப்பேற்றின் தாயாவள். லொரென்சன் கூற்றுப்படி, காபாலிக உன்மத்த பைரவர் உறுதிபடக் கூறுவதாவது; பாற்புணர்ச்சியின் வழி வெளிப்படும் இன்பம் என்பது பைரவரின் உண்மை வடிவமாகும். அவ்வின்பத்தை இறப்பில் எய்துவதே மோட்சமாகும். இது முடிவான உண்மையாகும்.[18]

தமிழ்நாட்டிலும் காபாலிகர் நன்கு வாழ்ந்தனர். மைலாப்பூரில் உள்ள கோயில் காபாலீச்சரம் என அறியப்பெறும். தேவார மூவர் சிவனைக் காபாலி என ஏத்துகின்றனர். அன்பிலாலந் துறைப் பனுவலில் சிவன் 'காபாலியர்' எனக் குறிக்கப் பெறுகின்றான். திருத்துருத்தி, திருவேள்விக்குடிப்பதிகத்தில், 'வளங்கிளர் மதியமும்' எனத் தொடங்கும் பாட்டில் சம்பந்தப் பெருமானால் சிவன் 'காபாலியார்' எனக் குறிக்கப் பெறுகின்றான். வலம்புரம் பதிகத்தில் சுந்தரர் சிவனைக் 'காபாலி' எனப் போற்றுகின்றார்.

## 7. காளாமுகர்கள்

**கா**ளாமுகம் என்பதற்குக் 'கருப்புமுகம்' என்பது பொருள். தி.அ.கோபிநாதராவ் தம்முடைய 'இந்து உரு வரைவியலின் தனிக்கூறுகள்' (*Elements of Hindu Iconography*) என்னும் நூலில் (பகுதி 2: 25) இக்காளாமுகப் பிரிவினர் தம் நெற்றியில் கரிய கோடுகளைத் தீற்றிக் கொள்ளும் வழக்கத்தைக் கைக்கொண்டிருக்கலாம் என்று கூறுகின்றார். இப்பிரிவினர் கருநாடகத்தில் தமக்கிசைந்த சூழலைப் பெற்றிருந்தனர். இச்சூழல் அவர்களை 'சக்தி பரிஷத்' என்ற ஒரு கூட்டமாக ஆகியது. பதினெட்டு சக்தி பரிஷத் கோயில்களில் ஏறத்தாழ அறுபத்தைந்து கலவெட்டுக்கள் கண்டுபிடிக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளதாக லொரென்சன் கூறுகின்றார்.

க.த.திருநாவுக்கரசு தம் 'முதலாம் இராசராசன்' என்ற நூலில் "வட இந்தியச் சைவ உட்பிரிவுகளான காபாலிகம், பாசுபதம், காளாமுகம் என்பவற்றைத் தழுவிய துறவிகளும் அக்காலத்தில் தமிழ் நாட்டில் வாழ்ந்தனர்" என்கிறார். அவர்கள் பொதுவாகச்

சிவயோகிகள் எனக் குறிக்கப்பெறுகின்றனர். சைவர்களுக்கிடையில், காளாமுகப் பிரிவினர் சிறந்த செல்வாக்கைக் கொண்டிருந்தனர். காளாமுக யோகியரில் சிலர், சிவன் கோயில்களுக்கு அளிக்கப்பெற்ற நிவந்தங்களை நிருவகித்தனர்.[19]

திருநாவுக்கரசு கீழ்வரும் உண்மை நிகழ்வுகளையும் குறிக்கின்றார். பராந்தக சோழனின் ஆட்சிக்காலத்தில், விக்கிரம கேசரி எனப் பெயர்பெற்ற கொடும்பாளூர் இளவரசன், தன் தலைநகரில் மூவர் கோயிலைச் சமைத்தான். பின்னர் அவன் ஒரு மடத்தையும் நிறுவினான். கொடும்பாளூர் வேளார், வட இந்திய ஆத்திரேய கோத்திரத்தைச் சார்ந்த குருவான வித்தியாராசியை மடத்துத் தலைவராகப் பணியமர்த்தினார். வித்தியாராசி வேதங்களில் வல்லவர். அவர் ஒரு தீவிரக் காளாமுகர்.[20] அவரைப் பின்பற்றியோர் முதலாம் இராசராசன் ஆட்சிக் காலத்தில் தமிழ் நாட்டின் பல பகுதிகளில் நன்கு வாழ்ந்தனர்.[21]

வைணவ ஆச்சாரியரான இராமானுஜரின் கூற்றுப்படி, காளாமுகர்கள், மகாவிரததாரிகள் எனவும் அழைக்கப் பெற்றனர். அவர்களின் நெறிகள், மகாவிரதிகளின் நெறிகளை ஒத்தனவாக இருந்திருக்கலாம். 'பன்னிரண்டாம் நூற்றாண்டின் மைசூரில் அமைந்த பல்கலைக்கழகம்' என்ற கட்டுரையில் அதன் ஆசிரியர் ஏ.வி. சுப்பையா காளாமுகர் காஷ்மீரிலிருந்து வந்ததாகக் குறிக்கின்றார். கி.பி. 1147 ஆண்டின் கல்வெட்டொன்று இக்கருத்திற்கு ஆதரவாக உள்ளது.[22] பி.எல்.ரைஸ் என்பவரால் திரட்டப்பெற்ற கல்வெட்டுக்கள் பலப்பல, கருநாடகக் கல்வெட்டுத் தொகுதியுள் சேர்க்கப்பட்டுள்ளன. கொடும்பாளூரின் சமஸ்கிருதக் கல்வெட்டொன்று, தமிழ்நாட்டில் காளாமுகச் சமயம் நிலவியதை உறுதி செய்யும் ஆவணமாக உள்ளது.[23]

வீரசைவர்களுக்கும் காளாமுகர்களுக்கும் இடையேயான தொடர்பு மறுக்கமுடியாதது. முறையாக அமைக்கப்பெற்ற மடங்களை நிறுவுதலும் இலிங்க வழிபாட்டைப் பரப்புதலும் இவ்விரு வழிபாட்டு மரபுகளின் தனித்தன்மையைக் காட்டுகின்றன. பசவருக்கு முற்பட்ட காலத்தில் இவ்விரு பிரிவுகட்கும் இடையேயான இணைப்பு வலிமைமிக்கதாக இருந்தது.

பின்னாளைய காளாமுகர் வேதத்திற்கு மாறானவரே அல்லர். அவர்கள் வேதத்தை மிகுந்த அக்கறையோடு வளர்த்தனர். அவர் களின் முன்னைய கடும் நடைமுறைகளும் காலப்போக்கில் மென்மையுற்றன.

சகிப்புத்தன்மையைக் கொண்டாடிய பண்டைக் காலத் தமிழகம் பல சைவப் பிரிவுகட்கும் தாயகமாகத் திகழ்ந்தது.

**குறிப்புகள்**

1. பெரியபுராணம்: திருஞானசம்பந்த நாயனார் புராணம், பாடல் 1018, சமாஜப் பதிப்பு, 1950.
2. நான்காம் திருமுறை பாடல் 200, மூன்றாம் பக்க அடிக் குறிப்பு, தருமபுர ஆதீனம், 1957.
3. திருவாசகம், திருக்கோத்தும்பி, பாடல் 8.
4. திருத்தொண்டத்தொகை, ஏழாம் திருமுறை, பாடல் 10.
5. ஆறாம் திருமுறை, ஒன்பதாம் பதிகம், பாடல் 7.
6. முதல் திருமுறை, முதற் பதிகம், பாடல் 1.
7. ஆறாம் திருமுறை, 50ஆம் பதிகம், பாடல் 2.
8. நான்காம் திருமுறை, நமசிவாயப் பதிகம், பாடல் 5.
9. ஆறாம் திருமுறை, ஐம்பதாம் பதிகம், பாடல் 2.
10. சேக்கிழாரின் பெரியபுராணத்தில் மானக்கஞ்சாற நாயனார் புராணத்தின் 22 முதல் 25ஆம் பாடல்கள். மொழிபெயர்ப்பு தி.நா. இராமச்சந்திரன், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1990.
11. திருஞானசம்பந்த நாயனார் புராணம், பாடல் 17.
12. மேலது.
13. மேலது.
14. தி.நா. இராமச்சந்திரன், (மொழிபெயர்ப்பு), சேக்கிழார் பெருமானின் பெரியபுராணம், தமிழ்ப் பல்கலைக்கழகம், பக்: ixxii, ixxiii.

15. David N. Lorenzen, Kapalikas and Kalamukhas, University of California Press, Indian Edition, New Delhi, 1972.

16. Surendranath Dasgupta, A History of Indian Philosophy - Vol. V, Motilal Banarsidass, New Delhi, 1975.

17. Lorenzen, p. 89.

18. Ibid, p.91.

19. க.த. திருநாவுக்கரசு, முதலாம் இராசராச சோழன், தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், 1975, பக்: 259-260)

20. மேலது.

21. மேலது.

22. Surendranath Dasupta, A History of Indian Philosophy - Vol. V, Motilal Banarsidass, New Delhi, p. 108.

23. The Kodumbaloor Inscriptions of Vikramakesari JORM, VII, 1-10, Edited by K.A.N. Sastri.

2

# சைவ சித்தாந்தம்

**சைவ** சித்தாந்தம் என்பது தமிழ்நாட்டின் சைவ நெறியாகும். சைவ ஆகமங்களும் திராவிட வேதங்களும் அவற்றிற் குறிப்பாகத் தேவாரமும் திருவாசகமும் விளக்குகின்றவாறு சமஸ்கிருத வேதங்கள் சைவசித்தாந்தத்தின் அடிப்படையாகும். திருமூலர் அவரது திருமந்திரத்தில் அதனை ஒரு பொது நெறியில் முறைமைப் படுத்தியுள்ளார். சைவ சித்தாந்தத்தை விளக்கியுரைக்கும் சாத்திரங்கள் பதினான்காகும். இவை எல்லாம் 'மெய்கண்ட சாத்திரங்கள்' எனப்படுகின்றன. இவை எல்லாம் தமிழில் உள்ளன. இன்று சைவசித்தாந்தம் தமிழ்ச் சைவநெறி எனப் போற்றப் பெறுவதில் வியப்பில்லை. இந்நூல்களின் முடிமணியாகத் திகழ்வது சிவஞான போதமாகும்.[1] இந்நூலின் ஆசிரியர் மெய் கண்டார் ஆவர். இது வடமொழிச் சிவஞானபோதத்தின் மொழிபெயர்ப்பாகலாம். பலர் இதனை வடமொழி நூலினது மொழிபெயர்ப்பு என்று கருதுகின்றனர். ம. பாலசுப்பிரமணிய முதலியார், "இவ்வினாவுக்குரிய விடை எல்லாப் பகுதியினரும் ஒத்துக் கொள்ளுமாறு இனிதே காணப்பெற வேண்டும்"[2] என்று கூறுவதால் மொழி சார்ந்த இச்சிக்கல் தீர்க்கப்படவில்லை எனலாம். எவ்வாறாயினும் மெய்கண்டார் என ஒருவர் இருந்திருப்பின் அவர் மொழி பெயர்ப்பாளருக்கு மேலானவர் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். அவருடைய வகைப்பாடும் கருத்துரைகளும் முழுமையாக அசலானவையாகும். அவருடைய இந்நூல் மொழி பெயர்ப்பாயின், இந்த மொழிபெயர்ப்பு மூலத்திலும் சிறப்புமிக்க, தலைசிறந்த படைப்பாகும் என்பது போலக் கூறவேண்டும்.[3] தமிழ்ச் சிவஞானபோதம், அதன் சொற்சுருக்கத்திற்கும் தெளிவிற்குமாகத் தயக்கமின்றிப் போற்றப்பெற்றது. அவரது, பொருளை ஆளுமுறை முற்றிலும் நிறைவுடையது. தெளிவும் தருக்கமும் அவருடைய வலிமைக் கூறுகளாகும்.

சைவசித்தாந்தம் என்பது யாது? ஏன் அது முடிவுகளின் முடிவு எனக் கூறப்பெறுகின்றது? பல்வேறு சமயங்களும் ஏணியின் படிகளைப் போன்றிருக்க, அப்படிகள் இல்லையெனில் அவ்வேணி பயனற்றது என்ற போதும், இச் சைவசித்தாந்தம் ஏன் தருக்க அறிவாராய்ச்சியின் முடிநிலையாக, மெய்ப்பிக்கப் பெற்று இறுதியாக ஏற்கப்பெற்ற அமைப்பாகப் போற்றப்பெறுகின்றது?[4] ஏன் அஃது ஒட்டுமொத்தமான ஆன்மீகச் சிந்தனையாகக் கருதப் பெறுகின்றது? இவற்றுக்குரிய காரணங்களை அடைவதற்கு அவை தொலைவில் இல்லை.

சுத்த மாயை என்பது களம். அவ்விடத்திலிருந்து வேதங்களாகிய மரங்கள் வளர்கின்றன. இம்மரங்கள் பசுமையும் முதிர்வும் மிக்க இலைகள், கிளைகள், மொட்டுக்கள், மலர்கள் மறறும் கனிகளை இயற்கையாகப் பெற்றிருக்கின்றன. வேதங்களில், தனிப்பட்ட நலனுக்குரிய வேள்விகளும், தன்னலத்திற்குரிய கருமங்களும், மாயாவித்தை மந்திரங்களும் பிறவும் வரையறுத்து உரைக்கப் பெற்றுள்ளன. உண்மையில், ஆன்மாக்களின் படிநிலை மேலேற்றத்திற்கு இவை செயலாற்ற இணக்கம் காட்டுகின்றன. பரிணாமப் பெருவழியில் அப்போதே அடியெடுத்து வைத்திருக்கும் ஆன்மாக்கள் தம் சொந்த நலன்களுக்காக ஏங்குகின்றன. அந்த நலன்களை எய்துவதற்கு இவை கருமகாண்டத்தை நோக்குகின்றன. கருமகாண்டத்தில் உள்ளவை வேதமரத்தின் இலைகளும் கிளைகளும் மொட்டுக்களும் மலர்களும் போன்றவை. வேதத்தின் சிகரம் வேதாந்தமாகும். இஃது ஞானகாண்டம் என்றும் கூறப்படும். வேதமரத்தின் பெருங்கிளைகளில் அணிசெய்யும் பழுத்த நறுஞ் சுவைமிக்க கனிகளே வேதாந்தமாக அமைகின்றன. உண்மையில் இக்கனிகளின் சாறே சைவ சித்தாந்தமாகும். இவ்வாறு குமரகுருபர சுவாமிகள் உரைக்கின்றார்.[5]

பழைய வெண்பா ஒன்று வேதங்கள் பசு; ஆகமங்கள் அதன் பால்; அப்பாலிலிருந்து கடைந்தெடுக்கப்பட்ட நெய்யே திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்னும் நால்வரின் பாடல்கள்; அந்நெய்யின் இன்சுவை சிவஞான போதம் என்று கூறுகின்றது.

சைவசித்தாந்த தத்துவம், மெய்ப்பொருள் என்பன சிவம், ஞானம், போதம் என்ற மூன்று சொற்களில் அடங்குகின்றன. சிவம் என்பது விஞ்ஞானத்தின் முடிவு, தத்துவத்தின் எல்லை, மெய்ப்பொருளின் முழுமையுமாகும். ஞானம் என்பது மறைகளால் அடையப்பெறும் அறிவு; அது சிவத்தை நோக்கி இட்டுச் செல்வதாகும். போதம் என்பது அவ்வறிவை உணர்வதும் அனுபவிப்பதுமாகும். வெறும் நம்பிக்கை போதமாகாது. அஃது உணர்வு ஆவது. மறைக்கப்பெறாத பேரொளிப் பிறக்கம். மாசற்ற அறிவொளி; கலப்பும் முடிவுமற்ற விவரிக்க இயலாத பேரின்பம். பரிணாம உருவரைவில் ஒவ்வொரு சமயத்திற்கும் இடமுண்டு என்ற தடத்தில் சைவசித்தாந்தம் உள்செல்கின்றது. ஒவ்வொன்றும் ஏணியின் ஒரு படி; ஒவ்வொன்றும் தேவையானது; அந்நிலையில் வாழ்க்கை உண்மையிலிருந்து பேருண்மையை நோக்கிய வளர்ச்சியாகும். தாகரே என்பார் கூறுமாறு: "வாழ்க்கை என்பது ஆன்மாவின் நாற்றங்கால்; நிலைத்த பேற்றின் இறுதி முடிவு களுக்கான பலியிடம்."

சைவசித்தாந்தத்தைப் புரிந்துகொள்வதற்குப் பேருதவியாக இருக்கக்கூடியது சமஸ்கிருதத்தில் நல்ல அடித்தள அறிவைப் பெற்றிருப்பதாகும். சைவசித்தாந்தம் குறித்த ஆங்கில ஆக்கப் படைப்புகளும் உள்ள காலத்தில் வாழும் நற்பேறு பெற்றமையால் ஆங்கிலத்தில் தேர்ச்சி பெற்றவரும் அதனைக் கற்கமுடியும்.[6]

சைவசித்தாந்தத்தின் உள்ளுறை சாரம் திருமந்திரச் செய்யு ளொன்றில் கீழ்க்காணுமாறு வடித்துத் தரப்பட்டுள்ளது.[7]

பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போற்பசு பாசம் அனாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாசம் நிலாவே

பதி (சிவபெருமான்), பசு (உயிர்), பாசம் (பிணிக்கும் கயிறு/ விலங்கு) என்ற மூன்றும் படைக்கப்பெறாத நிலைத்த வகையின. அவை என்றும் இல்லாமல் போவதில்லை. பசு, பதியோடு ஒன்றுமானால் பாசம் செயலற்றதாய் இருக்கிறது. இதன் பொருள், விடுபட்ட ஆன்மாவைப் பொறுத்தவரை, அதன் மீது பாசம் கொண்டிருந்த ஆட்சி/ஆதிக்கம், பிடிப்பு முற்றிலும்

செயலற்றதாகிறது என்பதாகும். பதி, பசுவைப் போலப் பாசமும் அழிக்க முடியாதது.

பாசம் அசத்து; பதி சத்து; பசு சத்அசத். பசுவிற்குச் சுதந்திரமான நிலை இல்லை. அது சார்ந்ததன் வண்ணம். அது பாசத்தைச் சார்ந்திருப்பின் அது பின்னதன் ஆட்சியின்கீழ் இருக்கும். அது கடவுளைச் சார்ந்திருக்குமாயின் அது தெய்வீக மேம்பாட்டை அடையும். பாசம் என்பது மீட்சிக்குரிய பொருளன்று. பதி மீட்சியை அளிப்பது. பாசத்தால் தளையிடப்பட்ட பசுவே மீட்சியை வேண்டி நிற்பது. வீடுபேறு உற்றபின் பசு, பதிநிலை எய்தினாலும் பதியாவதில்லை. உயிர் எப்போதும் இறைவனாகாது. 'அகம் பிரம்மாஸ்மி' (நான் கடவுளாக இருக்கிறேன்' என்பது சைவ சித்தாந்தத்தில் மிகக் கொடிய பழிப்புரையாகும். லூசிபர் சைத்தான் ஆகிறான். ஏனெனில் அவன் பராபரனோடு தான் சமமாகிவிட்டதாக நம்பினான்.[8]

இறைவன் சத் (உண்மை), சத் சித்துமாம் (மறைஞானம்/ மெய்யுணர்வு/தூய அறிவு). சித் ஆனந்தம் (முடிவிலாப் பேரின்பம்). எனவே இறைவன் சத்-சித்-ஆனந்தமாம். இதுவே அவரது சொரூப இலட்சணம் (இயற்பண்பு) அவருடைய தடத்த இலட்சணத்தில் (வெளிப்பட்டநிலை) இறைவன் அவருடைய படைப்போடு ஓர் அத்வைதத் தொடர்பில் இருக்கின்றார். இவ்வுறவு, அபேதம் (வேறுபாடின்மை),பேதம் (வேறுபடல்), பேதாஅபேதம் (வேறுபடலும் வேறுபடாமையும் இணைந்தது) என்ற மூன்றின் தொகுப்பாகும். இவை மூன்றும் தமிழில் ஒன்றாய், வேறாய், உடனாய் எனக் குறிக்கப் பெறுகின்றன.

உண்மையாகக் கூறுமிடத்துக் கடவுள் பெயருக்கும் வடிவுக்கும் அப்பாற்பட்டவராக உள்ளார். எனினும் அவரைப் பெயர்களாலும் வடிவங்களாலும் போற்ற நாம் அனுமதிக்கப்பட்டுள்ளோம். மாணிக்கவாசகப் பெருமான்,

ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமில்லாற்கு ஆயிரம்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ[9]

என்று கூறுகின்றார்.

ஜான் மில்டனின் படைப்புக்கள் சைவசித்தாந்தத்தை எதிரொலிக்கின்றன என்று கூறுவது விந்தையான தெனினும் உண்மையானது. கிறித்துவக் கோட்பாடு என்னும் அவர் படைப்பில் மில்டன் என்னும் மகாமுனிவர், "நமக்குப் பாதுகாப்பான வழி இறைவனை, புனித எழுத்துக்களில் அவன் தன்னைக் காட்டிக் கொள்ளுமாறும் அறிகுறியாகப் புலப்படுமாறும் அமைவதற்குத் தக நாம் நம் உள்ளங்களில் உருவப்படுத்திக் கொள்ளுதலாகும். சொற் சார்ந்ததும், உருவம் சார்ந்ததும் என இரண்டு வகை விளக்கங்களாலும் கடவுள் காட்டப்பெறும்போது, உண்மையில் கடவுள் உள்ளவாறு காட்டப்பெறவில்லை. நம்முடைய அறிவெல்லை உணர்வதற்குரிய வகையில் காட்டப்பெறுகின்றார். இறைவனைக் குறித்த இக்கருத்தை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். ஏனெனில், நம்முடைய தகுதிகளுக்குத் தகுந்தாற்போல அவர் தம்மை இணக்கிக் கொள்ளும் அருளுடையவராதல், நாம் அவ்வாறு அவரைக் கருதிக்கொள்ள வேண்டுமென அவர் எண்ணுகிறார் என்பதைக் காட்டுகின்றது. இக்கருத்தின் அடிப்படையிலேயே இறைவன் நம் நிலைக்குத் தம்மைத் தாழ்த்திக் கொண்டிருக்கின்றார். இல்லையெனில் மனிதர்களின் புரிந்து கொள்ளும் தன்மைக்கு மேலானதாகவும், வேத வாசகங்களின் அப்பாற்பட்டதாகவும் உள்ள நம் கற்பனையில், நாம் தெளிவில்லாத சிந்தனைகளிலும், நுணுக்கங்களிலும் இறங்குமாறு தூண்டப்படுவோம்.

எனவே பதி என்பது முக்கண் பெற்றதாகப் போற்றப் பெறு கின்றது; ஒரு துணை அவரோடு பாகமாக்கப்பட்டிருக்கின்றது. அவரது குரல்வளை நீலக்கறையுடையதாக உள்ளது.

சைவசித்தாந்தத்தின்படி இறைவனுக்கு மூன்று உருவங்கள் உள்ளன. அவர் உருவத்தோடும், உருவமின்றியும், உருவ அருவமாக வும் உள்ளார். அவருடைய வடிவம் மனிதர்களால் புரிந்து கொள்வதற்கு அப்பாற்பட்டதாக உள்ளது. எனவே உமாபதி சிவாச்சாரியார், "அவர் உருவமில்லாதவர். அதே சமயம் ஓர் உருவுடையவர், ஓர் உருவமற்ற உருவுடையவரும் ஆவர்; இவற்றில் எதுவும் இல்லாதவருமாவர்" என்கிறார்.[10] உருவமில்லா உருவம் என்ற கருத்து தமிழ்ச் சைவநெறிக்கே உரியதாகும். சிவலிங்கம் அவரது உருவமற்ற உருவத்தைக் குறியீடாக உணர்த்துகின்றது. சேக்கிழார் பெருமான்,

காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்
நீள்நாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்[11]

என்று கூறுகின்றார். கடவுள் எண்ணுக்கும் அளவுக்கும் அப்பாற் பட்டவர். எனவே அவர் மேற்கொள்ளும் உருவங்களைப் பற்றிக் கூற ஒண்ணாது. ஆனால் அவர் உரு எதுவாயினும் அது பிணிக்கப்பட்ட உயிரின் விடுதலைக்கேயாம். இந்த மூன்று உருவங்கள், நம் உயிர்கள் துன்புறுகின்ற மறுபிறப்புச் சுழற்சியிலிருந்து நம்மை விடுவிக்க அமைந்தன என்று சிவஞான சித்தியார் கூறும்.[12]

சிவபெருமானுக்கு மிக விருப்பமான அம்மையப்பர் உருவம் (அர்த்தநாரீச்சுரர்) நம்மால் கருதப்பெறுவதற்குரியது. இவ்வடிவம் விலக்கிப் பார்க்க முடியாததும் பிரிக்கமுடியாததுமான இறைவனை யும் அவன் துணைவியையும் குறிக்கின்றது. தெய்வீகம் கருணையை உரிமையால் மணந்ததன் உண்மைக் காட்சியிது. இறைவனின் சூட்சுமம் மிக்க இவ்வடிவம் நினைவுக்கெட்டாத் தொன்மைக் காலம் தொட்டு வருவது.[13] பிரிக்கமுடியாத துணையொடும் கூடிய பெருமானின் இந்நிலை குறித்து உமாபதி முனிவர்.[14]

தன் நிலைமை மன்னுயிர்கள் சாரத் தரும்சத்தி
பின்னமிலான் எங்கள் பிரான்

என இவ்வாறு உறுதியுறக் கூறுவர். சக்தி ஒன்றே. சிவம், சக்தி, சதாசிவம், மகேச்சுவரம், சுத்தவித்தை எனச் சிவ தத்துவங்கள் ஐந்து. சிவம் எல்லா அறிவுமாம். சக்தி எல்லாச் செயலுமாம். சதாசிவம் அறிவும் செயலும் சமநிலையிலாம். மகேச்சுரம் செயல் ஆதிக்கமுற்ற அறிவாம், சுத்தவித்தை அறிவாதிக்கமுற்ற செயலாம்.

வித்யா தத்துவங்கள் ஏழு. அவை 1. காலம், 2. நியதி (சட்டம்/ விதி), 3. கலை (சமஸ்கிருதத்தில் கலா: சக்தியை அறிதல்), 4. அராகம் (விரும்பும் கொள்கை), 5 வித்தை (அறிவு), 6. புருஷன் (காலம், நியதி, கலை, அராகம், வித்தை எனப்பட்ட ஐந்தும் வாய்க்கப்பெற்ற உயிர்), 7. மாயை (பிரபஞ்சப் படைப்பிற்கான மூலப் பொருள்).

ஆன்ம தத்துவங்கள் இருபத்து நான்கு, அவையாவன நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் ஐந்து முதற்பொருள்கள், சப்தம்,

(ஒலி) ஸ்பரிஸம் (தொடு உணர்வு), ரூபம் (வடிவம்), ரசம் (சுவை) கந்தம் (மணம்) என்னும் நுண்பொருள்கள், அறிகருவிகள் ஐந்தான செவி, தோல் கண், தாலு (நாக்கு), நாசி (மூக்கு) என்பன. செயற் கருவிகள் ஐந்தான வாக்கு (வாய் பேசுவது), பாதம் (அடி), பாணி (கைகள்), பாயு (கழிவு உறுப்புகள்), உபாஸ்தம் (பிறப்புறுப்புகள்) என்பவை, அந்தக்கரணம் நான்கான சித்தம், (அறியும் தத்துவம்) மனம் (சமஸ்கிருதத்தில் மனஸ்-கருதும் புலன்), அகங்காரம் (முனைப்பு) தனித்துவமான கருத்து, புத்தி (சரியாக முடிவு செய்யும் தத்துவம்).

உயிர்கள் எண்ணிறந்தன. ஒவ்வொன்றும் இறுதியில் வீடுபேறடைகின்றது. எதுவும் முடிவிலாத் துன்பத்தில் அழுந்துவ தில்லை. உயிர்கள் எண்ணிறந்தன. ஆதலால் சிவனின் ஐந் தொழில்களும் இடையறாது நிகழ்த்தப்பெறுகின்றன. சிவனின் ஐந்தொழில்களாவன: படைத்தல், காத்தல், ஒடுக்குதல், மறைத்தல், அருளல் ஆகியன. இவற்றில் முதல் நான்கும் அருளல் குறித்தனவு மாம்.

பாசம் மூன்று மலங்களைக் கொண்டது. அவை ஆணவம், கன்மம் (கருமம்), மாயை என்பன. மாயை என்னும் கருத்து சிறிது விளக்கம் வேண்டுவது. இந்த மாயை என்பது ஆதி சங்கரரால் கூறப்பட்ட விளக்கமுடியாததாக இருக்கிறது. இல்லை என்னும் கோட்பாட்டோடு எந்தத் தொடர்பும் உடையதில்லை. மேலும் இது பொய்த்தோற்றம் எனத் தவறாகச் சிலரால் புரிந்து கொள்ளப் பட்டிருக்கின்றது. சைவசித்தாந்தத்தின்படி மாயை உண்மையான பொருளேயாகும் (உள்பொருள்) 'மா' என்பது படைப்பையும் 'யா' என்பது ஒடுக்கத்தையும் குறிக்கும். மாயை என்ற மூலச் சரக்கிலிருந்து, தனு (உடல்), கரணம் (உறுப்புகள்), புவனம் (உலகங்கள்), போகம் (இன்ப துன்ப அனுபவங்கள்) ஆகியவை விளைக்கப்பெறுகின்றன. மாயை என்பது பிரபஞ்சத்தை உருவாக்குவதற்கான காரணப்பொருள், ஒடுக்கமுறும் காலத்தில் தனு முதலானவை பிரிந்து மாயையில் சேர்க்கின்றன. மாயை அவற்றை இயல்பான நிலைக்குத் திருப்புகிறது. கடவுள், சக்தியின் துணையால் தநு முதலானவற்றைப் படைக்கிறார். உயிர்கள் தநு முதலானவற்றைப் பெறுகின்றன. அவற்றைக் கொண்டு உயிர்கள் தங்கள் மீட்சியை உருவாக்கிக் கொள்ள வேண்டும். உயிர் அதன்

கருமத்திற்கேற்ப உடம்பைப் பெறுகின்றது. கடவுள்படைப்பிற்கும் உருவிற்கும் நிமித்த காரணன்; சக்தியும் உயிரின் வினையும் துணைக்காரணம்; மாயை முதற்காரணம்.

வினை என்பது செயல்களும், செயல்களின் விளைவுமாகும். உயிர் தூய்மையுற அதன் வினைகளின் விளைவுகளைப் புசிக்க வேண்டும். அந்த வினைகளின் விளைவுகள் அவை உள்ளவாறே, களஞ்சியம் அல்லது கிடங்கில் சேமிக்கப்படுவது போல உள்ளன. அவை சஞ்சிதம் எனப்படும். இதனிலிருந்து சிறிதளவு, கொடுக்கப்பட்ட பிறவியின் பயன்பாட்டுக்கென எடுத்துக்கொள்ளப் பெறுகின்றது. தனக்குக் கட்டளையிடப்பட்ட பிறவியை மேற் கொள்ளும் உயிர் அதன் பிராரப்த கருமத்தை அனுபவிக்க/ மேற்கொள்ள வேண்டியுள்ளது. இது நியதி/ஊழ் (விதி, முறை). விதி (இந்நோக்கில் அறிந்துகொண்ட நிலையில்) உண்மையில் கண்ணுக்குப் புலப்படாததாகும். ஒரு விதிக்கப்பட்ட வாழ்க்கையை வாழும்போது, உயிர் தனது தன்முனைப்பால் அல்லது ஆணவத்தால், புதிய செயல்களையும் கருமங்களையும் புரிகின்றது. இவற்றின் விளைவுகள் ஆகாமியம் எனப்படும். இவை இறுதியில் இருப்பில் உள்ள சஞ்சித கருமத்தோடு சேர்வதனால் சஞ்சிதம் தெளிவாகத் தோன்றும் நிலையில் பெருக்கமுறுகின்றது. சில நிலைகளில், பற்பல பிறப்புகளின் பின்னர் உயிர் உவர்ப்புறுகின்றது. அதன் நற்செயல்களாலோ தீச்செயல்களாலோ பயனின்மையை உணர் கிறது. உணர்ந்த நிலையில் தன் விருப்பத்தின் மீதான பிடிப்பை விட்டுவிடுகிறது. வேறு வகையாகக் கூறினால் அது நல்வினை, தீவினை இரண்டையும் குறித்து வெறுப்படைகிறது. அது, யான் எனது என்னுடைய தன்மைகளை விட்டுவிட்டுக் கடவுளின் கைகளில் ஒரு கருவியாக மட்டும் இருக்க ஆயத்தமாகிறது. இந்த நிலை இருவினை ஒப்பு எனப்படும். (சமஸ்கிருதத்தில் கர்ம சாம்யம்/நல்வினை தீவினைச் சமநிலை). இந்நிலை ஆன்மீகச் செயற்பாட்டுக்குத் தகுந்த சமயத்தைக் குறிக்கும். இச்சமயத் தில் கடவுள் ஒரு குருவின் உருவில் உயிரை அடையும். இது சக்தி நிபாதம் (அருள் இறங்கல்) எனப்படும். பிறகு உயிர் குருவினால் ஓர் ஆன்மீகச் செயற்பாட்டுக்கு உள்ளாகிறது. குரு இதுகாறும் உயிரை அடிமைப்படுத்தியிருந்த ஆணவமலத்தை அதனின்றும் அகற்றுகின்றார். (சுருங்கக்கூறின் ஆணவமலத்தின்

விளைவுகள் பயனற்ற வகை ஆகின்றன). இச்செயன்முறை தீட்சை (ஆன்மீகத் தொடக்கம்) எனப்படும். தீட்சையினால் குரு உயிரைத் தூய்மைப்படுத்தி, தூய்மையின்மை அணுகாவாறு செய்கிறார். இஃது அதன் நிலையில் எல்லாப் பேறுகளிலும் விழையத்தக்க ஒரு திறவுச் சொல்லின் மீதான நம்பிக்கையால் நிகழ்த்தப்பெறுகின்றது. இது பஞ்சாட்சரம் (மறைப்பொருள் சார்ந்த ஐந்தெழுத்து) எனப்படும். உயிர், குரு அதற்குக் கற்பித்தவாறு அதனை ஓதவேண்டும். இஃது உயிர்க்குக் காப்பளிக்கின்றது; ஆகாமியம் தடுக்கப்படுகின்றது. சஞ்சித கர்மங்கள் தீயால் அழிக்கப்பெறுகின்றன. 'நின்றனவும் தீயில் தூசாகும்' என்பது வைணவ ஆழ்வாராகப் போற்றப்பெற்ற ஆண்டாள் நாச்சியாரின் திருமொழி.[15] பஞ்சாட்சரம் என்ற படைக்கலனைக் கொண்ட உயிர் எப்போதும் பாதுகாப்பாய் இருக்கிறது. அஃது உயிரை எல்லையற்ற நற்பண்பில் திளைக்க வைக்கிறது.

ஆணவமலத்தைக் குறித்து ஒரு செய்தி கூறப்பட வேண்டும். தற்பெருமையும் செருக்கும் முனைப்புமான ஆங்காரம் (சமஸ்கிருதத்தில் அகங்காரம்) என்பதனோடு இதனைக் குழப்பிக் கொள்ளக்கூடாது. ஆணவம் என்பது ஒருமலம்; தூய்மையற்றது. இஃது உயிரின் பண்பன்று. இஃது உயிரின் குறை. அது உயிரோடு தொடர்ந்து உடன் காணப்பட்டு வரும் குற்றம். அஃது ஒரு கருமை பூசும், பெருமை குலைக்கும் தத்துவம். எந்த உயிரும் இதனின்று விடுபட்டதில்லை. இஃது 'இருள்' எனப்படும். இஃது அருள் ஒன்றாலேயே கீழ்ப்படியச் செய்ய இயலும். இஃது அவித்தை (அறிவின்மை). இதனை மேலும் விளக்க வேண்டுமெனில், இஃது உயிரின் வழிவழிவந்த குருட்டுத் தன்மை. இஃது செம்பில் களிம்பு போல உயிரோடு இணைந்திருக்கிறது. இதுவே எல்லாக் கேடுகளுக்கும் வேராகும். இஃது உயிரின் பகையாகும். ஈப்ரு மொழியில் சைத்தான் என்பது பகை என்பதற்குரிய சொல்லாகும். சைத்தானின் தன்மை வாய்ந்த ஆணவமலம் ஒன்றே ஒன்றுதான்; ஆனால் அதன் ஆற்றல்கள் எண்ணிறந்தன. அதனால் அஃது மூலமலம் எனப்படும். இது சகஜமலம் (இயல்பானது) எனவும் கூறப்படும். இந்த மலம் நீமியன் சிங்கத்தைவிட ஆபத்தானது; முன்மயிர் சிலிர்த்தெழும் ஆர்க்கேடியப் பன்றியினும் மூர்க்கம் நிறைந்தது; லெர்னாவின் கிளைத்தெழும் கொள்ளை நோயினும்

கொடியது. கொடு நஞ்சுடைய பாம்புகளால் வேலியிடப்பட்ட கிரீட் நாட்டின் காளைகளைக் காட்டிலும் சினமிக்கது; மூன்று மார்பகங்களைக்கொண்ட மும்மடங்கு வலிமைமிக்க ஜெர்யானைக் காட்டிலும் வலிமை வாய்ந்தது; ஸ்டிம்பாலிய சதுப்பு நிலங்களில் வாழ்ந்த நேராகவும் அம்புபோல் கூராகவும் அமைந்த இறகுகளைக் கொண்ட பறவைகளைவிடவும் தீங்கு செய்வது; பிஸ்டோனிய எல்லைகளிலும் இஸ்மாராவிலும் காணப்பட்ட திரேசியாவின் டயோமீடின் நெருப்பாய் மூச்சுவிடும் குதிரைகளைக் காட்டிலும் உக்கிரம் மலிந்தது; செரிப்ரஸ் என்னும் வெறிகொண்ட முத்தலை நாயினும் பயங்கரமானது; கொடு நரகத்தினும் இரக்க மற்றது. இத்தீங்கு உயிரையும் மறைத்து, தன்னையும் உயிருள் மறைத்துக் கொள்ளும் இரட்டை இருளாகும். இது சிவனருள் ஒன்றாலேயே நீக்கப்படக்கூடியது. அப்போதும் கூட அஃது இறந்து விடுவதில்லை; இறந்த நிலையில் வாழும். அது நடராசப் பெருமானின் அழுத்திய திருவடிக்கீழ் செயலற்றுக் கிடக்கும் முயலகனாகும்.

உயிருக்குப் பலநிலைகள் உள்ளன. கேவல நிலையில், உயிர் எந்த உடம்பையும் (சூக்கும உடலோ பருவுடலோ) பெறாமல் உள்ளது. இந்நிலையில் உயிர் ஆணவ மலத்தோடு விலக்க முடியாதவாறு பின்னிக் கிடக்கிறது. இத்தகைய நிலையில், உயிர் இருட்டறையில் குருட்டுக் குழந்தையாய் ஆதரிப்பாரின்றிச் சோர்வுறுகின்றது. இவ்விடருற்ற நிலையில் உயிரைக் காக்க, பதி, மாயை, கன்மம் ஆகிய மற்றை இரு மலங்களோடு உயிரை இணைக்கிறது. இது வண்ணார் உவர் மண்ணிட்டு ஆடையின் அழுக்ககற்றுவதை ஒத்தது. மாயையும் கன்மமும் உயிரோடு இணைவுற்ற நிலையில் மிகப் பின்னர் அவை ஆகந்துகமலங்கள் (கூடுதலான வளர்ச்சி கொண்டவை) எனப் பெறும். இவற்றைப் பெற்ற நிலையில், குறிப்பாக மாயை என்னும் மலம் சேர்ந்ததனால், உயிர் சிறிதளவு அறிவூட்டப் பெறுகின்றது. உயிர் இப்போது உடம்பைப் பெற்றுள்ளமையால் இவ்விரண்டாம் நிலை சகலம் எனப்பெறும்.

எனினும், பெற்ற அறிவை உயிர் நல்வினை தீவினைகளைத் தன்மீது குவித்துக் கொள்வதால், உயிர் ஏதோ ஓர் உருவுற்று மீண்டும் மீண்டும் பிறக்க நேரிடுகின்றது. உயிர் இருவினை ஒப்பு

அடையும் வரை இந்நிகழ்வு தொடர்கின்றது. இருவினை ஒப்பு உயிரை மலபரிபாகத்தில் (இறையருளால் நீக்குதற்குரிய வகையில் உயிரின் ஆணவமலம் கனிந்த நிலை) செலுத்துகின்றது. இது சத்தி நிபாதத்தின் நிகழ்வால் உறுதிப்படுத்தப்படுகின்றது. தீட்சையினால் உயிரின் சஞ்சிதவினை அழிவெய்துகிறது. இனி ஆகாமிய வினை நிகழாது. வீடுபேறுற்ற ஓர் உயிர்க்கு பிராரப்த வினையை ஏற்பது என்பது குழந்தையின் விளையாட்டுப் போன்றதே. உயிர் இப்போது சுத்தநிலை (தூய நிலை) என்னும் மூன்றாம் நிலையில் உள்ளது. உயிர் இன்னும் உடம்போடு கூடியுள்ள நிலையில் மனிதன் ஜீவன் முக்தன் எனப்படுகின்றான் (வாழும் போதே வீடுபேறடைவது). ஜீவன் முக்தனின் இருப்பு பதியில் நிலைத்து இருக்கிறது. ஜீவன் முத்தன் வெறும் பொம்மையே; அதனை இயக்குவது பதியே. இந்தப் பொம்மையின் வழியே பதி ஒரு தெய்வீக விளையாட்டை நிகழ்த்துகின்றார். ஜீவன் முத்தரின் செயல்கள் பதியைப் பிணைப்பதில்லை. ஜீவன் முத்தரின் செயல்கள் உலர்ந்த விதைகளைப் போல உள்ளன. அவை முளைக்கமாட்டா. அவர் முடிவற்ற இன்பத்தைப் பெற்றுள்ளார். அவர் சிவனடியார்களுடன் கூடியிருக்கிறார். அவருக்குச் சைவ நெறியின் அடையாளங்கள் சிவனேயாம். அவர் வாழ்க்கையின் பொதுவழியில் தெய்வீக மகிழ்ச்சியுடன் பயணம் செய்கிறார். அவர் தன்னுடைய அழிகின்ற உடம்பை விடுங்கால் சிவத்தோடு ஒன்றாகிறார். இவ்வாறாக அவர் சிவானந்தத்தின் (பேரின்பம்) நிலையான வாரிசாகிறார்.

இரமண சாஸ்திரியின் கூற்றுப்படி "உயிரின் ஆன்மீக விடுதலை ஒரு தெளிவான தொடக்கத்தை உடையதாய் முடிவற்றதாய் இருக்கும்போது, உயிரின் தளை ஒரு தொடக்கமில்லாததாய் ஆனால் முடிவுடையதாய் இருக்கிறது" என்று அறியலாம்.

உயிரை உய்விக்கும் சிவபெருமானின் திருவடிகளில் நிலையாக ஓய்வுபெறும்போது அதன் நீண்ட பயணம் ஒரு நிறைவை எய்து கிறது.

**குறிப்புகள்**

1. தமிழ்ச் சிவஞானபோதம் சைவ சித்தாந்தத்தின் அதிகார பூர்வமான பாடமாகும். "சைவசித்தாந்தம் என்பது முடிவு

களின்முடிவு எனப்பொருளுடையது. அது சமய மெய்ம்மையின் இறுதி வாசகத்தை இயம்புவது. அதன் பெயரின்படியே அதனினும் மிக உயர்ந்தது எதுவும் இல்லை என அஃது உரிமை கொண்டாடுகிது" என ஜான் எச்பீட் (Piet) கூறுகின்றார். *A Logical Presentation of the Saiva Siddhanta Philosophy by John H.Pict, C.L.S. Madras, 1952,* p.2.

2. மேலது, ப: 2,

3. மேலது, ப: 9,

4. மேலது, ப: 5.

5. பண்டார மும்மணிக்கோவை.

6. இன்றியமையாத நூல்களின் பட்டியல் வருமாறு:

i) தத்துவக் கட்டளை (மொ.பெ.) H.R. ஹோய்சிங்டன் சைவ சித்தாந்தத்தில் சேர்க்கப்பட்டுள்ளது. தொகுதி 1. தருமபுர ஆதினம், தருமபுரம், மயிலாடுதுறை (984) இந்நூல் 1854இல் வெளிவந்ததன் மறுபதிப்பாகும்.

ii) சிவஞானபோதம், H.R. ஹோய்சிங்டன்னால் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டது. (பதி.) என். முருகேச முதலியார், தருமபுர ஆதீனம், 1979. இது 1854இல் வந்ததன் மறு பதிப்பு.

iii) சிவஞானபோதம் (ஆங்கில மொ.பெ) J.M. நல்லசுவாமி பிள்ளை, தருமபுர ஆதீனம், கழகம் முறையே மறுபதிப்புச் செய்தது, 1945, 1984.

iv) சிவஞான சித்தியார் (ஆங்கில மொ.பெ), J.M. நல்ல சுவாமி பிள்ளை, தருமபுர ஆதீன மறுபதிப்பு, 1948.

v) Saiva Siddhanta as expounded in the SivaJanana Siddhiyar by V.A. Devasenapathi, Madras University, 1960.

vi) Saiva Siddhanta by Violet Paranjoti, Reprinted in 1953/ 1954, CLS, Madras.

vii) சிவஞான சித்தியார் (ஆங்கில மொ.பெ.), கே. சிவராமன், காசிமடம், திருப்பனந்தாள், 1949, மறுபதிப்பு 1988.

viii) A Logical presentation of the Saiva Siddhanta Philosophy by John H.Piet, CLS, Madras, 1952.

ix) Siddhanta Chathushytayam translated by T.N. Ramachandrani T.R.N.M.L. and Publications, 5 D Selvam Nagar, Thanjavur- 7.

x) Saiva Siddhantam, Vol. Edited by T.N. Ramachandran Dharmapura Adheenam, 1984, Vol. II Edited by T.N. Ramachandran, I.I.S.S.R. Dharmapuram, 1988, Vol. III Edited by T.N. Ramachandran (1994, IISSR, Dharmapuram).

xi) Pati Pasu Pasam by T.N. Ramachandran, IISSR, Dharmapuram, 1988.

xii) Grace in Saiva Siddhantam and in St. Paul by Joseph Jaswantraj, Madras, 1988.

xiii) Saivism in Philosophical Prespective by K.Sivaraman, Motilal Banarsidas, New Delhi, 1973.

xiv) Love of God according to Saiva Siddhanta by Mariasusai Dhavamony, Oxford at Clarandon Press, London WI, 1971. For greater detailis readers should consult 'An Annotated Bibliography of Saiva Siddhanta Works' compiled by T.N. Ramachandran, I.I.S.S.R. Dharmapuram, 1994.

7. திருமந்திரம், முதல் தந்திரம், சைவசித்தாந்த மகா சமாஜம், செய்யுள் 3, 1940,

8. Paradise Lost Book, Line 40.

9. திருத்தெள்ளேணம், செய்யுள் 1.

10. நெஞ்சுவிடுதூது.

11. சாக்கிய நாயனார் புராணம் செய்யுள் 8.

12. சிவஞானசித்தியார், செய்யுள் 75.

13. திருக்கோத்தும்பி, செய்யுள் 18.

14. திருவருட்பயன், செய்யுள் 2.

15. திருப்பாவை, செய்யுள் 5.

3

# இந்திய உரை மரபு

இந்தியாவின் எல்லா வைதிக நெறிகளும், பிரம்ம சூத்திரம், முதன்மை உபநிடதங்கள், பகவத்கீதை என்ற பிரஸ்தானத்திரயத்தின் அடிப்படையிலேயே காணப்பட்டன என்று கூறப்படுகின்றது. உபநிடதங்கள் இறையருள் வெளிப்பாட்டின் மூலங்களாக அமைகின்றன. (சுருதி பிரஸ்தானா). அவை ஸ்ருதியின் (வேதத்தின்) கொடுமுடிகளாகும். அவை குருவிடமிருந்து சீடனுக்கு வாய்மொழி வழியாகத் தொடர்ந்து உரைக்கப்படுகிறது. பின்னர் சீடன் குருவாகி அவனுடைய சீடர்களுக்கு உரைக்கிறான். இவ்வாறாக அது ஒரு கடுமையும் சிறந்த ஒழுங்குமுறையும் கொண்டு நடைமுறைப்படுத்தப்பட்டுக் காலப்போக்கில் மறுக்க முடியாத பண்பட்ட மரபாகி உள்ளது. உபநிடதங்களுக்கு அடுத்தபடியாகவே பகவத்கீதை இம்மரபுக்குரியதாகிறது. என்றும் வாழ்கிற மெய்ம்மையின் ஒரு பகுதியாக இது விளங்குகிறது. இது வாழ்க்கைக்கு அப்பால் உள்ள வாழ்க்கைக்குக் கண்ணபெருமானே அருளிய சொற்களைப் பேணிக் காத்து வைத்துள்ளது. சங்கர பகவத் பாதரின் கூற்றுப்படி இது வேதங்களின் சாரமாகும் (சமஸ்த-வேதாந்த-சாரசங்கிரக பூதம்). வேதங்களுக்கு அடுத்தபடியான ஸ்மிருதியான மகாபாரதத்தின் பகுதியாக இஃது உள்ளது. எனவே கீதை ஸ்மிருதி பிரஸ்தானா என்று கூறுப்படுகிறது. பிரம்மசூத்திரம் ஒரு தருக்க நெறியில் வேதங்களின் உட்பொருளைக் கூறுவதால் அது நியாய பிரஸ்தானா எனப் போற்றப்பெறுகின்றது. அஃது உண்மையில் வேதாந்த சூத்திர வாசகமாதலால் வேதாந்த சூத்திரம் என்ற பெயரைப் பெறுகின்றது. அது மேலும் உடம்போடு கூடிய உயிரின் இயற்கையையும் விதியையும் மணிச்சுருக்கமாக உரைத்தாலும், அவற்றைத் தெளிவுறுத்துவதால் சரீரக சூத்திரம் எனவும் கூறப் பெறுகின்றது. துறவிகளே அதனைப் பேணி வளர்ப்பதற்கு மிகவும் உரிய தகுதியுடையவர்களாதல் பற்றி அது பிட்சு சூத்திரம் என்னும் பெயரைப் பெற்றது. மேலும் அது வேதங்களின் இறுதிப்பகுதிகளின் புலன் விசாரணையாக இருத்தல் பற்றி உத்தர

மீமாம்சைச் சூத்திரம் என்று குறிக்கப் பெறுகின்றது.

பிரம்ம சூத்திரங்கள் எனப் பரவலாக அறியப்பட்ட இப்படைப்பு, அதன் விளக்கவுரைகளால் ஆற்றும் பணி மிக முக்கியமானதும் என்றும் நிலைத்திருப்பதுமாகும். இவ்வாக்கப் படைப்பின் பொருள் கொள்வதன் அடிப்படையிலேயே ஒவ்வொரு வேதக் கோட்பாடும் முறைப்படுத்தப்பட்டது. ஆதிசங்கரரின் விளக்கவுரை அத்வைதச் சிந்தனை, இராமானுஜரின் விசிஷ்டாத் வைத தரிசனம், மத்வரின் துவைதக் கோட்பாடு ஆகியவை இவ்வடிப்படையில் வழக்கிற்கு வந்தன. இந்த ஆச்சாரியர் மூவரும், விளக்க உரைஞர் பலரிடையே மிகப்புகழ் பெற்றவர்கள். விளக்க உரைஞர் சிலரின் வாழ்க்கைக் குறிப்புகள் கீழ்வருமாறு:

### 1. சங்கரர் (788–820)

இன்று மாயாவாதம் என்பதனை முன்மொழிந்த கௌடபாதரின் சிறந்த மாணவர் இவர். பலர் மாயாவாதம் என்பதனைத் தவறான பெயரீடு என்பர். சங்கரர் அவருடைய தெளிவிற்காகவும் அதனினும் இருமடங்கான கவர்ச்சிமிக்க சொல் வன்மைக்காகவும் போற்றப்பெற்றவர். காலப்போக்கில் அவரது மாயை பற்றிய விளக்கம் அதன் பொருளிலும் பரவு மெல்லையிலும் ஆழமும் விரிவும் தனிச்சிறப்பும் பெற்றன. துவைதியோ விசிஷ்டாத் வைதியோ சைவசித்தாந்தியோ சங்கரரைக் கடுமையாகத் தாக்கக் கூடும். இத்தொடர்பில் தன் வகுப்பறையில் பேராசிரியர் சிடிசர்மா ஒருமுறைகுறிப்பிட்டதை நினைவுகூர்தல் நல்லதாகும். "நீங்கள் சங்கரரின் சார்பாக அல்லது அவர்க்கு எதிராகத் தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபடலாம்; ஆனால் சங்கரரின்றி நீங்கள் தத்துவ ஆராய்ச்சி செய்ய முடியாது" என்பதே அவர் கூற்றாகும்.[1] சூத்திரங்களின் பொருளையும் அவற்றின் மெய்ம்மையும் காண்பதில் சங்கரர், சகுணப்பிரம்மன், நிர்க்குணப் பிரம்மன், மித்யாபேதம், பரமார்த்திகபேதம் என்ற இரட்டை அடுக்குக் கோட்பாட்டைக் கொண்ட அத்தியாயத்தை நுண்மாண் நுழைபுலத்தோடு பயன் படுத்தினார்.[2]

சங்கரர் பிறப்பால் தமிழர்; அவர் சேர நாட்டில் (கேரளம்) தோன்றியவர்.

## 2. பத்மபாதர் (கி.பி. 800)

இவர் சங்கரருக்கு விருப்பமான சீடராக இருந்தார் என்று சொல்லப்படுகிறது. டாக்டர் பி.என்.கே. சர்மாவின் கூற்றுப்படி, பத்மபாதரின் பஞ்சபாடிகம் மறுப்பிற்கு இடமின்றிச் சங்கரரின் சூத்திர பாடியத்திற்கு உரைகளில் காலத்தால் முற்பட்ட புலமைமிக்க உரையாகும்.[3] இதன் ஒரு பகுதியே இப்போது கிடைக்கிறது.

## 3. வாசஸ்பதி மிஸ்ரா (கி.பி. 850)

இவர் மிதிலையில் தோன்றியவர். இவரது உரை இவருடைய மனைவியின் பெயரான 'பாமதி' என்ற பெயர் கொண்டது. அவ்வம்மையார் பொறுமை, அடக்கம், தன்னையே அழித்துக் கொள்ளும் இயல்பு, தாய்மைப் பண்பு, உடனடியாக இரங்கும் தெய்வநலம், எல்லாவற்றையும் தியாகம் செய்தல் ஆகிய பண்புகளின் முன்மாதிரியாவார். இவர் பெயரில் அமைந்த இவ்வுரை பிரம்ம சூத்திரங்களுக்கான சங்கர பாடியத்திற்கான முழுமையான மிகப் பெரிய உரையாகும். அவர் பிறரைச் சாராத உரையாளர். அவர் சங்கரபாடியத்தை விரிவாக்கியதுடன், மிகச் சிறந்த சிறப்புகளைக் கொண்ட முழுமையுடையதாக ஆக்கினார்.

## 4. பிரகாஷாத்மன் (கி.பி. 1000)

இவருடையது பத்மபாதரின் பஞ்சபாடிகத்திற்கு விரிவான உரையாகும். இவ்வுரை, அவருடைய அத்வைதக் கோட்பாடு களுக்குப் புதிய சூழல்களோடு பொருந்திய விளக்கங்களையும் கருத்துக்களையும், அதன் வகைகளையும் விளக்கங்களையும், அமைப்புத் திட்டங்களையும் கொண்டு செழுமையாக்கப் பெற்றது.

## 5. அமலானந்தர் (கி.பி.1220–80)

இவர் அரசர்களின் ஆதரவைப் பெற்றவர். இவர் பாமதிக்கு ஓர் உரை எழுதினார். அதன் பெயர் 'கல்பதரு' என்பதாம். சங்கர பாடியத்தின் அதிகரண பிரஸ்தானக் கருத்துக்களில் தோய்ந்து ஈடுபட விரும்புவோர்க்கு இஃது ஒரு கையேடாகப் பயன் படுகிறது.

## 6. இராமானுசர் (1017–1137)

இவர் உபநிடதங்களுக்கு உரையெழுதவில்லையெனினும் பாஷ்யகாரர் என்ற பெயரைப் பெற்றிருக்கின்றார். இவரது ஸ்ரீபாஷ்யம், தமிழில் உள்ள தெய்வீக மறைகளின் அடிப்படையில் அமைந்தது. அவற்றிலும் தமிழ் வைணவ முனிவரான நிகரற்ற பெருமைமிக்க நம்மாழ்வாரின் திருவாய்மொழியை அடிப்படையாகக் கொண்டது. இவரே, பிரம்ம சூத்திரங்களுக்குச் சுருக்க உரைகளை யும் வரைந்துள்ளார். இவர் தம் கருத்துக்களுக்கு ஏற்கும் வகையில் உபநிடதங்களின் சில பகுதிகளுக்கு மாற்றுப்பொருள் காண முற்பட்டார். அவர் சங்கரரை அவர் நிலையிலிருந்து இறக்கத் தன் ஆற்றல் முழுவதையும் வருத்தி, அம்முயற்சியில் ஓரளவு வெற்றியும் எய்தினார். டாக்டர் பி.என்.கே. சர்மா "அவருடைய மொழிநடை ஐயத்திற்கிடமின்றிப் பொருட் செறிவுடையது; கனமான சொற் கலவைகளையும் வாக்கிய உறுப்புகளையும், கொண்டது; அவை ஆழ்ந்த உணர்ச்சித் தாக்கத்தை உண்டாக்கும் கருத்திற்கு உரியவை யாக இருந்தன" என்கிறார்.[4]

## 7. சுதர்சன சூரி (கி.பி. 1250–1310)

இவர் இராமானுசரின் ஸ்ரீபாஷ்யத்திற்கும் வேதார்த்த சங்கிரகத்திற்கும் சிறந்த விளக்க உரைகாரர் எனப் போற்றப்பட்டவர். இவர் பல்கலைச் செல்வரான வேதாந்த தேசிகரின் சமகாலத்தவர். அவரிடம் இவர் ஸ்ருத பிரகாசிகையின் கையெழுத்துப்படியை அறிந்ததாகக் கருதப்படுகிறது. மாலிக்காபூர் தெற்கில் அழிவு வேலைகள் மூர்க்கமாக நிகழ்த்திய இடர்மிக்க காலத்தில் இவர் வாழ்ந்தார்.

## 8. மத்வர் (கி.பி. 1238–1317)

இவர் ஆனந்ததீர்த்தர் என்றும் கூறப்படுகின்றார். இவர் பிரம்மசூத்திரங்களுக்கு மூன்றாவது பேருரைகாரர். இவர் கருநாடகத்தில் தோன்றியவர். சங்கரராலும் இராமானுஜராலும் வகுக்கப்பட்ட தத்துவம் நன்கு வளர்ச்சியுற்ற காலத்தில் இவர் தோற்றம் நிகழ்ந்தது. இருவருடைய கொள்கையிலும் நிறைவுறாத இவர் தன்னுடைய கொள்கையை உருவாக்கினார். இவர் பிரம்ம சூத்திரங்களுக்கு எல்லாமாக நான்கு உரைகளை எழுதினார். இதற்கு முன் இவர் பகவத்கீதைக்கு உரையெழுதியிருந்தார். அவர்

மேலும் பல சுருக்கமான தத்துவம் குறித்த தனிக்கட்டுரைகளையும் பத்து உபநிடதங்களுக்கான பாடியத்தையும் பகவத்கீதைக்கு மற்றுமோர் உரையையும் எழுதினார்.

மத்துவரின் உரைகள் அவற்றிற்கே உரிய தரத்தை உடையவை. அவர் ஓர் எளிய சொற்சுருக்கமுடைய கூர்மையான நடையைத் தேர்ந்து கொண்டிருந்தார். பி.என்.கே.சர்மா, "அவருடைய நடை அவருடைய நோக்கத்தைச் சுட்டிக் காட்டுவதாகவும் அவர் தாமே பங்குகொண்ட வரலாற்று, தத்துவத் தேவைகளின் வெளிப்பாடாக வும் இருந்தது" என்று கூறுகின்றார்.

## 9. திரிவிக்கிரம பண்டிதர் (கி.பி. 1258–1320)

இவர் கேரள நாட்டினர். தெற்குக் கனராவை ஆண்ட கும்ப அரசர்களின் அவைப்புலவர். இவர் வாழ்வின் முற்பகுதியில் சங்கரரின் ஆதரவாளராக இருந்தார். பின்னர் இவர் மத்துவரின் சீடரானார். மத்துவரோடு ஏற்பட்ட வாதமொன்றில் இவர் மத்துவரால் தோல்வியுறச் செய்யப்பட்டார். இவ்விவாதம் பதினைந்து நாள் நீடித்தது. இவர் மாதவ பாடியத்திற்குத் தத்துவப் பிரதிபா என்ற உரையை எழுதினார்.

## 10. ஜெயதீர்த்தர் (கி.பி. 1335–85)

இவர் மாதவரின் படைப்புகள் பலவற்றிற்கு உரை எழுதியமை யால் இவர் மாதவரின் 'டீகாகாரர்' எனக் கூறுப்பெறுகின்றார். இவர் மத்துவரின் சூத்திர பாடியத்திற்குத் தத்துவப் பிரகாசிகை என்ற மிகச் சிறந்த விளக்கத்தை எழுதினார். இவரே மத்துவரின் சிந்தனையையும் மறைப்பொருளாய்வையும் தரப்படுத்தி அமைத் தவர்.

## 11. வியாச தீர்த்தர் (1460–1539)

மத்துவர், ஜெயதீர்த்தர், வியாசதீர்த்தர் ஆகிய மூவரும் துவைத சிந்தனையின் 'முனித்ரயம்' (தெய்வீக உரையாசிரியரான மூவர்) எனப் பெற்றனர். இவர் பேரரசர் கிருஷ்ணதேவராயரின் ஆன்மீக குரு ஆவர். இவர் எட்டு இலக்கியத் தொகுப்பின் ஆசிரியர். தாஸ்குப்தா "தருக்க ஆற்றலும் ஆனுமானமும் அறிவுக் கூர்மையும் மிக்க புலன்கடந்த ஆய்வு சார்ந்த சிந்தனை கொண்டவர் வியாச தீர்த்தர்" என்கிறார். அவருடைய இவ்வாற்றல் இந்தியச் சிந்தனைகளில் ஈடற்றது என்றும் கூறுகின்றார்.[5]

டாக்டர் பி.என்.கே.சர்மா "துவைத சிந்தனைகளில் புலன்கடந்த மெய்ப்பொருள் ஆய்வு நிகழ்த்தியுள்ளவர்களின் தலைவர் இவர்" என்கிறார்.[6] இவருடைய தாத்பரிய சந்திரிகை, முனித்ரயத்தினரின் பிரம்ம சூத்திர விளக்கங்களின் மீதான ஒளிவிளக்கம் தரும் ஆய்வு நூலாகும்.

சிறிய உரைகளையும் குறிப்புரைகளையும் எழுதியோருள் குறிக்கத்தக்கவர் வாதிராஜதீர்த்தர் (1480-1600) ரகுட்டமா தீர்த்தர் (1557-96), ஜகந்நாததீர்த்தர் ஆகியோராவர்.

பிரம்ம சூத்திர உரையாசிரியர்களின் ஸ்ரீகந்தர் தனித்து நிற்கிறார். இவர் சிவாத்துவிதச் சிந்தனைப் பள்ளியில் யாவரினும் சிறந்த சைவர். சிவாத்துவிதம் என்பது சைவசித்தாந்தம் போன்றதே யன்று; எனினும் ஸ்ரீகந்தபாடியத்திலிருந்து சைவ சித்தாந்தக் கோட்பாடுகளுக்குப் பொருந்தி வருவனவற்றில் பல பகுதிகள் சைவ அறிஞர்களால் தடையில்லாமல் மேற்கோளாகக் காட்டப் பெறுகின்றன. சிவஞானயோகி இப்பாடியத்தைப் பெரு மதிப் புடன் போற்றுகின்றார். யோகியின் திராவிட மாபாடியம், ஸ்ரீகந்த பாடியத்தின் மேற்கோள்கள் நிறைந்ததாக உள்ளது.

ஸ்ரீகண்டர் தனது தத்துவத்தை சிவ விசிஷ்டாத்வைதம் எனப் பெயரிட்டுக் கூறுகின்றார். அப்பைய தீட்சிதரின் கருத்துப்படி (16ஆம்நூற்.) ஸ்ரீகண்டர் சங்கரருக்குப் பின்பு ஆனால் இராமானுசருக்கு முன்பு வந்தவர். இக்கருத்து பேராசிரியர் எஸ்.எஸ்.சூரியநாராயண சாஸ்திரியால் மறுக்கப்படுகிறது. அவர் 'ஸ்ரீகண்டர் இராமானுசரின் சமகாலத்தவராக இருக்கலாம்' என்கிறார்.[7] ஸ்ரீகண்டபாடியத்திற்குக் கிடைக்கும் ஒரே உரை அப்பைய தீட்சிதரின் 'சிவார்க்கமணி தீபிகை' என்பதாகும். ஸ்ரீகண்டர் நீலகண்டர் என்ற பெயராலும் அறியப்படுகிறார். சைவ சித்தாந்திகள் அவரைச் சிவாச்சாரியர் எனப் போற்றுகின்றனர். இலங்கையைச் சார்ந்த ஆறுமுக நாவலரின் புகழ்பெற்ற சீடர் காசிவாசி செந்திநாத ஐயர் ஸ்ரீகண்டபாடியத்தைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.[8]

தத்துவபாடியங்கள் ஒருபுறமாக, சமஸ்கிருத மொழியில் எண்ணற்ற பாடியங்கள் உள்ளன. போகிற போக்கில் கூறினாலும் இவற்றில் இரண்டு இத்தொடர்பில் குறிப்பிடத்தக்கன. விசயநகர அரசமரபைக் கண்ட வித்யாரணியரின் உடன்பிறந்தவரான சாயனர்

வேதத்திற்கு ஒரு பாடியம் வரைந்தார். சாயனர் பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்தார். புகழ்பெற்ற பாணினியின் இலக்கணம், மகாபாடியம் எனப் போற்றப்பெற்ற ஓர் உரையைப் பெற்றது. (பெரியதும் சிறந்ததுமான உரை) இது பதஞ்சலியால் எழுதப் பெற்றது.

தமிழ் ஒரு பழமையான மொழி. அதன் படைப்புகள் உரையாசிரியர்களை விரிந்த உரைகளை எழுதத் தூண்டின. தொல்காப்பியம் ஓர் இலக்கண நூல். அதனில் தேர்ச்சிபெற்றாலேயே முழுநிலைத் தமிழ் அறிஞரென மதிக்க முடியும். இவ்விலக்கண நூல் கிறித்துவுக்கு முற்பட்டது. இளம்பூரணர், சேனாவரையர், கல்லாடர், தெய்வச்சிலையார், பேராசிரியர், நச்சினார்க்கினியர் ஆகியோர் தொல்காப்பியத்தின் பேருரைகாரர்கள். இந்த உரை மரபு இன்றும் பண்டித வித்துவான் தி.வே. கோபால ஐயர், பாவலரேறு ச.பால சுந்தரம் போன்ற அறிஞர்களால் உயிர்ப்புள்ளதாக இருக்கிறது. பின்னவரின் தொல்காப்பியத்திற்கான ஆராய்ச்சிக் காண்டிகை உரை நான்கு தொகுதிகளாக வந்துள்ளது (1988-89). இவருடைய புதிய, பிறிதின் சார்பற்ற அணுகுமுறை முதிர்ந்த சிந்தனையின் விளைவாகும்.[9]

தமிழில் பெருங்காப்பியங்கள் சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, குண்டலகேசி, வளையாபதி என ஐந்தாகும். இவற்றில் முதல் மூன்றுமே முழுமையாகக் கிடைக்கின்றன. சிலப்பதிகாரம், சமணத் துறவியான ஓர் இளவரசரால் இயற்றப் பெற்றது. அடியார்க்கு நல்லார் மிகச் சிறந்ததோர் உரையை இதற்கு எழுதியுள்ளார். அவ்வுரையின் பகுதிகளே இன்று கிடைக்கின்றன. சீவகசிந்தாமணி சமணத் துறவி ஒருவரின் படைப்பாகும். இதற்கு நச்சினார்க்கினியர் என்னும் வைதிகப் பிராமணர், புகழ் ஒளி பரவும் ஓர் உரையை எழுதியுள்ளார். மணிமேகலை பௌத்த சமயம் சார்ந்த வணிகர் ஒருவரால் இயற்றப்பெற்றது. இப்பெரிய நூலுக்குப் பண்டைய உரை இல்லை.

திருக்குறள் ஈரடிச் செய்யுட்களால் ஆன தலைசிறந்த படைப்பாகும். இதன் பண்டைய உரையாசிரியர் பதின்மர். இவர் களில், சங்க காலத்திற்குப் பிற்பட்ட, பரிபாடலுக்கும் உரையெழுதிய பரிமேலழகர் சிறப்பாகக் குறிக்கத்தக்கவர். இந்நூலுக்கு இக்கால உரையாசிரியர்கள் எண்ணிறந்தோராவர்.

தமிழ் நாட்டின் வைணவம், அதன் சமய நூல்களுக்கு உரைகள் எழுதுவதற்கு அனுமதி அளித்ததோடு மட்டுமன்றி, உண்மையில் அம்முயற்சிகளை ஊக்குவிக்கவும் செய்தது. ஆழ்வார்கள் பன்னிருவரின் நூல்களுக்குப் பல உரைகள் உள்ளன. ஆழ்வார்களில் மிகச் சிறந்தவராகப் போற்றப்பெற்ற நம்மாழ்வாரின் திருவாய்மொழிக்குப் பல உரைகள் உள்ளன. இவை தமிழ்ச் சொற்களும் சமஸ்கிருதச் சொற்களும் கலந்த கலவையான மணிப்பிரவாளத்தால் செய்யப்பெற்றன. ஒவ்வோர் உரையும் அதில் இடம்பெறும் கிரந்தங்களின் எண்ணிக்கையின் அடிப்படையில் பெயரிடப்பட்டுள்ளது. எனவே, அவை ஆறாயிரப்படி (6000) ஒன்பதினாயிரப்படி (9000), பன்னீராயிரப்படி (12000), இருபத்து நாலாயிரப்படி (24000), முப்பத்தாறாயிரப்படி (36000) என்று குறிக்கப் பெறுகின்றன. இவை முறையே திருக்குருகைப்பிரான் பிள்ளான், நஞ்சீயர், வாதிகேசரி அழகிய மணவாள ஜீயர், பெரியவாச்சான் பிள்ளை, நம்பிள்ளை என்போரால் இயற்றப் பெற்றவை. வைணவ உரைவளம் என்னும் நூல், இவ்வுரைகளின் பெருமைகளை விளக்குவதோடு உரையாசிரியர் பிறரின் உரைகளின் பெருமைகளையும் புலப்படுத்துகின்றது.10

சைவ சமய நூல்கள் எண்ணிக்கையில் பன்னிரண்டாகும். இவை பன்னிரு திருமுறைகள் எனப்பெறும். இப்புனித நூல்களுக்கு உரையெழுதுவதை சைவம் ஊக்குவிக்கவில்லை. எனினும், எட்டாம் திருமுறையான திருவாசகத்தோடு சேர்ந்த திருக்கோவையாருக்கு மட்டும் விதிவிலக்காக உரை தோன்ற அனுமதிக்கப்பட்டது.[11] திருவாசகம், திருக்கோவையார் இரண்டும் மாணிக்கவாசகப் பெருமானால் அருளப்பெற்றன. திருக்கோவையார் அக இலக்கிய வகை சார்ந்தது. எனவே இதற்கு விதிவிலக்களிக்கப் பட்டிருக்கிறது. இதன் உரைகள் இன்றும் உள்ளன. இவை பேராசிரியராலும், பெயர் தெரியாத ஆசிரியர் ஒருவராலும் எழுதப் பெற்றன.

மரபின்படி, திருமுறைகள் கூறுவதைச் சைவர் நம்பிக்கையோடு ஏற்க வேண்டும். அவை ஒருமித்த அதிகாரமிக்கவையாகவும், நிலை நிறுத்தப்பட்டனவாகவும் இருக்கின்றன. அவை ஆராய்ச்சி எல்லைகட்கு அப்பாற்பட்டவை. ஏனெனில் இவ்வாராய்ச்சிகள் மகிழ்ச்சியைக் கெடுப்பன. மேலும் அறிவாராய்ச்சி அதன் உச்ச நிலையிலும் சிறிதே பயனளிப்பது. எனினும் சாத்திரங்களின் மீதான உசாவல் தடுக்கப்படவில்லை. உண்மையில் ஆய்வாளர் சாத்திரங்களின் ஆளுகை வட்டத்தில் தன் அறிவாற்றலைச்

செலுத்த உரிமையுடையவராக இருக்கிறார். அவர் அவ்வாறு செய்வதற்கும் அழைக்கப் பெறுகின்றார். 'செல்லும் அளவும் செலுத்தும் சிந்தையை'[2] என்பன திருமூலரின் சொற்கள். எனவேதான் மெய்கண்ட சாத்திரங்கட்கு எண்ணற்ற உரைகள் தோன்றின. கீழ்வரும் சாத்திரங்களின், அவற்றின் உரைகளின் பட்டியல் போதுமான எடுத்துக்காட்டாகும்.

| சாத்திரங்கள் | உரைகாரர்கள் |
|---|---|
| 1. திருவியலூர் உய்யவந்த தேவரின் திருவுந்தியார் | சிவப்பிரகாசர் |
| 2. திருக்கடவூர் உய்யவந்த தேவரின் திருக்களிற்றுப்படியார் | சிவப்பிரகாசர் |
| 3. மெய்கண்ட தேவரின் சிவஞானபோதம் | அ) பாண்டிப்பெருமாளின் விருத்தியுரை<br>ஆ) பெயரறியப்படாத ஆசிரியரின் தெளி பொருள் விளக்கம்<br>இ) பெயரறியப்படாத ஆசிரியரின் சம்பிரதாய அல்லது பழைய உரை.<br>ஈ) சிவஞான யோகியின்<br>1) சிற்றுரை<br>2) பேருரை (திராவிட மாபாடியம்)<br>உ) செந்திநாத ஐயரின் சிவஞானபோத வசனாலங்கார தீபம் |
| 4. அருள்நந்தி சிவாச்சாரியாரின் சிவஞான சித்தியார் | திருவருட் பிரகாசர் உரை<br>அ. மறைஞான சம்பந்த தேசிகர் உரை. |
| அ. பரபக்கம் | |
| ஆ. சுபக்கம் | ஆ. சிவாக்கிரக யோகியின் மணிப்ரவாள உரை |

| | |
|---|---|
| | இ. நிரம்ப அழகிய<br>தேசியர் உரை.<br>ஈ. ஞானப்பிரகாசர் உரை<br>ஊ. ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய<br>தேசிகர் உரை இக்கால<br>உரையாசிரியர்கள்<br>தூத்துக்குடி<br>முத்தையாபிள்ளை<br>இலங்கை திருவிளங்கம்<br>பிள்ளை, பேராசிரியர்<br>கு. சுந்தரமூர்த்தி,<br>திரு.எஸ்.எஸ். மணி<br>ஆகியோர். |
| 5. அருள்நந்தி<br>சிவாச்சாரியாரின்<br>இருபா இருபது | நமசிவாயத் தம்பிரான்<br>உரை |
| 6. திருவாதிகை மனவாசகம்<br>கடந்தாரின் உண்மை<br>விளக்கம் | பெயரறியப்படாத<br>ஆசிரியர் இருவரின்<br>உரைகள் |
| 7. உமாபதிசிவாச்சாரியாரின்<br>அ) சிவப்பிரகாசம் | அ. பெயரறியப்படாத<br>ஆசிரியரின் சிந்தனை உரை<br>ஆ. மதுரை சிவப்பிரகாசர்<br>உரை<br>இ. திருவிளங்கம் பிள்ளையின்<br>புத்துரை |
| 8. ஆ. திருவருட்பயன் | அ. பெயர் அறியப்படாத<br>ஆசிரியரின் சிந்தனை உரை<br>ஆ. நிரம்ப அழகியதேசிகர்<br>உரை<br>இ. பெயரறியப்படாத ஆசிரி<br>யரின் உரை. |
| 9. இ. வினா வெண்பா | நமசிவாயத் தம்பிரான்<br>உரை |

| | |
|---|---|
| 10. ஈ.போற்றிப் பஃறொடை | பெயரறியப்படாத ஆசிரியரின் உரை |
| 11. உ. கொடிக்கவி | பெயரறியப்படாத ஆசிரியரின் உரை |
| 12. ஊ. நெஞ்சுவிடுதூது | பெயரறியப்படாத ஆசிரியரின் உரை |
| 13. எ. உண்மைநெறி விளக்கம் | பெயரறியப்படாத ஆசிரியரின் சிந்தனை உரை. |
| | பெயரறியப்படாத மற்றும் சிலரின் உரைகள் |
| 14. ஏ. சங்கற்ப நிராகரணம் | ஞானப்பிரகாச தேசிகரின் உரை |

திருவாவடுதுறை ஆதீனமும் தருமபுர ஆதீனமும் 'பண்டார சாத்திரங்கள்' எனப் பெயரிய சாத்திரங்களைப் படைத்திருக்கின்றன. இவற்றால் சைவ சித்தாந்தத்தின் வளர்ச்சிக்கும் பரப்புதலுக்கும் போதுமான பங்களிப்பு நேர்ந்துள்ளன. இவற்றில் இரண்டு தருமபுர ஆதீனத்தை நிறுவியவரால் படைக்கப்பட்டன. இவை சிறந்த உரைகளால் வளம்பெற்றுள்ளன. தருமபுர ஆதீனத்தின் வெள்ளியம்பலத் தம்பிரான் குருஞானசம்பந்த முனிவரின் முத்தி நிச்சயத்திற்குப் பேருரை வரைந்துள்ளார்.[13] குருவின் ஞானாவரண விளக்கத்திற்கு மகாபாடியம் ஒன்றை இவர் பதிப்பித் திருக்கின்றார்.[14] வெள்ளியம்பலத் தம்பிரான் பல்கலையும் பன்மொழியும் அறிந்தவராகப் போற்றப்பட்டிருக்கின்றார்.

சமஸ்கிருத சிவஞானபோதத்திற்குச் சமஸ்கிருத உரைகள், ஸ்ரீ அதிவர்ணாச்சிரம ஆச்சாரியர் சைவசமய பரிபால சிவாக்ர யோகீந்தர ஞான சிவாச்சாரிய சுவாமிகளால் ஆக்கப்பட்டுள்ளன.[15] இவர் சிவாக்ரக யோகி எனப் பலர்க்கும் அறிமுகமானவர். இவர் சிவஞானபோதத்திற்கு இரண்டு உரைகளை எழுதினார். அவை சிவஞானபோத சங்கிரபாடியம், சிவஞான போத விஸ்தார பாடியம் என்பன. இவை இரண்டும் சிவாக்ரபாடியம் எனப் பெயர் பெற்றன. இவருடைய ஆதீனம் ஸ்கந்த பரம்பரையைச் சார்ந்ததாய்ச் சூரியனார் கோயிலில் உள்ளது. பிறப்பால் பிராமணரான சிவாக்ர யோகி தமது தீட்சையை சூரியனார்கோயில் வேளாள

ஆதீனகர்த்தரான சிவக்கொழுந்து தேசிகரிடம் பெற்றார். இவர் வர்ணத்தையும் ஆசிரமத்தையும் எளிதில் கடந்து நின்றவராதலால் இவர் அதிவர்ணாச்சிரம யோகி எனப் போற்றப் பெற்றார்.

சமஸ்கிருத சிவஞான போதத்திற்குச் சமஸ்கிருதத்தில் சுருக்க உரை ஒன்றுள்ளது. இதை எழுதியவர் தட்சிணாமூர்த்தி ஞானதேவர் என்பவர்.[16] சிவஞானபோதம் சங்கரரின் தத்துவத்திற்கு உண்மையில் ஆதரவானதே என்பதை நிறுவும் பொருட்டுச் சமஸ்கிருத சிவஞானபோதத்திற்குத் தஞ்சாவூரைச் சார்ந்த ஸ்ரீ குப்புசாமிராஜு தத்துவப்பிரகாசிகை என்ற உரையைத் தமிழில் எழுதினார்.[17] இதே முறையில் பழனிசுவாமி சுவாமிகள் சிவஞானபோதத்திற்குத் தமிழில் ஓர் உரை எழுதினார். இவரது உரைவேதாந்த தீபிகை எனப்பெறுகின்றது.[18] இத் தொடர்பில், மதிப்பிற்குரிய வேதாந்தியான வடிவேலு செட்டியாரின் தெளிபொருள் விளக்க உரை என்னும் உரை குறிப்பிடத்தக்கது.[19]

இந்தியா, குறிப்பாகத் தென்னிந்தியா பாடியக்காரர்களின் பிறப்பிடமாகும். எனினும் மகாபாடியக்காரர் சிலரே உள்ளனர். அவர்களுள் மதிப்புமிக்க சிலரில் சிவஞானயோகி ஒருவர்.

**குறிப்புகள்**

1. John C.Plot, A Philosophy of Devotion, p. 481.
2. B.N.K. Sharma, The Brahma Sutras and their Principal Commentaries, Vol. 1971, I. p. 17.
3. Ibid, p. xix.
4. Ibid, p. xxi.
5. Surendranath Das Gupta, History of Indian Philosophy, Motilal Banarsidas, Delhi, 1975.
6. B.N.K. Sharma, op.cit., p. xxii.
7. S.S.Suryanaraya Sastri, The Sivaadvaita of Srikantha, University of Madras, (1971), p. 24.
8. Sri Nilakantha Sivaachariyar Arulicheytha Bramasutthira Sivaatthuvitha Saiva Paadiam. Translated by Kasivasi Senthinatha Ayyar (1907). Printed in the 'Senthinatha Swamy Press, Tirumangalam.

The English translation of Srikantha Bhaashya by A. Mahadeva Sastri was serialised in the monthly called the Siddhanta Dipika (The Light of Truth) between the years 1898 and 1906 (Vols: 1-7).

A free English translation appeared in two volumes in 1958 (Calcutta). It was by Mrs. Roma Chaudhuri. The work was entitled 'Doctrine óf Srikantha.'

9. பாலசுந்தரத்தின் தென்னூல் மூன்றாம் பகுதியில் முன்னுரைக் கண் "இந்தப் படைப்புத் தலைசிறந்த ஒன்று என நான் கூறும்போது நான் மிகைப்படுத்திக் கூறவில்லை. இக்கால மொழிமரபில் அமைந்த இதன் நூற்பா அமைப்பு இலக்கண ஆர்வலரை பலமணி நேரம் நிமிர்ந்து கருத்தூன்றிக் கற்கவும் இறுதியில் அறிவுடையவராக மேம்படவும் உற்சாக மூட்டு கிறது" என்று கூறியிருந்தேன்.

10. தெ. ஞானசுந்தரம், வைணவ உரை விளக்கம் சென்னை, (1989).

11 Tirukkovaiyar, T.N. Ramachandras, Tamil University, Thanjavur, 1989.

12. திருமந்திரம், சமாஜம், செய்யுள் 2109இ (1940).

13. முத்திநிச்சயப் பேருரை, தருமபுர ஆதீனம், தருமபுரம் (1946).

14. ஞானாவரண விளக்கமும் மாபாடியமும், தருமபுர ஆதீனம், (1957-59)

15. The Sivagnaanabhoda Sangraha of Sivaagra Yogin by K. Jayammal, Radhakrishnan Institute for Advanced Study in Pholosophy, University of Madras (1993).

16. வடமொழி நூல்களில் சைவசித்தாந்தம் பகுதி-2, கு. சுந்தர மூர்த்தி, சர்வோத இலக்கியப் பண்ணை, மதுரை (1977),

17. வி.குப்புசாமி மகராஜ், சிவஞானபோத மூலமும் தத்துவப் பிரகாசிகை என்னும் தமிழுரையும், தஞ்சாவூர், (1916).

18. பழனிச்சாமி சுவாமிகள், ஸ்ரீசிவஞான போதமும் வேதாந்த தீபிகை உரையும், கும்பகோணம், (1922).

19. கோ. வடிவேலு செட்டியார், சிவஞானபோத மூலமும் தெளிபொருள் விளக்க உரையும், சென்னை, (1929).

# 4

## சிவஞான யோகி

**சி**வஞான யோகியின் சரியான பிறந்த நாள் நமக்குத் தெரிய வில்லை. அவர் 1785இல் காலமானார் என்பது நன்கு நிறுவப்பெற்ற உண்மையாகும். அவர் முப்பத்திரண்டு வயதாயிருக்கும் போது காலமானார் என்பது உறுதி செய்யப்பட்டுள்ளது. அவருடைய குறுகிய வாழ்க்கை அளவை ஆதிசங்கர பகவத் பாதருடையதோடு ஒப்பீட்டுக்கான ஆர்வமுறலாம் என எண்ணப்பட்டது. இந்த வலிந்த ஒப்பீடு பயனற்ற வெற்று முயற்சியாகும். குறுகிய காலம் வாழ்ந்த வாழ்க்கை அவ்வாழ்க்கையின் பெருமையைக் கூறும் அடையளமாகாது. அதனோடு நீண்ட கால வாழ்க்கையும் தவிர்க்க முடியாதவாறு ஒரு பெருவாழ்த்துக்கு உரியதாகாது. நம்முடைய யோகி திருவாவடுதுறை ஆதீனத்தின் பத்து, பதினொன்று, பன்னிரண்டாம் பட்டங்களின் காலத்தில் செயலோடு வாழ்ந்தவர். அவர் தம்முடன் வாழும் தம்பிரான்களைப் போலத் தமக்குரிய இன்பதுன்பங்களோடு, ஒரு வேளை, இன்பத்தை விடத் துன்பத்தோடு வாழ்ந்திருக்க வேண்டும். மடத்துத் தலைவர் கள் தூய்மையானவர்கள் என்பதில் ஐயமில்லை. எனினும் அவர்கள் முன்னரே அறிந்து கூறமுடியாத ஒரு விளங்காப் போக்குடையவர்கள். ஒருவேளை இந்த நிலை அவர்களுடைய மாணவர்களைச் சோதிப்பதற்காக மேற்கொண்டதாக இருக்கலாம். அவர்களைக் குறித்த கருத்துக்களை அவர்கள் செல்லும் நெறி அறியாது பேசுவதை நாம் தவிர்க்கலாம். அழுத்தமான உண்மைகள் வெளிப்பட்டே தீரும். ஓர் ஆதினத்தின் தலைவர் கடுஞ்சீற்ற நிலையிலும் இருப்பார். மிகுந்த மென்மை நிலையிலும் சஞ் சரிப்பார். நம்முடைய யோகி, கவலை, வலி, கொண்ட காலங் களையும் அவற்றைப் போலவே, இறும்பூதும் உவகையும் உற்ற காலங்களையும் பெற்றிருந்திருக்க வேண்டும். எப்படியிருப்பினும், தம்பிரானின் வாழ்க்கை ஒரு மலர்ப் படுக்கையன்று.

நம் யோகியின் வாழ்க்கையைக் குறித்து மிகுதியும் அறியப்பட வில்லை. அவர் தொடர்பாக வழக்கில் இடம்பெற்றுவிட்ட சில

நிகழ்ச்சிகள் உண்மையானவையே அல்ல. அவர் தாமிரவருணிக் கரையில் விக்கிரமசிங்கபுரத்தில் பிறந்தார். அவருடைய தந்தையார் பெயர் ஆனந்தக் கூத்தர். அவர் பிறந்தவுடன் முக்களாலிங்கர் எனப் பெயரிடப்பட்டார். அவருடைய தாயார் மயிலம்மை என்னும் அழகான பெயருடையவர். அவருடைய முன்னோர்கள் தீவிரச் சிவ பக்தர்கள்; அவர்கள் சைவ வேளாளர்கள். அவர் வயதுக்கு மீறிய அறிவுடையவராக இருந்தார். அவர் தம் இளமையில் தமிழிலும் சமஸ்கிருதத்திலும் சமமான ஆர்வத்தோடு தேர்ச்சி பெற்றார். அவர் இயல்பாகவே தருக்க ஆராய்ச்சியிலும், அறிவுமிக்க உசாவல்களிலும் அளவுமீறிய ஆற்றலுடையவராக இருந்தார்.

எந்தப் பொருளையும் கற்கத் தொடங்கிய விரைவிலோ, பின்னரோ, அதனில் தலைமை வாய்ந்தவராக ஆகாமல் அவர் விட்டதில்லை. அவர் ஆற்றல்மிக்க வாதவன்மையுடையவர். அவர் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்தவராக இருந்தார். அவர் அளவிலா மேன்மைமிக்க ஆசிரியர். அவருடைய மாணவர்கள் அவரைப் போற்றினர். அவர் தனித்தன்மை மிக்க பாவலர். அவர் திறம் வாய்ந்தவர். நுட்பமிக்க மொழிபெயர்ப்பாளர்; அவர் ஒரு சமயநூற் புலவர்; மகாபாடியக்காரர்; அவர் மிகுதியாகப் பயணம் செய்தவர். அவர் இறுதியில் திருவாவடுதுறையில் காலம் சென்றார். இவையெல்லாம் மறுக்கமுடியாத உண்மைகளாம். எனினும் அவர் எவ்வளவு காலம் வாழ்ந்தார் என்பது யாருக்கும் தெரியாது. அவருடைய வாழ்க்கையைக் குறித்து அறிஞர் கூறும் பல செய்திகள் ஒன்றுக்கொன்று மாறுபட்டவையாக உள்ளன.

டாக்டர் உவே. சாமிநாத ஐயரின் புகழ்மிக்க ஆசான் ஒப்பற்ற அறிஞர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை என்ற பெயருடையவர், 1815 முதல் 1877 முடிய வாழ்ந்தவர். இவர் நம் யோகியைக் குறித்து உண்மையான வரலாற்றை நமக்களித்திருக்க முடியும். ஆனால் அவரால் எழுதப்பட்ட படைப்பு முற்றுப் பெறாததாக உள்ளது. அவர் தம் படைப்பின் தொடக்கத்திலேயே, புராணம் எழுதும் போக்கில் (ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த) அகத்திய முனிவரின் வாழ்த்துப் பெற்ற குடிவழியின் ஏழாவது தலைமுறைக்கு நம் யோகி உரியவர் என்கிறார்.[1]

யோகியின் மேன்மையால் ஈர்க்கப்பெற்ற கா.சுப்பிரமணிய பிள்ளை யோகியின் வாழ்க்கையையும் அருஞ்செயல்களையும்

குறித்து ஒரு நூலை எழுதினார். யோகி பத்து வய்தாக இருந்த பள்ளிப் பருவத்தில் அவருடைய ஊரில் திருவாவடுதுறை ஆதீனத் தம்பிரான்கள் சிலரைக் கண்டார் என்றும், அது சிவன் மீதும் அப்பெருமானின் அடியவர்கள் மீதும் உள்ளார்ந்த பக்தி உருவாகத் தூண்டியதென்றும், நம் யோகி அத்தம்பிரான்களைத் தம் இல்லத்திற்கு அழைக்க அவர்களும் அவருடைய வேண்டுகோளுக்கு இணங்கினரென்றும், யோகி தம் அன்னையிடம் தம்பிரான்களுக்குச் சுவையான உணவு படைக்க வேண்ட, தம்பிரான்களுக்கு மகிழ்ச்சி நிரம்ப விருந்தளிக்கப்பட்டதென்றும், இதனால் யோகி, புனித விருந்தினருக்குத்தம் தாயளித்த விருந்தினால் மீக்கூர்ந்த மகிழ்ச்சி யுற்று உள்ளம்பொங்கித் தம் தாயின் நற்பண்புகளைப் புகழ்ந்து ஒரு செய்யுள்பாடினாரென்றும் கூறுகின்றார்.[2] மேலும் அவர் விரும்பியவாறே, அவர் விருந்தினரின் பொறுப்பில் ஒப்படைக்கப் பட்டாரென்றும், அப்போது தம்பிரான்கள் தற்காலிகமாகத் தங்கியிருந்து அவரையும் திருவாவடுதுறைக்கு அழைத்துச் சென்றனரென்றும், இவ்வாறாக அவர் அப்போதைய திருவாவடுதுறை ஆதீனகர்த்தரான ஸ்ரீலஸ்ரீ வேலப்பதேசிகரின் அருளைப் பெற்றவராக ஆனாரென்றும் கூறுகின்றார். மேலும் மடத்தின் இளைய சந்நிதானம் பின்வேலப்ப தேசிகரிடம் தீட்சை பெற்றதாகவும் அவர் கூறுகின்றார்.[3]

டாக்டர் சாமி ஐயாவின் தகுதியைக் குறித்துக் கூறத்தக்கது யாதெனில் நம் யோகியைக் குறித்து ஒப்புக்கொள்ளத்தக்க வரலாற்றை அந்த அறிஞர் ஒருவரே எழுதியுள்ளார் என்பதாகும். அவர் ஆய்வேட்டின் ஒரு பகுதியாக அமைந்துள்ள நம் யோகியின் சுருகக வரலாறு நம் போற்றுதலுக்கு உரியதாகும்.[4] அதன்மேலும் குரு பரம்பரை விளக்கம் என்னும் நூலிலிருந்து சில உண்மைகளை நாம் திரட்டிக்கொள்ள முடியும்.[5] இந்நூலில் கூறப்பட்டுள்ள உண்மைகள் சுப்பிரமணிய பிள்ளை கூறும் விவரங்களோடு மாறு பட்டுள்ளன.

திருவாவடுதுறை ஆதீனம் குறித்த சில உண்மைகள், படிப்பவர்க்குச் சரியான பின்னணியை அளிக்கும் வகையில் இங்கே கூறப்படுகின்றன. சைவ சித்தாந்த சந்தானாசாரியர் நால்வர். அவர்கள் மெய்கண்டார். அருள்நந்தி சிவாச்சாரியார், மறைஞான சம்பந்த தேசிகர், உமாபதி சிவாச்சாரியார் ஆகியவர்கள் ஆவர்.

நான்காவது ஆச்சாரியாருக்குப் பிறகு பரம்பரை, தருமபுர ஆதீனம் என்றும் திருவாவடுதுறை ஆதீனம் என்றும் வெவ்வேறு திசைகளில் செல்லும் இரு கிளைகளாகப் பிரிந்தது. உமாபதியின் வழியினராகச் சீகாழி அருள் நமச்சிவாயரை முடிவு செய்ய வேண்டும். அவர் தமக்குரிய எல்லாத் தொடர்களையும் துண்டித்துக் கொண்டு ஒரு மச்சுக்குள் இருந்தமையால மச்சு செட்டியார் என அறியப்பட்டிருந்தார். சித்தர் சிவப்பிரகாசர் அவருடைய மாணவர். மூவலூரைச் சேர்ந்த ஸ்ரீவைத்தியநாதர் சிவப்பிரகாசரால் சைவாகம நெறியில் சேர்க்கப்பட்டு, அவருக்குச் சிவப்பிரகாசர் தம் ஆசிரியர் பெயரான நமசிவாயர் என்பதை அளித்தார். இவர் திருவாவடுதுறை ஆதீனத்தை நிறுவினார். இவர் மடத்தின் முதல் தலைவரானார். இவரை அடுத்து ஸ்ரீ அம்பலவாண தேசிகரும், அவரை அடுத்து உருத்திரகோடி தேசிகரும் பட்டம் பெற்றனர். தேசிகரை அடுத்து ஸ்ரீ வேலப்ப தேசிகர், ஸ்ரீ இராமலிங்க தேசிகர் என்பார் இடம் பெற்றனர். பத்தாவது தலைவர் ஸ்ரீ வேலப்ப தேசிகராவார். நம் யோகி, முன்வேலப்ப தேசிகர் எனப் பெற்ற இத்தலைவருக்குச் சமகாலத்து வேலப்ப தேசிகர் என்பவரை நியமித்தார். அக்காலத்து ஆதீன நியதிப்படி மடத்துத் தலைவரின் ஆட்சிபீடம் திருவாவடுதுறையாகும். அவருடைய ஆடசிக்காலத்தில் இளையவர் சுசீந்திரத்தில் தங்கியிருந்து சைவ சித்தாந்தத்தைப் பரப்பும் பணியைப் புரிவார்.

சுசீந்திரத்தில் இளைய சந்நிதானமாக அம்மடத்தின் தலைமை யேற்றிருந்த பின்வேலப்ப தேசிகரைக் குருவாகக் கொண்ட நம் யோகி தொடக்கத்தில் சுசீந்திரத்தில் தங்கியிருந்தார் என்று குரு பரம்பரை விளக்கம்[6] தெளிவுபடுத்துகின்றது. நம் யோகி இங்குதான் தம் கல்வியைத் தொடர்ந்தார். இளைய சந்நிதானத்திடமிருந்து நம் யோகி தீட்சையைப் பெற்றார். அதன் பின் முக்களாலிங்கர் சிவஞானசுவாமி எனப் பெயர் பெற்றார்.[7] இவை தெளிவான உண்மைகளாகும். எப்படியிருப்பினும் அவர் தமது சொந்தச் சிற்றூருக்கு அண்மையில் உள்ள சுசீந்திரத்தில் தமக்குரிய தீட்சை யைப் பெற்றார் என உய்த்துணர்வதும், அவர் ஏறத்தாழ 600 கிலோமீட்டர் தொலைவான திருவாவடுதுறையில் பெறவில்லை என்றறிவதும், பெரிதும் அறிவுக்குப் பொருத்தமானவையாக உள்ளன. டாக்டர் சாமி ஐயா நம் யோகியின் செய்யுள் ஒன்றில் பதிவாகியுள்ள நிகழ்விலிருந்து தமக்குரிய கருத்தைக் காண்கிறார்.

தவசு பிள்ளை (சமையற்காரர்) யோகிக்குப் பிடித்தமான உணவுப் பட்டியலை பணிவோடு வேண்டும்போது, அவர் அவருடைய உணவுப் பட்டியலை ஒரு செய்யுளில் அடக்கிக் கூறுகின்றார். அப்பாடல் வருமாறு:

சற்றே துவையல் அரை தம்பி ஒரு பச்சடி வை
வற்றல்ஏ தேனும் வறுத்துவை - குற்றமில்லை
காயமிட்டுக் கீரை கடை கம்மெனவே மிளகு
காயரைத்து வைப்பாய் கறி.[8]

இப்பாட்டில் 'கம்மெனவே மிளகு காயரைத்து' என்பது கவனத்திற்குரியது. கேரளத்திலும் அதன் சுற்றுவட்டாரங்களிலுமே புதிய பச்சைமிளகு கிடைக்கும். சோழ நாட்டில் காய்ந்த மிளகு மட்டுமே பயன்படுத்தப்படும். எனவே டாக்டர் சாமி ஐயாவின் கருத்துப்படி, கேள்விக்குரிய இச்செய்யுள் சுசீந்திரத்தில் புனையப் பட்டதென்றும், திருவாவடுதுறையில் புனையப்படவில்லை யென்றும் ஊகிக்க இடமுண்டு.

நம் யோகி சுசீந்திரத்தைப் பல்லாண்டுகள் தங்குமிடமாகக் கொண்டிருந்தார். இளைய சந்நிதானம் திருவாவடுதுறையில் உள்ள தம் குருவைத் தரிசனம் செய்ய எண்ணியபோது நம் யோகியோடு சுசீந்திரத்தை விட்டுச் சென்றார். அவர் செல்லும் வழியில் செப்பறை என்றும் கூறப்பெறும் இராசவல்லிபுரத்தில் தற்காலிகமாகத் தங்கியிருந்தார். அவ்விடத்தில் நம் யோகி வேலப்ப தேசிகர் திருமுன் அகிலாண்டேசுவரி அம்மையின் பெருமை குறித்துப் பத்துப் பாடல்களைப் பாடினார். தேசிகர் அவர் சென்ற வழியில் நம் யோகியோடும் மற்றவர்களோடும் சேர்ந்து பல கோயில்களில் வழிபாடு செய்தார். நிறைவாக அவர் பேரூரை அடைந்து அங்குத் தம் உயிரை இழந்தார்.[9] அவர்க்கு இறுதிச் சடங்குகளை இயற்றிய பின் நம் யோகியும் மற்றவர்களும், இளைய சந்நிதானம் இறந்த செய்தியைச் சந்நிதானத்திற்குத் தெரிவிக்கத் திருவாவடுதுறை வந்தனர்.

நம் யோகியின் வரலாற்றில் நாம் மூன்று வேலப்ப தேசிகர் களைக் காண்கிறோம். இது சிறிது குழப்பத்தை உண்டாக்குகிறது. இம்மூவரும் சரியாக அடையாளம் கண்டு உரைக்கப்படவேண்டும். திருவாவடுதுறை ஆதினத்தின் பத்தாவது தலைவர் இந்த மூவரில் முதல்வராவார். அவர் தம்முடைய பெயரையே கொண்ட

ஒருவரைத் தம் வாரிசாக நியமித்தார். இவ்விளையவரின் இருப்பிடம் சுசீந்திரமாகும். வாய்ப்புக் கேடாக நாம் முன்பே குறித்தவாறு அவர் பேரூரில் காலமானார். மடத்துத் தலைவர் அதே பெயருடையவராக இருந்தார். எனவே அவர் பின்வேலப்ப தேசிகர் (இரண்டாம் வேலப்ப தேசிகர்) எனப் பெயர் பெற்றார். இந்த தேசிகர் மேல்நிகழ்வில், ஆதீனத்தின் பதினோராம் தலைவரானார். குழப்பத்தைத் தவிர்க்க நாம் அவரவர் பெயர்களோடு அவரவர் பரிபூரணம் அடைந்த இடங்களின் பெயர்களையும் இணைத்துக் காண்போம்.[10] பத்தாவது தலைவரைச் சங்கரநாராயணர்கோயில் வேலப்ப தேசிகர் எனக் குறிக்கலாம். சுசீந்திரத்தில்தங்கியிருந்த இளையவேலப்ப தேசிகரைப் பேரூர் வேலப்பதேசிகர் எனக் குறிக்கலாம். பதினோராம் பட்டத்துத் தலைவரைத் திருப்பெருந்துறை வேலப்ப தேசிகர் எனக் குறிக்கலாம். நம் யோகி இம் மூன்று குரவரோடும் இருந்தவராவார். இவர் சந்நிதானமாகக் குறிக்கப்பட்டு, ஆன்மீக அரியணை ஏறுமுன், இளமையிலேயே உயிர்நீத்த பேரூர் வேலப்ப தேசிகரின் நேரடி மாணவர். பேரூர் வேலப்ப தேசிகர் இவருடைய நேரடியான குரு என்பதும் அயற்சான்றால் உறுதிப்படுத்தப் பட்டுள்ளது. பதினோராவது பட்டத்தவர் திருப்பாப்புலியூர் புராண ஆசிரியராவார். பஞ்சாட்சரப் பஃறொடையின் ஆசிரியர் பேரூர் வேலப்ப தேசிகராவார். இப்பிற்கால இலக்கியப் படைப்பில், பஞ்சாட்சர மந்திரத்தை எப்படி ஓதுவது என்றும், அதனில் எவ்வாறு ஆழ்ந்திருப்பதென்றும் விரித்துரைக்கப்படுகின்றன. நம் யோகியின் காஞ்சிப் புராணச் செய்யுளொன்றில் நம் யோகி அவருடைய கொள்கைப்படியும் அதனை விளக்கினார். "அவர் மேலும் அதனை ஓதும் வகையைத் தெளிவாகக் கற்பித்ததோடு அதனுடைய ஐந்து அவத்தைகளிலும் (நிலைகள்) ஆழ்ந்திருப்பது பற்றியும் தெளிவாகக் கற்பித்தார். மேலும் அவர் ஐந்தெழுத்து மந்திரத்தின் உட்பொருளை உண்மையாக எனக்கு அறிவித்ததோடு, சிவானந்தத்தில் (அஃதிருந்தபடி) அமிழ்த்தினார். அடி நாயேனாகிய என்னைக் குறித்தும் அவருக்கு நான் ஆற்றிய தொண்டைக் குறித்தும் அவர் நிறைவடைந்திருந்தார். என் தலையினை அவர் திருவடிகளில் சாய்க்கிறேன்"[11] என்று கூறுகின்றார். பேரூர் வேலப்ப தேசிகர் எழுதிய பஞ்சாட்சரப் பஃறொடையின் சாரத்தை மேற்கண்ட கூற்றாக நம் யோகி வடித்துள்ளார்.

நம் யோகி திருவாவடுதுறையில் சில ஆண்டுகள் தங்கி யிருந்தார். அவர் எவ்வளவு காலம் அங்குத் தங்கியிருந்தார் என்பதை நாம் அறியவில்லை. இத்தூய இடத்தில் அவர் தம் காலத்தைப் பயனுள்ள வகையில் செலவழித்தார். அவர் தமிழ் இலக்கண நூலான நன்னூலுக்கு உரை எழுதுவதில் சங்கர நமச்சிவாயருக்கு உதவிபுரிந்தார். மேலும் அவர் திருவாரூர் வைத்தியநாத நாவலரின் இலக்கண விளக்கத்திற்கு மறுப்பாக இலக்கண விளக்கச் சூறாவளி என்னும் நூலை எழுதினார். திருவாவடுதுறை ஆதீன அடியவர் ஒருவர் சித்தாந்த மரபு என்ற நூலை எழுதினார். யாரோ ஒருவர் இந்நூலை மறுத்து எழுதினார். இம்மறுப்பை மறுப்பதற்கு நம் யோகி சித்தாந்த மரபு கண்டன கண்டனம் என்ற நூலை எழுதினார். சிவஞானபோதத்திற்கு முன்பு எழுதப்பட்ட உரைகளில் நிறைவடையாததால் நம் யோகி 'சிற்றுரை' என்ற உரையினை எழுதினார். சிவஞான சித்தியாரின் சுபக்கத்திற்கும் இவர் ஓர் உரை எழுதினார்.[12]

எந்த ஞானியும் அவரது சொந்த ஊரில் மதிக்கப்பட்டதில்லை. அறிவுமிக்க ஒருவர் அவருடைய வட்டாரத்தில் அரிதாகவே மதிக்கப் படுவார். நம் யோகியின் விதியும் இதற்கு மாறுபட்டதில்லை. வழக்கத்திற்கு மாறான சூழல்களால், மடத்தின் வாழ்க்கை கடின மானதாக ஆக்கப்படுகிறது. மடத்துப் பெருச்சாளிகளையும், தூய்மை யான இடங்களில் கப்பல்களின் அடியில் ஒட்டிக் கொள்ளும் நத்தைகளையும் விலாங்கு மீன்களையும் போன்ற குறும்பு செய்யும் வீணர்களையும் ஒழிப்பது இயலாத செயல் என்பதைக் காண நாம் வருந்துகிறோம். ஆதீனத்தின் சமையற்கட்டில் நிலவிய வருந்தத்தக்க சூழல் குறித்து நம் யோகியின் தனிச்செய்யுள் ஒன்று அளந்து காட்டுகின்றது.[13] பதினோராம் சந்நிதானமான, பின் வேலப்ப தேசிகர் காலமான பின் நம் யோகி காஞ்சிபுரத்திற்குச் சென்றார்.

காஞ்சிபுரத்தில் பிள்ளையார்பாளையமே நம் யோகியின் தங்குமிடமாகப் பல்லாண்டுகள் இருந்தது.[14] இக்காலத்திலேயே இவர் 'நாடிய பொருள்'[15] எனத் தொடங்கும் கம்ப இராமாயண பல சுருதிப் பாடலுக்கு ஒரு திறனாய்வு எழுதினார். இந்தத் திறனாய்வு யோகி எப்பொழுதாவது உண்டாகும் மனநிலையில் ஈடுபடும் பொருள் கொள்ளும் முறையில் வேறுபடும் சொற் புரட்டுத் திறனை எடுத்துரைக்கிறது. அவர் இத்திறனாய்வை

எழுதுகின்ற காலத்திலெல்லாம் கம்பரின் பெருமையை நன்கு அறிந்திருந்தார் என்பது தெளிவாக அறியப்பெறுகின்றது. இலங்கை ஞானப்பிரகாசர் சிவஞான சித்தியாருக்குச் சிவசமவாத உரை என்ற பெயரில் எழுதியிருந்த உரையை மறுப்பதற்கு 'எடுத்து என்னும் சொல்லுக்கு இட்ட வைரக் குப்பாயம்'[16] என்ற நூலை நம் யோகி எழுதியது காஞ்சியில் இருந்த காலத்திலாகும். இந் நூலில் கூறியுள்ள கருத்துக்களை வலிமைப்படுத்த இவர் 'சிவ சமவாத உரை மறுப்பு' என்ற மற்றொரு நூலை எழுதினார். காஞ்சியில் நம் யோகி இருந்தபோது, தொல்காப்பியச் சூத்திர விருத்தி என்னும் இலக்கண நூலை எழுதியதோடு சர்வாத்ம சம்புவின் சித்தாந்த பிரகாசிகை, ஹரதத்த சிவாச்சாரியாரின் சுலோக பஞ்சகம், அப்பைய தீட்சிதரின் சிவ தத்துவ விளக்கம்' என்ற நூல்களையும் மொழிபெயர்த்ததாக அருணை வடிவேலு முதலியார் கூறுகின்றார்.[17] காஞ்சி மக்களால் நம் யோகி பெரிதும் மதிக்கப்பட்டார் என்பது ஐயத்துக்கிடமற்ற செய்தியாகும். காஞ்சி மேதைமையின் புகலிடமன்றோ![18]

நம் யோகி காஞ்சியிலும் அதன் சுற்றுப்புறத்திலுமுள்ள தெய்வத் திருக்கோயில்களுக்குச் சென்றார். அவர் திருவொற்றியூரில் தங்கியிருந்தபோது சின்னையா முதலியார் என்னும் இலக்கியப் புரவலர் மணலியில் உள்ள தம் வீட்டுக்கு யோகியை அழைத்தார். நம் யோகி மணலியில் வேதங்களையும் ஆகமங்களையும் கற்றார். அவருடைய மாணவர்களின் அழைப்பின் பேரில் குளத்தூர் தொட்டிக்கலை, மாங்காடு, திருமுல்லைவாயில் ஆகிய இடங்களுக்குச் சென்றதுடன் அவ்விடங்களில் தங்கியு மிருந்தார். அவ்வாறு அவர் தங்கியிருந்த போது குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், குளத்தூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி, திருமுல்லைவாயில் அந்தாதி ஆகியவற்றை இயற்றினார். அவர் காஞ்சிக்கு ஒரு குறிக்கோளுடன் திரும்பினார். அவர் இக்காலத்தில் நிறைந்த புலமையாளராக இருந்தார்.அவர் பல்வகை ஆற்றல்களோடு விளங்கினார். கல்வியே உருக்கொண்டவராகத் திகழ்ந்தார். நம் யோகியைத் தவிர வேறெவர்க்கும் இந்தச் சால்புரை இதுவரை பொருந்தியதில்லை. அவருடைய தவ வாழ்க்கை அதன் முழுப்பயனை அவர்க்கு அளிப்பதற்கு ஆயத்தமாக இருந்தது. காலத்தால் மறைந்து விடுவதற்குச் சைவ உலகம் இடம் கொடுக்காத திராவிட மாபாடியம் என்ற மெய்கண்டாரின் சிவஞானபோதத்திற்கான பேருரையை

யோகி எழுதினார். இது நம் யோகியின் இலக்கியப் பெரும் படைப்பாகும். இப்பணி, நவமணிகளில் மதிப்புமிக்கதெனும்படி சிறப்புமிக்கதாகும். இதனைக் குறித்த மிகுந்த செய்திகளை அடுத்த இயலில் காணலாம்.

நம் யோகி தம் பணியை நிறைவுசெய்யும் நோக்கோடு காஞ்சிபுரத்தை விட்டுத் திருவாவடுதுறை சேர்ந்தார். நம் யோகியின் சாதனை குறித்து, மடத்தை ஆட்சி செய்யும் ஆதீனத் தலைவர் அளவிடமுடியாத நிலையில் நிறைவுபெற்றவராய் இருந்தார். யோகி இக்கால அளவில் கம்பர் அந்தாதி, திருவேகம்பர் ஆனந்தக் களிப்பு ஆகிய நூல்களை எழுதினார். அதன் பின்பு, காஞ்சிப் புராணத்தைத் தமிழில் படைக்கும் மொழியாக்கப்பணியில் தம்மை ஈடுபடுத்திக் கொள்ளத் தொடங்கினார். இப்புராண அரங்கேற்றம் காஞ்சியில் நிகழ்ந்தது. இதனைக் குறித்த மேலும் செய்திகளைத் தனி இயலில் காணலாம்.

டாக்டர் உ.வே.சாமிநாதையர் அவர்களின் படைப்பான 'ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களின் சரித்திரம்'[19] என்ற நூல் நம் யோகிகளைக் குறித்துச் சில உண்மைகளை அளிக்கின்றது. மீனாட்சிசுந்தரம் பிள்ளை பெங்களூரில் தங்கியிருந்தபோது, நம் யோகியின் சமையல்காரர் இன்னும் அங்கு இருப்பதாக அறிந்தார். அவரைச் சென்று கண்டு பிள்ளையவர்கள் அவரிடமிருந்து சில செய்திகளை அறிந்துகொண்டார். அச்செய்திகள் கீழ்வருமாறு: சிவஞான முனிவர் காஞ்சிபுரத்தில் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான மடத்தில் தங்கியிருந்தார். அந்த மடத்தில் மெய்கண்ட தேவருக்கு ஒரு கோயில் இருந்தது. அந்நகரில் இருந்த செங்குந்தர் மக்கள் நம் யோகியின் தேவைகளைக் கவனித்துக் கொண்டனர். ஒவ்வொரு குடும்பமும் அவருடைய தேவைகளை முறைவைத்துச் செய்து வந்தது. அவர் அங்குத் தங்கியிருந்தபோது காஞ்சிப் புராணத்தையும் சிவஞான போத பாடியத்தையும் இயற்றினார். தம்முடைய புரவலர்கள் பலரைச் சைவாகமநெறிக்கண் செலுத்தி, பஞ்சாட்சர உபதேசத்தை அருளி, சிவபூசை ஆற்றுவதற்கும் உரிமை வழங்கினார். அவர் சென்னையில் தங்கியிருந்தபோது, அவர்க்குத் தேவையானவற்றைப் பார்த்துக் கொள்ளும் பணி செல்வாக்குமிக்க சான்றோர்களால் மேற்கொள்ளப்பட்டது. சில காரணங்களுக்காகத் தாம் ஒரு மண்டல காலம் (45 நாள்) ஒரு

நோன்பு நோற்பதாக அப்பெரியோரிடம் கூறிய யோகிகள் பால், பழங்களை மட்டுமே உணவாகக் கொண்டார்.[20] இவ்விவரங்களைக் கூறிய சமையற்காரருக்கு அப்போது தொண்ணூறு வயது என்று டாக்டர் ஐயர் தெரிவிக்கின்றார்.

தம்முடைய வாழ்வின் இறுதி நாட்களைக் கழிக்க யோகி திருவாவடுதுறைக்குத் திரும்பினார். அவர் ஒரு முழு வாழ்க்கையை வாழ்ந்திருக்கிறார். சைவாகம நெறியை மிகுந்த அக்கறையுடன் வளர்க்கும் மனிதர்களை அவர் அறிமுகப்படுத்தினார். அவருடைய மாணவர்கள் எண்ணிக்கையில் பலர். அவர்களுள் பன்னிருவர் தலையாயவர்கள், அவர்கள் 1. கச்சியப்ப முனிவர், 2. தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர், 3. இலக்கணம் சிதம்பரநாத முனிவர், 4. காஞ்சி சிதம்பர முனிவர், 5. இராமநாதபுரம் சோமசுந்தரம் பிள்ளை, 6. காஞ்சி சரவணப் பத்தர், 7. காஞ்சி முத்துக்குமார தேசிகர், 8. திருமுக்கூடல் சந்திரசேகர முதலியார், 9. கரவாந்தண்டல் அடைக்கலம் காத்த முதலியார், 10. கடம்பர் கோயில் கலியாண சுந்தர உபாத்தியாயர், 11. திருச்சிற்றம்பல தேசிகர், 12. பிள்ளையார் பாளையம் முனியப்ப முதலியார் என்போராவர். இவருள், காஞ்சிப்புராணத்தின் இரண்டாம் பாகம், திருவானைக்காப் புராணம், பூவாளூர்ப் புராணம், பேரூர்ப் புராணம், திருத்தணிகைப் புராணம், விநாயகர் புராணம் மற்றும் பிற பிரபந்தங்களை இயற்றிய கச்சியப்ப முனிவர், யோகிகளின் மாணவர் வரிசையில் முதல்வராவார்.

நம் யோகி திருவாவடுதுறைக்குத் திரும்பியமைக்குக் குறிப்பிட்ட காரணம் உண்டு. அவருடைய மாணவரே ஆதீனத்தின் அப்போதைய தலைவராயிருந்தார்.அவர் திருவம்பல தேசிகர் என்னும் பெயரினர். அறிஞர்களிடையே பேசப்பெற்ற ஒரு நிகழ்ச்சி புகழ்மிக்கதாகும். திருவாவடுதுறையில் யோகிகள் விரும்பி வரவேற்கப்பட்ட நிலையில் மடத்தை ஆட்சி செய்யும் தலைவருக்குத் தம் வணக்கத்தைத் தெரிவிக்க வந்தபோது சிவஞானத்தின் அருள் (மெய்யறிவு/ சிவமேயான அறிவு) தமக்குக் கிட்டியிருப்பதாகக் கூறினார். அதற்கு நம் யோகி, 'சிவஞானம் திருவம்பலத்திற்கு உரியது' என அடக்கமாக விடையிறுத்ததாகக் கூறுவர். சிவன் எப்போதும் நடனமிடும் அரங்கு திருவலம்பலமாகுமன்றோ!

நம் யோகி 1785ஆம் ஆண்டு சித்திரை மாதம் எட்டாம் நாள் ஞாயிற்றுக்கிழமை பரிபூரணம் அடைந்தார். அவருடைய சமாதி

(அடக்கம் செய்யப்பட்ட இடம்) சைவ சித்தாந்திகள் வழிபடும் இடமாகும். நம் யோகியின் பழைய உருவ ஓவியம் ஆதீனச்சுவருக்கு அழகு சேர்க்கிறது. இப்படத்தைக் குறிக்கும் வாசகம்..." சிவமயம், இது சிவஞான யோகிகளின் தெய்வீகத் திருவுருவாகும். இவர்கள் திராவிட மகா பாஷ்யகாரர். இவர்கள் ஆதீனத்தின் குலதெய்வமாகத் தோன்றியவர். இவர்கள் திருக்கைலாய பரம்பரையின் ஸ்ரீபஞ் சாட்சர தேசிகரின் திருவருளை ஏத்தும் சிவஞான பாடியத்தின் வழி, ஆன்மீகக் கல்வியின் அளப்பரிய செல்வத்தை நிலைபெறச் செய்தவர்."[21] உலகின் எப்பகுதியிலும் எந்த அறிஞரும் நம் யோகி பெற்ற திருத்தகைமையினைப் பெற்றதில்லை. ஆதீனத்தின் பதினாறாம் அதிபரும், வள்ளன்மை மிக்க புரவலருமான ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர், யோகியை 'ஆதீனத்தின் குலதெய்வம்' என்று குறிப்பிடுவதில் நிறைவடைபவர் ஆவார்.[22] நம் யோகி திருவாவடுதுறை ஆதீனத்தின் குலதெய்வம் மட்டுமல்லர்; அவர் சைவ சித்தாந்திகளின் குடும்பங்களுக்கெல்லாம் குலதெய்வமாவார் என்று நாம் அடக்கத்தோடு கூறலாம்.

**குறிப்புகள்**

1. ஸ்ரீ சிவஞான யோகிகள் சரித்திரம், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை, இரண்டாம் பகுதி, செய்யுட்கள் 25-26, திருவாவடுதுறை ஆதீனம் (1963).

2. அருந்ததியென் னம்மை அடியவர்கட் கென்றும்
திருந்த வமுதளிக்குஞ் செல்வி - பொருந்தவே
ஆனந்தக் கூத்தர் அகமகிழத் தொண்டுசெய்யும்
மானந் தவாத மயில்.

3. சிவஞான முனிவர் வரலாறும் ஆராய்ச்சியும், கா. சுப்பிரமணியப் பிள்ளை, ப.6, ஹிலால் அச்சகம், திருநெல்வேலி, 1932.

4. சிவஞான முனிவரின் காஞ்சிப்புராணம் ஓர் ஆய்வு, டாக்டர் சாமி ஐயா, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1989.

5. திருவாவடுதுறை ஆதீன குரு பரம்பரை விளக்கம், சுப்பிர மணிய தம்பிரான், ப. 118, திருவாவடுதுறை ஆதீனம், 1981.

6. மேலது, ப. 119.

7. திராவிட மாபாடியக்காரர், ஸ்ரீமாதவச் சிவஞான முனிவர் அருள்நூல் கட்டுரைகள், ப.30, திருவாவடுதுறை ஆதீனம், 1986.

8. துவையல் என்பது காரம் கலந்த ஈரக்கலவை. பச்சடி என்பது துண்டாக்கப்பட்டு உப்பிடப்பட்டுத் தயிரில் அமிழ்த்திய கலவை.

9. ஒரு தெய்வீக மனிதரின் இறப்பைப் பரிபூரணம் என்பர்.

10. காண்க: குறிப்பு 9.

11. காஞ்சிப்புராணம் பாயிரம், செ. 12.

12. குரு பரம்பரை விளக்கம்: முன் குறிப்பிட்டது, ப. 126.

13. கொங்கன் வந்து பொங்கினான் கொழியரிசிச் சோற்றினை
சங்கமங்கள் கூடியே சாப்பிடத் தொடங்கின
அங்குமிங்கும் பார்க்கிறீர் அமுதினிற்கண் இல்லை
எங்கள் பாவம் எங்கள் பாவம் எங்கள் பாவம் ஈசனே

14. காஞ்சிப்புராணம்: ஓர் ஆய்வு முன் குறிப்பிட்டது, ப.22

15. சிவஞானசுவாமிகள் அருளிச் செய்த காஞ்சிப்புராணம், 1937, ப. 31.

16. மேலது.

17. மேலது.

18. காண்க "Kaanchi of the early seventh century:" in Saint Sekkizhaar by T.N. Ramachandran, MIL Series, Sahitya Akademi, New Delhi, 1994.

19. திரிசிரபுரம் மகாவித்துவான் ஸ்ரீமீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களின் சரித்திரம் உ.வே. சாமிநாதையர் பகுதி-1, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1986, பக். 112-113.

20. மேலது, ப. 113.

21. சிவஞான முனிவர் அருள்நூல் கட்டுரைகள், முன் குறிப் பிட்டது, ப. 59.

22. ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களின் சரித்திரம் பகுதி-2, ப. 250, தமிழ்ப் பல்கலைக்கழகம், 1986.

## 5

## திராவிட மாபாடியம்

பேருண்மைகள் நிலையான மதிப்புடையவை. வழக்கமாக அவை சூத்திரங்களிலேயே செறித்து வைக்கப்பட்டிருக்கும். இவை ஒரு குறிப்பிட்ட காலத்தில் எழுதப்பட்டிருப்பினும், அக்காலத்தில் செயல்புரிவோர்க்கு அறிவுறுத்தவெனத் தெளிவாக அமைந்திருப்பினும், அவை தொடர்ந்துவரும் நூற்றாண்டுகளிலும் தொடர்ந்து மதிக்கத்தக்கன. எனினும் காலம் செல்லச் செல்ல உலகம் மிகுந்த மாற்றத்தை எய்தும். அணுகுமுறை, நோக்கு, வாழ்க்கை மதிப்புகள் ஆகியவற்றில் காலப்போக்கில் கடலளவு மாற்றம் உண்டாக்கப்படக்கூடும். எனினும் மாறிய காலநிலையிலும் சூழல்களிலும், பாதுகாக்கப்பட்ட உண்மைகள் வாழ்கின்றன. உண்மையின் மொழிகள் வழக்கற்றவையாகத் தோன்றினாலும் அவை மறைந்து போகா, உண்மை அதன் வெளிப்படாத புதுமையைத் தனக்கேயுரிய சிறப்போடு வெளிக்காட்டும்; அதற்குரிய உரை விளக்கங்களோடு அது தோற்றத்திற்கு வரும். தற்செயல் என்ற நிலையில், இந்த உரை விளக்கங்கள் உண்மையை மூடி மறைக்கத் தொடங்கிய ஒட்டடைகளைத் துடைத்தெறியும். உரையாசிரியரின் பணி தவறாகப் பொருள் கொள்ளுதலைத் துண்டித்து அகற்றுதலாகும். உண்மை காலததின் கடும் எதிர்ப்புக்கு மாறாகவும் மறதியின் புறக்கணிப்பை மீறியும் உறுதியாக நிலைபெறக் கடந்த காலத்தில் அறிஞர்கள் வலிமைமிக்க மரபென்னும் கட்டிடத்திற்கு அடிக்கல் நாட்டியிருக்கின்றனர். இந்த மரபு உடையாமல் இருக்கும் வரை செய்திகள் முழுமை கெடாமலும், பழுதுபடாமலும் கொண்டு செல்லப்படும். ஆசிரியன் மாணவனுக்குச் செய்தியைக் கற்பிக்கிறான்; மாணவன் தொடர்ந்து ஆசிரியனாகித் தன் மாணவனுக்குக் கற்பிக்க இவ்வாறாக அறிவொளி எல்லையின்றி மங்காமலும் அணையாமலும் எடுத்துச்செல்லப்படுகிறது. இந்தப் பரம்பரை, கற்கவிழையும் தகுதியுள்ளவர்களுக்கு அறிவைப் பரப்பும் பொறுப்புடையதாக இருக்கிறது. புதிய ஒளியில் உண்மைக்கு ஒரு மறுவிளக்கம் அளிக்கவேண்டிய தவிர்க்க முடியாத தேவை உண்டாகக்கூடிய நேரங்கள் எழலாம். மகாகவி பாரதி 'வேதம் புதுமைசெய்' என்றார். பழைய உண்மைகளுக்குப் புதிய விளக்கங்கள்

அவற்றின் மதிப்பை உறுதி செய்கின்றன.

இத்தொடர்பில் ஞானம் என்பது சாமர்த்தியம் இல்லை என்பது கருதத்தக்கது. ஞானம் என்பது உண்மையோடும், உண்மையை நிலைநிறுத்தும் வாழ்க்கையோடும் தொடர்புடையது. அறிவுடைமை என்பது மேம்பட்ட நிலையை எய்தும் குறிக்கோளைக் கொள்கிறது. அறிவுடைமை உண்மைக்கு மாறானதன்று. ஆனால் அது தன் தேவையை ஈடுசெய்து கொள்ள உண்மையைக் கீழ்ப் பணியச் செய்கிறது. ஞானம் என்பது கோடரி அல்லது திரிகையின் கைப்பிடி இல்லை. சாமர்த்தியம் தனக்கெனத் தன்னல நோக்கம் கொண்டதாக இருக்கிறது. மறை நூல்களின் ஆட்சி எல்லையில், சாமர்த்தியம் நுழையும்போது உண்மை துன்புறுகின்றது. இதன் விளைவு குழப்பமே. பேராசிரியர் வி.வி.ஜான் உருவாக்கிய ஒரு பாத்திரமான லிஸிஸ், "இந்தியர்கள் விவாதத்தை விரும்புவர் என்றும் முதல் சொற்பொருள் பிரிப்பு இந்தியாவிலேயே நிகழ்ந்த தென்றும் இந்தியப் பண்டிதர்கள் மறை நூலின் ஒரு வரிக்கு இருபத்து நான்கு பொருள்களைக் காண முடிந்தது என்றும் நானும் கேட்டிருக்கிறேன்" என்கிறார்.[2] "அறுநூற்று முப்பது கிறித்தவ சமயவட்டத் தலைவர்களும் உதவித் தலைவர்களும் மன்னர் மர்சியானஸ்ஸின் வேண்டுகோளின்பேரில் போஸ்போரஸ்ஸின் கான்ஸ்டாண்டிநோபிளுக்கு எதிரேயுள்ள சால்சிடன் நகரில் சந்தித்தனர். அவர்கள் சந்தித்தது யூதிச்சியன், நெஸ்டோரியன் என்னும் இரு வேறுபட்ட கருத்தினர், இயேசுவின் உடம்பைப் பற்றிய கருத்து வேறுபாடுகளைத் தீர்த்துக் கொள்ளும் பொருட்டாகும். ஆனால் கொச்சையான கூப்பாடுகளே வெளிப்பட்டன" என்று சர்.பொன்னம்பலம் இராமநாதன் கூறுகின்றார்.

எந்த நம்பிக்கையும் அத் தகுதிக்கேற்ப உண்மையை விலைகூறி அறிவை ஊக்கப்படுத்த முயற்சி செய்ய இயலாது. சைவ சித்தாந்தத்தின் தூய்மையையும் உண்மையையும் பாதுகாக்கவும் வளர்க்கவும் தமிழ்நாட்டில் ஆதீனங்கள் ஏற்பட்டன. ஆதீனத் தலைவர் பண்டார சன்னிதி (ஆன்மீகச் செல்வத்தின் அருள்நிறை தோற்றம்) என்றும், அவருடைய மாணவர்கள் தம்பிரான்கள் என்றும் கூறப்பட்டனர். இவர்கள் மறைபொருளான உண்மை களைக் குறித்த அறிவில் ஆழ்ந்து தோய்ந்தவர்கள். உயிர்க்குரிய பண் பாட்டினால் ஆன்மீகம் அனுபவம் அடையப் பெறுகின்றது என்பது நன்கறியப்பட்டது. ஆதீனங்களில் உள்ள அருளாளர்கள்

ஞானத்தைப் பெறும் பாத்திரங்களாகத் தம்மை ஆக்கிக் கொள்ளச் சரியை, கிரியை, யோகம் என்றும் நடைமுறைகளில் ஓர் ஆன்மீகக் காலஅட்டவணையைப் பின்பற்றினர். சரியை கிரியை யோகம் என்ற மூன்றையும் முடித்தவர்களே அதிகாரிகளாக (தகுதியுடையவர்கள்) ஆகின்றனர். இவர்களே தெய்வீக அருளைப் பொருளாகக் கொண்ட சிவஞானபோதத்தைப் பெற்றுக் கொள்ளும் தகுதி யுடையவர் ஆவர்.

சிவஞானயோகி- இந்தப் பெயரே வெளிப்படையாகப் பொருள் உணர்த்துவது. ஆன்மீக ஒழுக்ககங்களான சரியை கிரியை யோகம் ஆகியவற்றை முடித்தவர் இவர். இவையே ஒருவரை சிவஞானத்திற்கு இட்டுச் செல்லும். எனவே சிவஞானயோகி தனித்தன்மை வாய்ந்த குருவாவர். நம் யோகி சிவஞான போதத் திற்கு இரண்டு உரைகள் அருளியதன் வாயிலாகத் தமிழ்ச் சைவநெறி உலகத்திற்கு அருள்பாலித்தார். அவ்வுரைகளுள் ஒன்று சிற்றுரை (சுருக்க உரை) மற்றது மாபாடியம் (பேருரை). எனவே நம் யோகி சைவசித்தாந்தத்தின் அங்கீகரிக்கப்பட்ட உரையாசிரியராக ஏற்றுக்கொள்ளப்பட்டார். இதற்கு முன்னைய உரையாசிரியர்களைப் போலல்லாமல் அவர் முழுவதுமாகப் புரிந்து கொண்டவராக அருளப்பெற்றார். ராமகாந்தரால் விமர்சனம் செய்யப்பட்ட, பெயர் அறியப்படாத உரையாசிரியர் ஒருவரைப் போல, மற்றைய உரையாசிரியர்கள் (ஒரு சிலர் நீங்கலாக) இருந்தனர். 'மதங்கப் பாரமேஸ்வர ஆகமம்' என்ற நூலுக்கு ராமகாந்தர் தம் உரையில், பெயர் கூறப்படாத மற்றோர் உரையாசிரியர் இதே மூலத்துக்கு ஞானபதத்தின் பின்னர் எழுதிய தெளிவுரையோடு மாறுபடுகிறார் என்று ரிச்சார்டு எச்.டேவிஸ் கூறுகின்றார். ஒவ்வோரமைப்பும் அம்மொழிக்கே உரிய குழூஉக்குறியைப் பெற்றுள்ளது. கற்பவர் இந்த மொழி அமைப்பைத் தேர்ந்தவராதல் வேண்டும். இந்த மொழி தனிச்சிறப்பு வாய்ந்த உட்பொருளை உள்ளடக்கி இருக்கிறது. அக்கறையற்ற படிப்பாளிக்கு அம்மொழி எதனையும் தெரியப்படுத்துவதில்லை. உரைகளின் பொருட் செறிவுக்கு மொழியே காரணமாகின்றது. இந்த உரைகள், பருப்பொருள் சார்ந்த உலகில் பற்பல சிக்கல்களை எதிர்கொள்ளும் சாதாரண மனிதனுக்கு உரியவை அல்ல. அவன் உலகியல் சார்ந்த இன்பத் தேட்டமுடையவன்; வீடுபேறு பெறும் நாட்டமுடையைவன் அல்லன். ஆர்.எச்.டேவிஸ் கூறுமாறு

உலகியல் சார்ந்தவனும், வீடுபேறு அவா உடையவனும் எதிரெதிர் வகையில் செயல் புரிபவராவர். சமயக் குடியரசில் வீடுபேறு அவாவுகின்றவர் ஆன்மீக உயர்நிலையினர். அவர்கள் மாமன்னர் எனப்போற்றப் பெறுகின்றனர். சம்பந்தர் பெருமான், சுந்தரர் பெருமான் ஆகியோரின் அருட்பாடல்கள் அவர்களின் பெருமைக்கு வன்மைமிக்க சான்றுகளாகும்.

திருவாவடுதுறைப் புலவர்களின் கூற்றுப்படி நம் யோகி முதலில் சிற்றுரையும் பின்னர்ப் பேருரையும் எழுதினார். எனினும் காலஞ் சென்றபுகழ் மிக்க பேராசிரியர் க.வெள்ளைவாரணர், சிற்றுரை யோகியால் பின்னர் எழுதப்பட்டதெனக் கூறியதை நான் கேட்டிருக் கின்றேன். பெரும்பேராசிரியரும், பேரறிவாளரும், சார்பற்ற திறனாய்வாளருமான அவருடைய கருத்து மதிப்பளிக்கத் தக்கதாகும். சிற்றுரை என்னும் சைவசித்தாந்தக் கையேடு தேவைப் படும்போது, நோக்குதற்கு ஒரு நோக்கு நூலாக மாபாடியத்தை உருவாக்கியிருக்கிறது. மாபாடியத்தை மகாமுனி மில்டனின் இழந்த துறக்கத்தோடு (*Paradise Lost*) ஒப்பிடுவது தவறாகாது. வெவ்வேறு வழிகளைச் சார்ந்திருப்பினும், இரண்டும் உலகளாவிய அறிவு நூல்கள். டாக்டர் ஜான்ஸனின் சொற்களில் தேவையான மாறுபாடுகளோடு கூறுவதெனில், ஒருவர் இவ்வாறு கூறலாம்: "மாபாடியம் என்பது படிப்பவர் படித்துப் பின் கீழே வைத்துவிட்டு மறுபடியும் எடுக்க மறந்துவிடும் நூல்களில் ஒன்றாகும். எவரும் அஃது இருப்பதைவிட விரிவாக இருக்க வேண்டும் என்று எண்ணவில்லை. அதன் நுண்ணாய்வு ஒரு கடமையேயன்றி இன்பமில்லை. நாம் நம் யோகியை அறிவு கற்கும் பொருட்டுப் படிக்கிறோம்; ஆனால் அலைக் கழிக்கப்பட்டுச் சுமையால் அழுத்தப்பட்டு ஓய்வு கொள்கிறோம்; நாம் நம் ஆசிரியரைக் கைவிட்டு உடன் பழகுவோரைத் தேடுகிறோம். யோகியின் திருமுன்பாகக் குறைந்த படிப்புடையவர்கள் மன உலைவு பெறுவதற்குரியவர்களாக இருப்பர். அவர் இராட்சச ஆளுமை கொண்டவர்; மற்றவர் எல்லாம் லில்லிபுத் நாட்டு மக்களைப் போன்ற சிற்றுருவினர்."

மாபாடியத்தைப் புரிந்துகொண்ட அறிஞர்களை ஒருவர் விரல் விட்டு எண்ணிவிடலாம். இப்பெரும்படைப்பின் பெயரைக் கூடச் செவியுறாத சைவர்கள் உள்ளனர். இவர்கள் பெயரளவிலான சைவர்கள் ஆவர். சைவத்தைக் கடைப்பிடிப்பவர்களிலும், ஆழ்ந்து

இந்நூலைப் படிக்க விரும்புபவர் மிகச் சிலர் ஆவர். இவர்களுக்கு இந்நூலை அதன் உண்மைநிலையில் அறிந்துகொள்வதற்கு உதவியாக மாபாடியத்திற்கு உரைகள் அண்மைக் காலங்களில் தோன்றின.[6] தருமபுர ஆதீனம் சைவசித்தாந்தத்தைப் பரப்புவதற்கு மாலைக் கல்லூரிகளைப் பல மையங்களில் நடத்தி வருகின்றது. மாபாடியத்தை விரித்துரைக்க ஒரு சிறப்புப் பயிற்சி நடத்தப் படுகிறது. நம் யோகியைக் 'குலதெய்வ'மாகக் கொண்ட திருவாவடுதுறை ஆதீனம் சித்தாந்த சாத்திரங்களை விளக்கமாகத் தெரியவைக்கப் பாராட்டத்தக்க பணிகளைச் செய்து வருகிறது.

காலஞ்சென்றவரும் புகழ்பெற்ற அறிஞருமான வச்சிரவேல் முதலியார், எழுதிய மாபாடியத்திறவு, மாபாடியத்திற்கு மிகச் சிறந்த வழிகாட்டி நூலாகும்.[7] பேரறிஞராய் சைவசித்தாந்தத்தில் தகுதி சான்றவர் என ஏற்பளிக்கப்பட்டவருமான இவர் பாடியத்தை ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்துள்ளார். தகுதியுள்ள கல்வியாளர்களுக்கு இஃது அளவிடமுடியாத துணை செய்வ தாகும். தகுதியுள்ள கல்வியாளரும் இப்பெரும்படைப்பைக் கற்பதற்கு கடுமையான முயற்சியைச் செய்ய வேண்டும். கற்பவர் பொறுமையும் விடாமுயற்சியும் கொண்டு இதனைப் படிப்பதில் ஈடுபட வேண்டும். பெரும் படைப்புகள் மிக எளிதாகப் பயன் கொள்வதற்கு உரியன அல்ல என்பது உண்மையாகும். மிகச் சிறிய கால அளவில் அறிவு பெறுபவர் என்பவர் பத்து இலட்சத்தில் ஒருவரே. "கண்ணீர் சிந்தக் கடுமையாய் உழைப்பவர்க்கே பொருள்கள் புலப்படும்'' என்பது இலத்தீன் முதுமொழி. துன்பங்களாலும் குழப்பங்களாலும் ஊக்கமிழக்காத வேட்கை கொண்டவர்களால் மட்டுமே மாபாடியத்தில் தேர்ச்சிகொள்ள முடியும். அத்தகையவர்களின் ஓயா முயற்சி, பக்தி உணர்வோடு இரட்டிப்பாகிறது. பொறுமையும் விடாமுயற்சியும் பூண்ட ஆய்வாளர் உடனடியாகவோ, பின்னரோ புரிந்து கொள்ளுவார்; இறுதியில் மிகுந்த பயனை அடைவதையும் உணர்வார்.

பாடியம் எழுதுதல் என்பது எளிய விளையாட்டன்று. பாடியக் காரர் பலப்பல உணர்வுகளில் ஆளுமை உடையவராகவும் பல்கலை தேர்ந்தவராகவும் இருக்க வேண்டும். அவர் தேசிய மொழியான சமஸ்கிருதத்திலும் தம் தாய்மொழியிலும் மற்றுமுள்ள வட்டார மொழிகளிலும்கூடத் தேர்ந்தவராதல் வேண்டும். அவர் வேதங்களையும் அவற்றின் அங்கங்களையும், ஸ்மிருதிகளையும்,

இதிகாசங்களையும் ஆகமங்களையும் தோத்திரங்களையும் சாத்திரங்களையும் கற்றிருக்க வேண்டும். அவர் தம் கல்வியைத் தகுதிமிக்க ஆசான்மார் வழியாகப் பெற்றிருத்தல் வேண்டும். அவர் சுருக்கமாகவும் துல்லியமாகவும் மொழியைக் கையாளும் வல்லமை பெற்றிருத்தல் வேண்டும். அவர் நல்ல தருக்கவியல் வல்லவராகவும் இருத்தல் வேண்டும்.

நம் யோகி, வடமொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டதென அவர் நம்பிய தமிழ்ச் சிவஞானபோதத்திற்கு உரை எழுதினார். தமிழ்நூல் நாற்பது அடிகளாலான பன்னிரண்டு சூத்திரங்களைக் கொண்டது. ஜான் ஹெச்.பீட் "ஐயத்திற்கிடமின்றித் தமிழ்ச் சிவஞானபோதம் உலகெங்கும் உள்ள பகுத்தறிவுக்கு நெருக்கமான தத்துவங்களில் ஒன்றாகும்" என்று கூறுகின்றார்.[9] நம் யோகி, சிவஞானபோதத்தின் முப்பத்தொன்பது பிரிவுகளைக் கொண்டு முக்கூற்று அமைப்பில் அவற்றை இடம் பெறச் செய்ததன் வழியாக முழுநூலையும் ஒரு வரிசைக்குட்பட்ட தருக்கவியல் சார்ந்த முறைக்குரியதாக ஆக்கியுள்ளார். இவ்வமைப்பில் அவர் உரை அமைந்துள்ளது. அவர் தம் விளக்கவுரையைத் தொடங்குமுன், உலகாயதம், நாற்பிரிவுப் பௌத்தம் (மாத்யமிகம், யோகசாரம், சௌந்திராந்திகம், வைபாடிகம்) சமணம் ஆகிய புறப்புறச் சமயங்களையும் தார்க்கிகம், மீமாம்சை, ஏகான்மவாதம், பாஸ்கரரின் பரிணாமவாதம், கிரீடபிரம்ம வாதம், சப்த பிரம்ம வாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்ரம் என்ற புறச் சமயங் களையும் பாசுபதம், மகாவிரதம், காபாலிகம், வாமம், பைரவம், ஐக்கிய வாதம் உட்பட்ட அகப்புறச் சமயங்களையும் மறுக்கத் தொடங்கியுள்ளார்.

சைவசித்தாந்தம் ஏகாத்ம வாதத்தின் எல்லா வகைகளையும், அதன் சாயல் பெற்றவற்றையும், சப்த பிரம்மவாதம் உட்பட அனைத்தையும் குறை காண்பது என்பதை இத்தொடர்பில் மறுபடியும் கூறவேண்டியுள்ளது. ஏகாத்மவாதத்தின் மேலோங்கிய குரல் காரணமாகச் சர்வாத்ம சம்பு பிரம்மசூத்திரத்தையே புறம் பானது எனக் கருதுகின்றது.[10]

நம் யோகி உரைகாரர்களுக்குரியதாக ஏற்கப்பட்ட செவ்விய நடையைக் கொள்ள வேண்டியவராக உள்ளார். இதனால் ஆய்வுப் பொருளின் எல்லாப் பகுதிகளிலும் கவனம் செலுத்தி,

அப்பிரிவுகளை முறைப்பட அமைக்க வேண்டியதாக உள்ளது. அதிகரணங்கள் எனப்பெறும் பிரிவுகள் கீழ்வருமாறு வரிசைப் படுத்தப்பட்டுள்ளன. 1. ஆய்வுப் பொருள் (விஷயம்/பிரதிக்ஞை), 2. ஆய்வுப் பொருளை வினாதல் (சம்சயம்), 3. தொடக்க நிலை நோக்கு (பூர்வ பட்சம்), 4. பூர்வபட்ச மறுப்பிற்கு விடைகள் (சித்தாந்தம்), 5. பிரிவுகளின் இடைத்தொடர்பு (சங்கதி). (சில மறைநூல்கள் ஆய்வுப் பொருளுக்கு அடிப்படைப் பொருளாகக் கருதப் பெறுகின்றன. இவை விஷய வாக்யம் எனப்பெறும்.

நம் யோகி, குறைகாணமுடியாத மூலங்களிலிருந்து மறுக்க முடியாத உண்மைகளையும் முடிவுகளையும் தம் உரையில் நிறைத்துள்ளார். மாபாடிய மூலம் 517 பக்கங்களைக் (டெமி அளவில்) கொண்டது. 1936இல் வெளியிடப் பெற்றது.[11] ஏகதேசமான ஒரு மதிப்பீடு, நம் யோகி தம் கருத்துகளுக்குத் தொண்ணூற்று ஏழு நூல்களிலிருந்து ஆதரவு பெற்றுள்ளார் என்பதைக் காட்டுகின்றது. இவை சமஸ்கிருதத்திலும், அதே போலத் தமிழிலும் உள்ளவையாகும். அவர் எடுத்தாண்டுள்ள பதிவுகள் அகநானூறு, அதர்வசிகை, அதிகரணார்த்த சங்கிரகம், ஸ்கந்த புராணம், சிவதருமோத்திரம், சீவகசிந்தாமணி, நாலடியார் எனப் பல வேறுபட்ட நூல்களிலிருந்து கொள்ளப்பட்டுள்ளன.

நம் யோகியின் அறிவு பலதுறைக் களஞ்சியம் ஒத்தது. அவர் தருக்கத்தில் தேர்ந்தவர். அவருடைய தாக்குதல்கள் குத்துவாள் வீச்சிலிருந்து குண்டுவீச்சு வரையிலானவை. எப்போதும் விழிப்புற இருப்பதோடு, தம் ஒப்பற்ற ஆற்றல்களை நினைவுகூர்ந்து திடுமெனக் கடும்போரில் இறங்கித் தமக்குச் சிறிது தீங்கு வராமல் வெற்றியோடு வெளிப்பட அவரால் முடியும். அவர் எதிராளியின் வச்சிராயுதத்தை எப்படிக் கவர்வதென்றும் வழியற்ற எதிராளிக்கு எதிராக அதனை எப்படித் திறம்பட இயக்குவதென்றும் அறிந்திருக் கின்றார். முன்னாளில் வைணவராயிருந்த சுதர்சன ஆச்சாரியர் என்பவர் வாதத்தில் வைணவர்களை முறியடித்த பின் சைவத்தைத் தழுவினார். அவர் சமஸ்கிருதத்தில் ஐந்து செய்யுட்களைக் கொண்ட 'ஸ்லோக பஞ்சகம்' என்பதை இயற்றினார். இந்நூலில் சிவபெருமானின் தனித்தலைமையை நிறுவும் இருபத்திரண்டு செய்திகளைப் பட்டியலிடுகிறார். நம் யோகி இதனைத் தமிழில் மொழிபெயர்த்துத் தம் கருத்திற்கு உரியதாகப் பயன்படுத்திக் கொண்டார். இந்நூல் மாபாடியத்தில் பொருத்தமான இடத்தில்

மேற்கோளாக விரிவான முறையில் காட்டப்பெற்றுள்ளது. யோகியால் பட்டியலிடப்பட்டுள்ள செய்திகள் கீழ்வருமாறு:[12]

1. சிவம் என்பது காயத்ரி மந்திரங்களில் புனிதமான உட்பொருள் காட்டும் மந்திரமாகும்
2. சிவனுடைய உருவம் ஸ்ரீராமரால் பிரதிஷ்டை செய்யப்பட்டு வழிபடப் பெற்றது.
3. கைலாயத்தில் கிருஷ்ணர் சிவனை வழிபட்டு அவரால் வரமருளப் பெற்றதனால் மகன் ஒருவனைப் பெற்றார்.
4. விஷ்ணு 999 தூய மலர்களையும் தனக்குரிய ஒரு கண்ணை யும் சேர்த்துச் சிவபூசை செய்ததற்குப் பரிசாகச் சிவன் விஷ்ணுவுக்குப்பரிசாக ஒரு தெய்வீகச் சக்கரத்தை அளித்தார்.
5. சிவன் சிறகுகளைக் கொண்டியங்கிய அசுரர்களின் முப் புரங்களை எரித்தார்.
6. விஷ்ணுவின் ஒரு மகனான காமவேளைச் சிவன் எரித்தார்.
7. சிவன் யமனைக் காலால் உதைத்துக் கொன்றார்.
8. சிவன் நொடிப்பொழுதிற்குள் ஆலகாலம் என்னு கடு நஞ் சினைக் குடித்து உலகைக் காத்தார்.
9. விஷ்ணுவும் மற்றைத் தெய்வங்களும் பங்கேற்ற தட்சனின் புனிதமற்ற வேள்வியை அழித்தார்.
10. சிவன் அர்ச்சுனனுக்கு வெல்லமுடியாத பாசுபதாஸ்திரத்தை அளித்தார்.
11. விஷ்ணுவின் அவதாரமான நரசிம்மத்தின் அளவுமீறிய ஆற்றலைச் சிவன் அடக்கியருளினார்.
12. விஷ்ணு பெண்ணுருக்கொண்டபோது சிவன் அவர் வழி யாகச் சாஸ்தாவை உண்டாக்கினார்.
13. நிலவுலகம் எங்கும் உள்ள அறிவுடையவர் யாவரும் சிவனையே அளப்பரும் பக்தியினால் தொழுகின்றனர்.

14. சிவனே தம் பக்தர்களுக்கு எட்டுவகைச் செல்வங்களையும் அளிக்கிறார்.

15. விஷ்ணுவின் பத்து அவதாரங்களிலும் சிவன் போற்றப் பெறு கின்றார்.

16. சிவன் நெருப்புத் தூணாக நின்றபோது விஷ்ணுவும் பிரம்மா வும் அவருடைய அடி, முடிகளைக் காண இயலாத வராயினர்.

17. ஏனைத் தெய்வங்கள் பிறப்பு இறப்புக்குரியவர்களாய் இருத்தல் போலச் சிவன் பிறப்பு இறப்புச் செயல்கட்கு இலக்கானதில்லை.

18. விஷ்ணுவின் மேலாண்மையை வியாசர் சிறப்புறக் காட்ட முயற்சி செய்தபோது நீட்டிய அவர் கையை அசைவற அப்படியே நிற்குமாறு செய்தார் சிவன்.

19. திரிபுரங்களை அழித்தபோது சிவனுக்கு விஷ்ணு ஊர்தியாகப் (இடபர்) பணி செய்தார்.

20. பிரபஞ்சத்தை அழிக்கும் எல்லையில் சிவன் சூடிய மண்டை யோட்டு மாலையில் விஷ்ணு, பிரம்மா ஆகியோரின் மண்டையோடுகளும் அடங்கியிருந்தன.

21. சிவன் மறைநூல்களை அருளியதோடு தம் அடியவர்க்கும் கற்பித்தவர்.

22. சிவன் உண்மையில் எல்லா உயிர்களுக்கும் தலைவரான பசுபதியாவர்.

நம் யோகியின் சைவசித்தாந்த ஈடுபாடு உரையில் நன்கு வெளிப்படுவதோடு, மற்றவற்றுக்கிடையில், சைவ நெறியை பரப்புவதில் அவருக்கிருந்த நிகரற்ற ஆர்வமும் வெளிப்படு கிறது.

நம் யோகி தமிழ்ச் சைவநெறியில், கருவில் திருவுடையவராக இருந்ததோடு அவரது உரை அவருடைய பற்றைக் காட்டும் தகுதி மிக்கச் சான்றாவணமாகும். தமிழ் முனிவர் திரு.வி.கலியாணசுந்தர முதலியார், "யோகி தம் தத்துவ ஆராய்ச்சியின் கண் மேற்கொண்டுள்ள புகுப்பாய்வு நுணுக்கத்தைத் துருவி ஆராய்ந்தால் அறிவுடையவர்கள்

யோகியை, ஸ்ரீகண்டர், சங்கரர், இராமானுசர், மத்துவர் ஆகிய எல்லாரையும் ஒன்றாகக் கொண்டு தோன்றியவர் என்ற முடிவுக்கு வரத் தூண்டப் பெறுவர். அதுபோலவே, அவருடைய தமிழ் நூல்கள், நம் யோகியின்பால் மிகச் சிறந்த உரையாசிரியர்களான நக்கீரர், இளம்பூரணர், பரிமேலழகர், மேலும் நச்சினார்க்கினியர் ஆகியோர் வதிவதைக் காட்டுகின்றன" என்று கூறுகிறார்.

யோகியின் உரையைக் கற்போர், பழமையான வேதங்கள், வேதாந்தம், பிரம்மசூத்திரம், சைவ ஆகமங்கள் ஆகியவற்றை அவை தோன்றிய மொழியில் பயிலாமலேயே அவற்றைப் புரிந்து கொள்ளும் பயனைப் பெறுவதற்கு உரியவராவர் என நாம் உறுதி யாகக் கூறலாம்.

**குறிப்புகள்**

1. புதிய ஆத்திசூடி, சுப்பிரமணிய பாரதி, பாரதி பாடல்கள், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1987.
2. Plato's Indian Republic, V.V.John, Rupa and Co., 1993, p.1.
3. Unwritten Tradition, p. 71 In the culture of the soul among Western Nations by P.Ramanathan, G.P.Putnam's Sons, New York and London, 1907.
4. Ritual in an oscillating Universe, by Richard H. Davis,Princeton University Press, Princeton, New Jersey, 1991, p.x. ராமகந்தரின் குறிப்பு வருமாறு: "தத்துவம் ஒன்றே அறிந்த குறிப்பிட்ட உரையாசிரியர் ஒருவர் அறிவுப் பிரிவை (ஞானபதம்) விரிவாக ஆராய்ந்து முடித்தார். ஆக மொத்தத்தில் அவர் சடங்குப்பிரிவு யோகம், ஒழுக்கம் ஆகியவற்றைக் குறித்த செயல்முறைப் பிரிவுகளை குறைத்து மதிப்பிட்டு விட்டார். ஆனால் நான் சிவனை மதிக்கும் நிலையில், அப்பிரிவுகளின் தெளிவான விளக்கத்தை இங்கு ஆக்குவேன். ஏனெனில் இங்குக் கூறப்பட்டுள்ள செயல் வகைகள் முழுமையாகத் தத்துவ உரையாடலின் பொருளோடு ஒத்துள்ளன."
5. சமய, பண்பாட்டின் பின்னணியைக் குறித்து அறியாமை, மேலெழுந்த வாரியாகப் படிப்பவரை ஒரு குழப்ப எல்லை யில் இறக்கிவிடும். பெரியாழ்வார் 'புதுவைக்கோன்' என்னு பெயர் பெற்றவர். அவருடைய பெயரே அவரது தெய்வீகப்

புகழை உரைக்கும். அவர் குறுநில மன்னருக்கு ஒத்த, ஒரு கூடுதல் தகுதிபெற்ற மேயர் எனக் கூறுவது படிப்பவரைத் திசை திருப்பும் ஒரு பயனிலாக் கூற்றாகும். காண்க: Andal and Her Path of Love by Vidya Dehejia, State University of New York Press, Albxny, 1990, p. 9.

6. சிவஞானபோத மாபாடியப் பொருள் விளக்கம், மகா வித்துவான் அருணை வடிவேலு முதலியார், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1991. மாதவச்சிவஞான முனிவர் அருளிய சிவஞான மாபாடியம் (விளக்கத்துடன்), சி.சு.மணி, அருள்நந்தி சிவம் அருட்பணி மன்றம், 78 செல்விநகர், சிந்துபூந்துறை, திருநெல்வேலி - 627 001. திருப்பனந்தாள் காசிமடம், பேராசிரியர் கு.சுந்தரமூர்த்தி அவர்களை மாபாடியத்திற்கு ஒரு விளக்கவுரை எழுதப்பணித்துள்ளது. இப்பணி நடைபெற்றுக் கொண்டிருக்கிறது

7. சிவஞான பாடியத் திறவு, க.வச்சிரவேல் முதலியார், Radhakrishnan Institute for Advanced Study in Philosophy, University of Madras, 1977.

8. சிவஞானமாபாடியம், க.வச்சிரவேல் முதலியார், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1988.

9. A Logical Presentation of the Saiva Siddhanta Philosophy by John H.Piet, The Christian Literature Society for India, Madras, 1952, p. 11.

10. Saivism in Philosophical Perspective, Dr. K. Sivaraman, Motilal Banarsidas, Delhi, 1973, p. 424.

11. மெய்கண்ட தேவர் அருளிச்செய்த சிவஞானபோதமும் வார்த்திகப் பொழிப்புரையும், மாதவச் சிவஞான யோகிகள் அருளிச் செய்த சிவஞான பாடியமும், தென்னிந்தியச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி லிமிடெட், திருநெல்வேலி, சென்னை, மார்ச் 1936.

12. மேலது, பக். 85-86.

13. திரு.வி.க.வின் சிவஞான பாடிய அணிந்துரை, சைவ சித்தாந்தப் பெருமன்றம், சென்னை, 1982.

## 6

## திராவிட மாபாடியத்தை அச்சிட்ட வரலாறு

நம் யோகி தம் வாழ்நாளிலேயே கருதத்தக்க புகழை எய்தியவர். அவருடைய சமகாலத்தவராக இருந்தவர்கள் அவருடைய மேதைமையை மதித்திருந்தும், வாய்ப்புக்கேடாக அவருடைய வாழ்க்கை குறித்து எழுதாமல் விட்டுவிட்டனர். எனவே சாதாரணக் குறிப்புகளுக்கும் உறுதிப்படுத்த முடியாத செவிவழிச் செய்திகளுக்கும் அப்பால் வேறொன்றும் யோகியைப் பற்றி அறிய முடியவில்லை.

மாபாடிய அரங்கேற்றம் கி.பி. 1775 அல்லது அதற்கு ஏறத்தாழ நிகழ்ந்தது. இந்நிகழ்ச்சிக்குப் பிறகு, திருவாவடுதுறை ஆதீனம், பனை ஓலைகளில் எழுதப்பெற்ற மூலப்படியை யாரும் கைப்பற்ற முடியாத இருப்பில் வைத்துக் கொண்டது. எவ்வளவு பெரியவரும் அதனைப் படிசெய்துகொள்ள அனுமதிக்கப்படவில்லை. ஆதீனத்தின் நம்பிக்கையைப் பெற்ற ஆதீனத்தின் ஏற்புப் பெற்ற அடியவர்கள் மட்டுமே, ஆதீன எல்லைக்குள்ளிருந்து மட்டுமே கடுமையான கண்காணிப்புக்கு உட்பட்ட நிலையில் படிக்க இசைவளிக்கப்பட்டனர். அவர்கள் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர், ஸ்ரீ சபாபதி நாவலர் ஆகியோர், இவருள் பிற்கூறப்பட்ட இருவரும் இலங்கையைச் சார்ந்தவர்கள். 145 ஆண்டுகளுக்கு மேலாக, சரியாகக் கூறுமிடத்து இன்றளவும், படிக்கும் பொதுமக்களுக்குக் அச்சியற்றப்பட்ட உரையின் முழுமையும் கிடைக்கவில்லை. டாக்டர் மு. அருணாசலம் திருவாவடுதுறை ஆதீனத்தை இது குறித்துக் கடுமையாகத் தாக்கியுள்ளார். அவர், “இத்துன்பத்தின் மூலம் அப்போதைய திருவாவடுதுறை ஆதினத்தைச் சார்ந்தது” என்று கூறுகின்றா.[1] டாக்டர் அருணாசலம் மேலும் கூறுகையில் “ஆதீனத் தலைவர் தம் ஓய்வில் அதனைப் படிக்க வேண்டுமென்று திட்டமிட்டு, அலமாரியில் அதனை (சிவஞான சுவாமிகளால் எழுதப்பெற்ற சிவஞான மாபாடியத்தின் மூலப்படியை) வைத்துப் பூட்டிவிட்டார். அவர் அதை மறைத்துவிட எப்போதும் கருத

வில்லை. ஆனால் அதற்குப் பிறகு அவர் விரைவில் காலமானார். சிவஞான சுவாமிகள் ஒரு முன்கோபக்காரர். அவர் எப்போதும் முட்டாள்களைப் பொறுத்துக் கொள்ள மாட்டார். சுவாமிகள் ஆதீனத்தில் பகைவர்களை உண்டாக்கிக் கொண்டார். அவர் அதற்குப் பின் தன் கையெழுத்துப்படியைப் பார்க்கவில்லை. அதனைத் திருப்பிப் பார்க்கவும் அவர்க்கு வாய்ப்பில்லை. அதில் ஒரு படி கூடப் பெறாத எளிமையில் அவர் இருந்தார். சிவஞான பாடியம் ஒரு பெரிய நூல். அப்பெரிய நூலைப் படியெடுப்பது எளிதான செயலன்று. அதன் மூலம் திறக்கப்படாமலும் படிக்கப் படாமலும் கவனிக்கப்படாமலும் ஆதீனத்தின் அலமாரித் தட்டு களில் சிதைந்து கொண்டிருந்தது.[2]

டாக்டர் அருணாசலம் தேவையில்லாமல் கடுமை கொண்டுள்ளார் என்பதைக் கூற நாம் வருந்த வேண்டியுள்ளது. அவருடைய கட்டுப்படுத்தப்படாத பொறுமையின்மை காரணமாக அவருடைய கடிந்துரை நிகழ்ந்துள்ளது. அவருடைய கருத்துக்கள் உறுதியான உண்மைகளுக்கு மாறாகச் செல்கின்றன. அறிஞர் மூவர் இந்நூலை ஆராய்ந்து அளவில்லாப் பயன் அடைந்துள்ளனர். தகுதி வாய்ந்த அறிஞர்களிடம் மதிக்கத்தக்க பயன்களை விளை விப்பதன் பொருட்டாக, ஒப்படைக்க வேண்டிய படைப்புகள் தாறுமாறாகப் பேணப்படாமல் பாதுகாப்பற்று வைக்கப்படும் மரபை டாக்டர் அருணாசலம் அறிவார் என்பது தெளிவாக எனக்குத் தெரிகிறது.[3]

எந்தக் காலப் பகுதியிலும் திருவாவடுதுறை ஆதீனம் உரையை அச்சிடக் கருதாமல் இருந்தது உண்மை; அதனை மறுக்க முடியாது. எனினும் சரியான நோக்கில் காணின், ஆதீனத்தின் கருத்து கண்டிக்கத்தக்க நிலையுடையதாக இல்லை. நிகழ்ச்சிகள் விதித்தவாறு நடக்கின்றன. இறுதியாக விந்தையான சூழல்களில் உரை வெளிச்சத்தைக் கண்டது.

திருநெல்வேலி மாவட்டத்திலிருந்து நிலை திரியா ஒழுக்கமிக்க முத்துக்குமாரசுவாமி என்ற இளைஞர் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிக்காற் பகுதியில், மறுக்கமுடியாத சைவ சித்தாந்தத்தின் சிறப்பினால் ஈர்க்கப்பட்டவராய்த் திருவாவடு துறை ஆதீனத்தில் ஒரு துறவியானார். நற்பண்புகளுக்கு உண்மையில் அவர்

ஓர் உறைவிடமாவார். அவருடைய மிகச் சிறந்த ஒழுகலாற்றாற் கவரப்பெற்ற ஆதீனத் தலைவர், அவரை மிகுந்த அக்கறையோடு வழிநடத்தினார். இந்த இளைய தம்பிரான் ஆதீன நூலகத்தை எளிதாக அணுகும் நிலை பெற்றிருந்தார். அவர் தெய்வத்திரு நூல் களிலும் சாத்திரம் சார்ந்த நூல்களிலும் ஆழமான புலமை எய்தினார். அவர் ஆன்மீக அறிவின் ஈட்டத்தில் தணியாத தாகமுடையவராக இருந்தார். அவருடைய தகுதியை அறிந்து நிறைவடைந்தஆதீனம் அவரை மாபாடியத்தைக் கற்க அனுமதித்தார். நம் யோகியின்பால் தம்பிரான் கொண்டிருந்த மதிப்பு நாளுக்கு நாள் வளர்ந்தது. இவ்வாறான நிலையில் 1888ஆம் ஆண்டில் சூரியனார்கோயில் ஆதீனம் பரிபூரணம்[4] அடைந்தார். குறிப்பிட்ட அக்காலத்தில் இந்த ஆதீனம் திருவாவடுதுறை ஆதீனத்தின் கட்டுப்பாட்டில் இருந்தது. காலம் சென்ற ஆதீனகர்த்தருக்கு அடுத்தவரைப் பணியமர்த்தும் அதிகாரத்தை உடையதாகவும் திருவாவடுதுறை ஆதீனம் இருந்தது. இந்த நிலையில் முத்துக்குமாரசுவாமித் தம்பிரானை இயல்பான தேர்வாகத் திருவாவடுதுறை ஆதீனம் தேர்ந்தார். தம் குருவின் அருளால் முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் ஆன்மீகத் தவிசு அமர்ந்து, அப்போதிருந்து முத்துக் குமாரசுவாமி தேசிகர் என வழங்கப் பெற்றார். அவருடைய ஆன்மீக ஆட்சி முப்பதாண்டுகளுக்கு நிகழ்ந்தது (1888-1918). தேசிகர் நம் யோகிபால் கொண்டிருந்த ஈடுபாடு எல்லையற்றது என்பதை நாம் முன்னரே குறித்துள்ளோம். திருமூலரைப் போல அவர் 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' எனக் கருதினார். கடுமையான பாதுகாப்பில் வைக்கப்பட்டிருக்கும் உரையின் மூலப்படியை சில நாட்களுக்கேனும் தம் உடைமையாய் வைத்திருப்பதற்குரிய வழிகளையும் முறைகளையும் திட்டமிடு முன் அவர் அடையக்கூடிய இடையூறுகளை அவர் உணர்ந்திருந்தார். அவர் சூரியனார்கோயில் ஆதீனத் தலைவராக ஆன பின்னரும், திருவாவடுதுறை ஆதீனத் தலைவரின் நம்பிக்கையை மேலும் மிகுந்த அளவில் பெறுகின்ற முறையில் தம்மை அவர் நடத்திக் கொண்டார். பிறகு அவர் தடையை அகற்றும் செயலுக்குரிய உத்தியைத் தெளிவாக வகுத்தார். அவர் திருவாவடுதுறை ஆதீனத் தைச் சென்ற கண்டு தம் வணக்கத்தைத் தெரிவித்து அவருடன் தங்கியிருந்தார். அவர் அவ்விடத்தைவிட்டுப் புறப்படுமுன் தம்

ஆழ்ந்த படிப்புக்காக உரையின் மூலப்படியைச் சில நாட்களுக்கு அளிக்கும்படி விண்ணப்பித்துக் கொண்டார். தேசிகரின் நேர்மையை ஆதீனத் தலைவர் ஐயப்படக் காரணம் எதுவுமில்லை. அவர் மூலப்படியை அவரிடம் கொடுத்து ஒரு வாரத்தின் பின் திருப்பிக் கொடுக்குமாறு கூறினார்.

தேசிகர் தம் ஆதீனத்திற்குத் திரும்பியவுடன் அவர், நேர்மையாகக் கருதப்படாத ஒரு செயலை மேற்கொண்டார். உரை சில பத்தாண்டுகளின் பின் அச்சிட வழிவகுத்த அச்செயல் நம் நன்றிக்குரியது. தேசிகர் தமக்கு நம்பிக்கையுள்ள தம்பிரான்கள் அறுவரைப் பெற்ற பேறுடையவராக இருந்தார். அவர்கள் ஆறுமுகர், வேலப்பர், சிதம்பரர், தட்சிணாமூர்த்தி, சிவப்பிரகாசர் முத்துக்குமார சுவாமித் தம்பிரான்கள் ஆவர். இவர்களிடம் அவர், குறிப்பிட்ட காலத்திற்குள், நூலைப் படியெடுத்து முடிப்பதற்கு ஏதுவாகச் சுவடிகளை பிரித்துக் கொடுத்தார். படியெடுக்கும் பணி மிகக் கமுக்கமாக நடைபெற்றது. தேசிகர் நம்பிக்கையும் மகிழ்ச்சியும் கொண்டார். எனினும், நம்பிக்கை என்பது மனிதனின் தலையாய பகை என்பதை நினைவில் கொள்ள வேண்டும். மோப்பம் பிடிப்பவர்களும், நோட்டம் பார்ப்பவர்களும் எங்கும் காணப்படுபவர்கள். படியெடுத்தல் நிறைவுறப்போகும் நிலையில் ஒற்றர் ஒருவர் திருவாவடுதுறைக்குச் சென்று ஆதீனத்திடம் தகவலை வெளிப்படுத்தினார். ஆதீனத்தின் அலுவலர் ஒருவர் மூலத்தைப் பெறவும், படியைக் கைப்பற்றி வரவுமென உடனடியாக அனுப்பப்பட்டார். முற்றிலுமாகத் திகைப்புற்ற தேசிகர் அடக்கத்தோடு, மூலப்படியையும், படிசெய்த நகலையும் அவரிடம் ஒப்படைத்தார். அவர் நம்பிக்கையின்மை என்னும் பள்ளத்தில் அழுந்திச் சோர்ந்த அப்போது, அவருடைய பெயரே கொண்ட பக்திமிக்க, சீடர், மெதுவாக அவரை அணுகி மாபாடியதின் ஒரு நகலைத் தந்தார். தேசிகரின் நெஞ்சம் சிலிர்த்தது. கேட்டறிந்த போது அவருடைய மாணவர் (முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்) மற்றத் தம்பிரான்கள் படி எடுத்த பகுதிகளையும், தன்னுடைய பகுதியையும் ஒருசேரப் படியெடுக்க இரவு முழுவதும் விழித்திருக்கிறார் என்பது தெரியவந்தது. வாய்ப்புக்கேடாக, இந்த நகல், சிவஞானபோதத்தின் ஆறாவது சூத்திரத்தோடு தொடர்புடைய சிறிய இறுதிப் பகுதியைப் பெற்றிருக்கவில்லை.

மூலப்படியும், ஒளிவுமறைவாக மொழிபெயர்க்கப்பட்ட நகலும் திருவாவடுதுறை ஆதீனத்தின் இரும்புப் பேழைக்குள் வைத்துப் பூட்டப்பட்டன. ஆதீனம் அப்பொழுதோ பின்னரோ உரையை அச்சிடக் கருதவில்லை. இன்றும் அவை ஆதீனத்தின் கடுமையான பாதுகாப்பில் இருப்பதாகக் கூறப்படுகிறது. தேசிகரும், அதனைத் தான் மிக இடர்ப்பட்டுப் படியெடுக்கத் துணிந்திருந்த போதும், அச்சிடக் கருதியிருந்தாரா என்பதை நாம் அறியோம். அதனைத் தம் மாணவர்களில் தேர்ந்தெடுத்தவர்களுக்குக் கற்பிப்பது அவருடைய முழு நோக்கமாக இருந்திருக்கலாம். உரை அவருடைய வாழ்நாளில் அச்சிடப்படவில்லை. என்பது உண்மையானதும், உட்பொருள் நிரம்பியதுமாகும். தேசிகர் காலமாகி மூன்றாண்டுகளுக்குப் பின்பே உரை அச்சிடப்பட்டது. முன்னரே குறிப்பிட்டவாறு, ஆறாம் சூத்திரத்தோடு தொடர்புடைய இறுதிப்பகுதி அச்சியற்றப்பட்ட தோடு இணைக்கப்படவில்லை எனினும் உரையின் முற்றுப் பெறாத இரண்டு பதிப்புப்படிகள் 1906ஆம் ஆண்டிலேயே வெளியிடப்பெற்றிருத்தல் வியப்பூட்டுகின்றது. இவை சூரியனார் கோயில் ஆதீனத்தால் பாதுகாக்கப்பட்ட படியின் நகல்களே என்பது தெளிவாக அறியப்பெறும்.

இலங்கையைச் சேர்ந்த ஸ்ரீசுவாமிநாத பண்டிதர் முற்றுப் பெறாத உரையை வெளியிட்டார். இவர் அறிவுமிக்க ஓர் உத்தியால், அதனை முற்றுப்பெற்றதாகத் தோன்றுமாறு செய்தார். இஃது இப்போதைக்குப் படிப்பவரை நிறைவடையச் செய்யும். அவருடைய நூல், "திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்ட தேவர் அருளிச்செய்த சிவஞானபோதமும், வார்த்திகமும், பொழிப்புரையும்' எனப் பெயர் பெற்றது. இதன் மற்றப் பகுதி, 'திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்துச் சிவஞான சுவாமிகள் அருளிச் செய்த திராவிட மாபாடியம் என்னும் சிவஞானபோத மாபாடியமும் சிற்றுரையும்'[5] எனப் பெயர் பெற்றது. பெருமைமிகு பண்டிதர் இவற்றை இவ்வுருச் செய்ய மிகக் கடும் முயற்சிகள் மேற்கொண்டிருக்கின்றார். இந்நூலின் முன்னுரைப் பகுதி மதிப்புமிக்க செய்திகளைக் கொண்டுள்ளது. அக்கால அறிஞர்கள் மாபாடியத்தின் பகுதியான அல்லது முழுமை யான படிகளை உடைமையாகக் கொண்டிருந்தனர் என்றும், படித்தனர் என்றும், தெளிவுறப் பண்டிதரால் இந்நூலில் காட்டப் பெற்றுள்ளது.

1886இல் அல்லது அதனை ஒட்டி, மாபாடியத்தின் சில தொடக்கப் பகுதிகளை எம்.வைத்தியலிங்கம்பிள்ளையிடமிருந்து இரவலாகப் பெற்றதாகப் பண்டிதர் கூறுகின்றார். அதன் பின், அந்நூலின் முழுமையுள்ள ஒரு படியைப் பெறவேண்டுமென்ற வேட்கைத் தீயினுக்கு ஆளானார். அந்நிலையில், அவர் இந்தியாவிற்கு வந்து முழு நூலின் ஒரு படியைப் பெறுவதற்கு முயற்சி மேற்கொண்டார். இதற்காக அவர் சபாபதி நாவலரோடு தொடர்பு கொண்டார். நாவலர் தன்னுடைய படிக்கு 2000 ரூபாய் கேட்டார். சபாபதி நாவலர் ஏறத்தாழ முடிவுற்ற மூன்று படிகளை வைத்துள்ளார் என்பதறிந்து பண்டிதர் எல்லாவற்றையும் பெற 2000 ரூபாய் கொடுப்பதாகக் கூறினார். நாவலர் இதற்கு இசையாமற் போகவே, இறுதியாக புலவர் ஒருவரிடமிருந்து நிறைவுறாத ஒரு படியைப் பெற்று அதனை நகல் செய்து, அதனடிப்படையில் 1906இல் (ஆனி) ஒரு பதிப்பை வெளிக்கொணர்ந்தார். பண்டிதர் வெளியிட்ட பதிப்பில் 1 மற்றும் 6 முதல் பன்னிரண்டு சூத்திரங்களுக்குரிய உரை முழுமையாக உள்ளது. ஆனால் இங்கும் ஆறாம் சூத்திரத்திற்குரிய இறுதிப்பகுதி மூலத்தோடு இணைக்கப் பெறவில்லை. அதே ஆண்டின் ஆவணி மாதத்தில், 'மெய்கண்ட தேவ நாயனார் அருளிச் செய்த சிவஞானபோத மூலமும் சிவஞான யோகிகள் இயற்றி அருளிச் செய்த திராவிட மாபாடியம் என்னு சிவஞான பாஷ்யமும்'[6] என்ற நூல் தோன்றியது. இந்நூல் மதுரை திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதீன வித்வான் சுப்பிரமணிய பிள்ளையால் பதிப்பிக்கப் பெற்றது. பல ஆண்டுகளாய் இதன் சுவடிக்காகக் கடுமையாகத் தேடியபின் சோழநாட்டில் உள்ள ஒரு வீட்டில் (சோழ நாட்டில் ஒரு கிரகத்தில்) ஒரு படி இருப்பதாகக் கேள்வியுற்றதாகவும், அங்குச் சென்றபோது, அவ்வீட்டிற் குடியிருந்தவர்களின் அலட்சியத்தால் கறையானால் ஒரு பகுதி தின்னப்பட்ட ஒரு படியையே காண முடிந்ததென்றும், அங்குக் குடியிருந்தவர்களிடம் அந்தப் படியைப் பெற்று, கவனமாகப் படியெடுத்ததாகவும் பிள்ளை கூறுகின்றார். இது, முதல் ஐந்து சூத்திரங்களின் உரையே கிடைக்காத பகுதியாகும். சுவாமிநாத பண்டிதரைப் போல, சுப்பிரமணிய பிள்ளையும் நூலின் இடைவெளிகளை நிரப்பச் சிற்றுரையைப் பயன்படுத்திக் கொண்டுள்ளார். ஜே.எம்.நல்லசாமிப்பிள்ளை இப்பதிப்பிற்கு ஆங்கிலத்தில் ஓர் அறிமுகம் கொடுத்துள்ளார். அவரும் (டாக்டர் அருணாசலம் போல) திருவாவடுதுறை ஆதீனத்தைக் குறை கூறு

கின்றார். அவர், "திருவாவடுதுறை மடத்தின் பண்டார சந்நிதியின் அறிவற்ற முரட்டுப்பிடிவாதத்தால் சிவஞான யோகியின் மகா பாஷ்யம் நூல் வடிவில் வெளிவர அனுமதிக்கப்படவில்லை" என்று கூறுகின்றார்.[7]

மகாகவி பாரதி 1906 ஆண்டு டிசம்பர் மாதம் 22ஆம் நாளிட்ட தம் இந்தியா இதழில் இந்நூலைக் குறித்து விமர்சனம் செய்திருப்பது ஊக்கமளிக்கிறது. இது முழுவதுமாக மேற்கோளாகக் காட்டத் தகுந்தது. "நாம் இந்நூலை மிக்க ஆர்வத்துடன் படித்தோம். இது நமக்கு மதுரை விவேகபானு அலுவலகத்தால் அனுப்பப்பட்டது. யூதர்கள் மெசையாவின் வருகைக்காகக் காத்திருந்ததைப் போல், தமிழிற் புலமை வாய்ந்த அறிஞர் எல்லாரும் நீண்டகாலமாக இந்நூலுக்காகக் காத்திருக்கின்றனர். தமிழில் அவ்வளவாகப் புலமை பெறாத நாமும் சிறு பருவத்திலிருந்து இவ்வாறாகக் கருதுகிறோம்; "அந்தோ! திருவாவடுதுறை ஆதீனத்தில் உள்ளவர்கள் சிவஞான முனிவர் எழுதிய ஆதி திராவிட மாபாஷ்யம் என்ற இந்த அரிய படைப்பை மறைத்து மூடிவிட்டனரே! இந்நூல் உண்மையில் பெருமை மிக்கதாதல் வேண்டும். என்று இது வெளிச்சத்திற்கு வருவது?" இவ்வாறு நினைத்துக் கொண்டு நாம் பல பெருமூச்சுகளை விடுகிறோம். இந்நூலை அச்சிட்டதற்காகவும், குறைந்த விலையிட்டதற்காகவும், ஒரு படியை நமக்கு அனுப்பியதற்காகவும் நாம் விவேகபானு அலுவலர்கட்கு நம் அளப்பரிய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். நாம் இந்நூல் எவ்வாறு இருக்கும் என்று எதிர்பார்த்ததற்கு சிறிதும் குறைந்ததாய் இல்லை. இந்நூலின் சில பகுதிகள் வெளியீட்டாளர்களுக்குக் கிடைக்காமை குறித்து நாம் வருந்துகிறோம். இந்நூலின் உட்பொருள் சைவசித்தாந்த நெறியோடு தொடர்பு உடையது. இதன் பெருமையை விளக்கிக் கூறுதல் எளிய மக்களின்சுவை உணர்வோடு பொருந்தி வராது. எனவே நாம் இதன் பெருமையைப் பல வகையாக ஆராய்வதிலிருந்து விலகி நிற்கிறோம். எனினும், சைவ சித்தாந்திகளும், பிற நம்பிக்கை சார்ந்த தமிழறிஞர்களும் கூட இந்நூலுக்குத் தம் ஆதரவை அளிப்பார்களென உறுதியாக நம்புகிறோம்."[8]

1906இல் வெளிவந்த இரண்டு பதிப்புகள் நம்பத்தக்கன எனக் கருதப்பட முடியாதவை. எனினும் அவை தமக்குரிய தகுதிகளைப் பெறாமலில்லை. இந்த மாபாடியப் பதிப்பு

முன்னோடிகளை அவர்களின் சைவத்தின் மீதான அன்பாலும் ஈடுபாட்டாலும் கொண்ட உழைப்புகாக நாம் வணங்குகின்றோம். சுவாமிநாத பண்டிதர் முன்மொழிந்த பதிப்புக் குறித்து வாய் மொழியாகவும் எழுத்துவடிவிலும் திருவாவடுதுறை ஆதீனத் தலைவருக்கு வந்த குறை மொழிகளைக் கேள்வியுற்ற பண்டிதர் சந்நிதானத்தை நேராகச் சென்று கண்டார். அவர் சந்நிதானத்தால் கண்டிக்கப்படவில்லை. மாறாக அவர் பணிக்காக மடத்துத் தலைவரின் அருளாசிகளைப் பெற்றார்.[9]

மாபாடியப் பதிப்பை மிகச் சிறந்ததாகவும் நம்பிக்கைக்குரிய தாகவும் தயக்கமின்றியும் 1921இல் கொண்டு வந்த சூரியனார் கோயில் ஆதீனத்தையே அதற்குரிய பெருமை சாரும். இது முத்துக்குமாரசுவாமித் தம்பிரானின் தன்னலமற்ற, சோர்வுறாத உழைப்பின் பயனாகும். சைவர்கள் அவர் புகழைப் பாடுதலில் என்றும் தளர்வடையார். அவர் தமிழிலும் அதற்கு நிகராகச் சமஸ்கிருதத்திலும் பெரும்புலமை படைத்தவர். அவர் மிகச் சிறந்த இலக்கண ஆசிரியர்; இலக்கணத் தம்பிரான் என்று போற்றப் பெற்றவர். அவர் ஓர் உரையாசிரியரும் ஆவார். அவர் இலங்கையிற் பிறந்தவர். அவர் சிவனுக்கும் சிவனடியார்களுக்கும் அடியவர். அவர் சிறுவனாக இருந்தபோதே குடும்பத் தொடர்புகளிலிருந்து நீங்கித் தமிழ்நாடு வந்து மாற்றுப்பெயரில் இருந்தார். 1958இல் வெளியிடப்பெற்ற ஒரு சிறு புத்தக வடிவிலான வாழ்க்கை விவரத் தொகுப்பு[10] ஒன்றே இவருடைய பெருமையை ஓரளவு நாம் அறிய உதவுகிறது. அவர் முற்றிலுமாகத் தன்முனைப்பற்றவர். அவர் பல பக்கங்களை உடைய மிகச் சிறந்த மாபாடியத்தைத் தம் குருவின் திருவடியிலிருந்து கற்றார். அவர், சைவத்தை உண்மையாகக் கடைப்பிடிக்கும் எல்லோர்க்கும் மாபாடியம் அணுகத்தக்கதாக இருக்க வேண்டுமென்று மனதார விரும்பினார். அவர் தம் இதயத்தையும் ஆன்மாவையும் ஒருங்கு ஈடுபடுத்தி மாபாடியத்தை ஆழமாகக் கற்கத் தொடர்ந்து பல ஆண்டுகள் செலவழித்தார். அதனை அச்சிடுதற்கும் ஆயத்தப்படுத்தினார். அவருடன் இருந்த தம்பிரான்களின் பங்களிப்பு இம்முயற்சியில் மிகக் குறைந்ததும் குறிப்பிடுவதற்கு உரியதல்லாததும் ஆனநிலையிலும், அவருடைய தன்முனைப்பற்ற இயல்பு, அம்முயற்சியின் சிறப்பை அத்தம்பிரான்களுக்கும் உரியதாக வழங்கினார். இதன் பதிப்பை வெளியிட உரிய நிதி உதவியை அவர் சிவஞான சித்தாந்த

சங்கம், நம் யோகியின் குடும்பத்தவரான பேராசிரியர் கா. சுப்பிரமணியபிள்ளை, பெரியகுளம் சைவசித்தாந்த சபை ஆகியோரிடருந்து பெற முடிந்தது. இந்நூலின் தலைப்புப் பக்கத்திலிருந்து, இந்நூற்பதிப்பு, காலஞ்சென்ற ஆதீனத் தலைவர் ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரசுவாமி தேசிகரின் ஆணைக்கு உட்பட்டு மேற்கொள்ளப்பட்டதாக அறிகிறோம். ஏனை ஆதீனங்கள் எல்லாம் மிகக் குறிக்கத்தக்க இப்பதிப்பு முயற்சியில் ஈடுபடாமல் இருப்பதற்கு மிக்க கவனமும் கவலையும் கொண்டன என்பதை இங்குப் பதிவுசெய்ய வேண்டியிருப்பது எனக்குத் துன்பத்தைத் தருகின்றது. இவ்வாறாக வல்லமை மிக்க எதிர்ப்புக்கிடையில் ஸ்ரீமத் இலக்கணத் தம்பிரான் கட்புலனான ஒரு வெற்றியை அடைந்தார் என்பதைக் காண இயலும். அவர் வெளிக்கொணர்ந்த இந்நூலில் தம் பெயரை எங்கும் குறிக்கப்படாமல் இருப்பதைத் தக்கதெனக் கொண்டார்.

பதினைந்து ஆண்டுகளுக்குப் பின் இவ்வெளியீட்டின் பின்பு 1936இல் மாபாடியத்தின் இரண்டு பதிப்புகள் தோன்றின. சைவசித்தாந்த மகா சமாஜம் (சென்னை) ஒரு பதிப்பைக் கொண்டு வரச் சுறுசுறுப்பாக முனைந்தபோது தென்னிந்தியச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் (கழகம் எனப் பலரும் அறிந்தது) இதனை விஞ்சவும், இயன்றால் மேம்பட்ட பதிப்பைக் கொண்டுவரவும் கருதிற்று. இவ்விரு நிறுவனங்களும், மாபாடியத்தின் மலிவுப் பதிப்புகளைக் கொண்டு வரக்கருதின. ஒவ்வொரு படியும் ஒரு ரூபாய் எட்டணா விலை பெறுவதாக இருந்தது. பயனுள்ள செய்திகளோடு ஒரு மதிப்புமிக்க பதிப்பைக் கொண்டுவரக் கழகம் முயற்சிகள் மேற்கொண்டிருப்பதை அறிந்த சமாஜம் தன் வெளியீட்டின் விலையை ஒரு ரூபாயாக ஆக்கிக் கொள்ள முடிவு செய்தது. சமாஜப் பதிப்பிற்கு பெருந்தமிழறிஞர் திரு.வி.கலியாண சுந்தர முதலியார் ஓர் எழுச்சியும் நுண்ணோக்கும் கொண்ட அணிந்துரையை வழங்கினார்.[11] இரு பதிப்புகளில் கழகப் பதிப்பு சிறப்புடையது என்பது நிறுவப்பெற்றது.[12]

இத்தொடர்பில் அறிஞர் சிலர் ஐயத்திற்கு இடமில்லாத உண்மை நிலையை உறுதிப்படுத்தும் ஒரு நிகழ்ச்சியைக் கூற வேண்டும். முதலில் தனது படியை அச்சுக்கு அனுப்பியது சமாஜம். சமாஜத்தோடும் கழகத்தோடும் தொடர்புடைய தமிழ்ப் புலவர் ஒருவர் கழகத்திற்குச் செயலில் முந்திக்கொள்ள ஓர் அறமற்ற

வழியை மேற்கொண்டார். அவர் சமாஜப் பதிப்பு அச்சேறும் சாது அச்சுக் கூடத்திற்கு நாள்தோறும் சென்று, அன்றன்று அச்சிட்ட படிவத்தைக் கள்ளத்தனமாகச் சிறிது சிறிதாகத் திருடிக் கழகத்திற்குக் கொண்டு வந்தார். சாது அச்சகத்திற்கு அவருடைய வழக்கமற்ற தொடர்ச்சியான வருகை தொடக்கத்தில் கவனத்தில் எடுத்துக் கொள்ளப்படவில்லை. எனினும் அவர் ஒவ்வொரு நாளும் அச்சகப் பணியில் காட்டிய ஆர்வம் அச்சகத்தில் உள்ள சிலரின் ஐயத்தைத் தூண்டியது. அவர் மீது கடுமையான கண்காணிப்பை மேற்கொண்டு இறுதியில் அவரைக் கையும் களவுமாகப் பிடித்தனர். அதன்பின் அப்புலவர் அச்சக எல்லையில் நுழைய அனுமதிக்கப்பெறவில்லை.

கழகத்தின் பதிப்பு முதலில் வந்தது. கழகம் 1952இல் இரண்டாவது பதிப்பையும் கொண்டு வந்தது.[13] "இந்நூலின் மறுபதிப்பைக் கொண்டுவர நாற்பதாண்டுகள் ஆயின" என்று டாக்டர் மு. அருணாசலம் கருதுவது கவனக்குறைவால் நேர்ந்த பிழை என்பது தெளிவு.[14]

டாக்டர் ச.வே. சுப்பிரமணியம் மாபாடியத்திற்கு அவருடைய பதிப்பை 1986இல் கொண்டு வந்தார். இஃது குறையுடைய பதிப்பாகும். இப்பதிப்பாசிரியர், 1977ஆம் ஆண்டிலேயே வச்சிர வேல் முதலியார் வெளிக்கொணர்ந்த ஆறாம் சூத்திரத்தோடு தொடர்புடைய இறுதிப்பகுதியை இணைக்கவில்லை.[15]

இது திராவிட மாபாடியத்தை அச்சிட்டதன் வரலாற்றுச் சுருக்கமாகும். இத்தொடர்பில், காலஞ்சென்ற அறிஞர் வச்சிரவேலு முதலியாரின் பணிகளை நாம் நன்றியோடு குறிக்க வேண்டும்.[16] அவரே மாபாடியத்தை முதலில் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவராவார். இஃது உண்மையில் பெரிதும் பாராட்டத்தக்க பணியாகும். இதனை அடிப்படையாகக் கொண்டு, சைவசித்தாந்தத்தை நன்கு சிறப்புறப் புரிந்துகொள்வதன் பொருட்டாக இக்கால வழக்கில் ஒரு செம்பதிப்பினைக் கொண்டுவர வேண்டும். இது வச்சிரவேல் முதலியாரின் குறிப்பிடத்தக்க பணியாகும். மாபாடியத்தின் கிடைக்கும் பதிப்புகள் யாவும் நிறைவு பெறாதவை. இவருடைய ஆங்கில ஆக்கமே முழுமையான பாடத்தைக் கொண்டுள்ளது. டாக்டர் வி.ஏ. தேவசேனாபதி, சென்னைப் பல்கலைக்கழகத்தின் டாக்டர் இராதாகிருஷ்ணனின் தத்துவ உயராய்வு மையத்தின்

சார்பில் அவரைப் பொழிவு ஆற்றுதற்கான நற்பணியைச் செய்தார். இச்சொற்பொழிவுகள் 'சிவஞான பாடியத் திறவு' என்ற பெயரில் வெளியிடப்பெற்றுள்ளன. இந்நூல் திராவிட மாபாடியத்திற்குச் சிறந்த வழிகாட்டி என்பது ஆற்றல் மிக்க அறிஞர் பலரின் கருத்தாகும்.

**குறிப்புகள்**

1. சைவ சித்தாந்தம் (1987 ஏப்பிரல் இதழ்) தொகுதி XXII எண் 1 (சென்னை), சிவஞான பாடியத்தின் அச்சு வரலாறு, ப. 35.

2. மேலது.

3. ஒரு தமிழ்ச் செய்யுள் இக்கருத்தில் உள்ளது.

   வானரம் மழையதில் நனையத் தூக்கணம்
   தானொரு நெறிசொலத் தாண்டிப் பிய்த்திடும்
   ஞானமும் கல்வியும் நவின்ற நூல்களும்
   ஈனருக்கு உரைத்திடில் இடர்அது ஆகுமே.

   **-விவேகசிந்தாமணி செய்யுள்-9**

4. சைவசித்தாந்தம் இரு பரம்பரையினால் பரப்பப்பட்டது. அவை நந்தி பரம்பரையும் ஸ்கந்த பரம்பரையும் ஆகும். தருமபுரத்திலும் திருவாவடுதுறையிலும் உள்ள ஆதீனங்கள் நந்தி பரம்பரையைச் சார்ந்தவை. திருவாவடுதுறை ஆதீனத்துக்கும் முற்பட்ட சூரியனார் கோயில் ஆதீனம் கந்த பரம்பரை சார்ந்தது. இதன் மூலமுதல்வர் முருகக் கடவுளே யாவர்.

5. இந்நூல் சென்னையில் உள்ள சைவ வித்யானுபாலன யந்திர சாலையில் 1906ஆம் ஆண்டில் (பராபவ ஆண்டு ஆனி மாதம்) அச்சிடப்பெற்றது.

6. இந்நூல் மதுரை விவேகபானு அச்சியந்திர சாலையில் 1906ஆம் ஆண்டு (பராபவ ஆண்டு ஆவணி மாதம்) அச்சிடப்பெற்றது.

7. ஆறாம் எண்ணுடையதற்கு ஜே.எம்.நல்லசுவாமி பிள்ளையின் அறிமுகவுரை.

8. பாரதி தரிசனம் பகுதி 1, இளசை மணியனால் தொகுக்கப் பட்டது. சென்னை நியூ செஞ்சுரி புத்தக நிலையம் (தனியுரிமை). இரண்டாம் பதிப்பு (1986), பக். 447-448.

9. சுவாமிநாத பண்டிதரின் படைப்பு, முன்னரே காட்டப்பட்ட ப. 7 (முன்னுரை).

10. இலக்கணச் சுவாமிகள் என்னும் ஸ்ரீமத் முத்துக்குமாரத் தம்பிரான் நினைவு மலர், கலாநிலையப் பதிப்பகம், யாழ்ப்பாணம் (1958).

11. சிவஞான பாடியம் சைவசித்தாந்த மகா சமாஜம், சென்னை, (1936), பக். 5-22, அணிந்துரை.

12. மெய்கண்ட தேவர் அருளிச் செய்த சிவஞானபோதமும், மாதவச் சிவஞான யோகிகள் அருளிச் செய்த சிவஞான பாடியமும், S.I.S.S.W.P. சொசைட்டி லிமிடெட், திருநெல்வேலி, மார்ச்சு 1936.

13. இந்நூல் சென்னை-1, 2/140 பிராட்வேயில் உள்ள அப்பர் அச்சகத்தில் அச்சிடப் பெற்றது.

14. காண்க குறிப்பெண் 1, ப. 41.

15. காண்க பக். 190, 191, சிவஞானபாடியத் திறவு. வச்சிரவேல் முதலியார், இராதாகிருஷ்ணன் தத்துவ உயராய்வு மையம், சென்னைப் பல்கலைக்கழகம் (1977).

16. சிவஞான மாபாடியம் (வச்சிரவேலு முதலியாரால் மொழி பெயர்க்கப்பட்டது) மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1985, 323ஆம் பக்கத்தின் அடிக்குறிப்பு வருமாறு: "கீழ்வரும் தொடர்ச்சி, திருவாவடுதுறை ஆதீனத்தால் பாதுகாக்கப்பட்ட பனை ஓலைகளின் பதிவிலிருந்து எடுக்கப்பெற்றது. (என்னுடைய 'சிவஞானபாடியத் திறவு) என்னும் தமிழ் நூலின் பக்கம் 189(3) காண்க. சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு, 1977).

7

# காஞ்சிப்புராணம்

**த**மிழ்த் தலபுராணங்கள் ஆற்றியுள்ள பணியின் சிறப்புக் குறித்து நான் டாக்டர் மாதவனின் நூலான 'தமிழில் தல புராணங்கள்- பகுதி-1' என்பதற்கு அளித்த அணிந்துரையில் விரிவாகக் கூறியுள்ளேன். படிப்பவரின் தெளிவான நோக்கிற்காக வழங்கும் பொருட்டு, மிகத் தேவையான ஒரு பின்புலத்தை அமைக்கும் வகையில் சில இன்றியமையாச் சிறப்புடைக் கூறு களைச் சுருக்கமாக இங்குக் கூறுவேன்.

டேவின் டீன் சுல்மன் தமிழ்த் தலபுராணங்கள் குறித்துக் கூறுகையில் "இத்தலபுராணங்கள், இந்தப் புராணங்களிலிருந்து தனித்த ஆர்வமும் முக்கியத்துவமும் வாய்ந்த வட்டார வேறுபாட்டை நமக்குக் காட்டுகின்றன. இவ்வட்டாரங்களின் நீண்ட, தொடர்ந்த பண்பாட்டு மரபைப் பெற்றுள்ளமையால் குறைபாடு உடையன அல்ல"[2] என்கிறார். எனினும் தமிழர்களிடையே இவ்வகைச் சமய இலக்கியம் அறியப்படாத களமாகவே உள்ளது.

நாற்பது ஐம்பதுகளில், தமிழ்நாட்டை ஓர் அமைப்புக் குலைவு அலைவீச்சு ஆட்கொண்டது. புராணங்கள், குறிப்பாகத் தலபுராணங்கள், கண்டனத்திற்கும் இகழ்ச்சிக்கும் உள்ளாயின. இவ்வியக்கத்தின் ஆதரவாளர்கள் ஆற்றொழுக்கான பேச்சாளர்கள் ஆவர். இவர்கள் தம் பகட்டாரவாரமும் வீராவேசமும் நிறைந்த பேச்சால், சமஸ்கிருதத்தோடு சிறிது தொடர்புடையனவாக ஐயப்பட்ட நூல்களின் மீது எளிதில் மாற்றமுடியாத ஒரு வெறுப்பை, விவரமற்ற இளைஞர்களின் நடுவே வலிந்து புகுத்தினர். ஒவ்வொரு நகரும் தம்முள் போட்டி போட்டுக் கொண்டு புராணங்களைத் தீயிலிட்டுக் கொளுத்திற்று. இந்தக் கசப்புணர்வு ஒரு தணிவான நிலைக்கு வந்த இப்போது தலபுராணங்களில் ஆர்வம், தமிழ்நாட்டு அறிஞர்கள் அல்லாத பிறரின் நன்றிக்குரிய படைப்புகளால் மீளவும் உயிர்ப்புற்றது. இன்றைக்கு மேலை ஐரோப்பிய உலகமே கீழ்த் திசைக்குப் பரிவாயுள்ளது. அறிவு எந்த மூலத்திலிருந்து வருவதாயினும் நாம் வரவேற்போமாக!

தலபுராணங்கள் தழைப்பதற்குரிய காலச் சூழல் பொருந்தியதாகப் பதினெட்டாம் பத்தொன்பதாம் நூற்றாண்டுகள் விரைந்து தோன்றின. மகாவித்வான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை இருபத்திரண்டு தலபுராணங்களை இயற்றினார். டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் தம் குருவின் வாழ்க்கை வரலாற்று நூலில் பிள்ளையவர்களின் கும்பகோணப் புராணம் அரங்கேற்றப்பட்டபின் நிகழ்ந்தவற்றைக் கூறியுள்ளார். அச்செய்தி கீழ்வருமாறு: “கும்பகோணப் புராணம் அரங்கேற்றி முடிந்த பின்பு அவ்வூரிலுள்ள பிரபுக்கள், இவருக்குச் சால்வை, பட்டு, வஸ்திரம் முதலிய சம்மானங்களும், பொதுவில் தொகுத்த ரூபாய் இரண்டாயிரமும் வழங்கினர்.[3] புராணமெழுதிய சுவடியை வெகு விமரிசையுடன் யானைமேலுள்ள தவிசில் வைத்து ஊர்வலம் செய்வித்தார்கள். அப்பொழுது பெரிய மேனாப் பல்லக்கு ஒன்றை விலைக்கு வாங்கிக் கொடுத்து அதில் பிள்ளையவர்களை இருக்கச் செய்து தக்க பிரபுக்களிற் சிலர் தாமே சில தூரம் சுமந்து சென்று தமிழ் மொழியில் தங்களுக்குள்ள அன்பைப் புலப்படுத்திப் பண்டைக்கால வழக்கத்தைத் தெரிவித்தார்கள்.” இது நிகழ்ந்தது 1866ஆம் ஆண்டிலாகும். கடந்த நூற்றாண்டுத் தமிழர்கள் தலபுராணங்களின் ஊக்கமிக்க செல்வாக்கிற்கு கூர்மையான ஈடுபாடு காட்டினர் என்பதைச் சொல்ல வேண்டிய தேவையில்லை.

காஞ்சிப்புராணம் எப்போது எழுதப்பெற்றது என்பதை நாமறியோம். அதன் அரங்கேற்றம் எப்போது நிகழ்ந்ததென்பதும் நமக்குத் தெரியாது. எனினும், அது தொடங்கப்பெற்ற நாளில் சிலர் அக்கப்பலில் துளையிட்டுக் கவிழ்க்க முயன்றனர். பொறாமையாலும் வெறுப்பாலும் தோன்றிய இத்தகைய சில முயற்சிகள் டாக்டர் உ.வே.சாமிநாத ஐயரால் குறிக்கப்பட்டுள்ளன.[4] சிவஸ்ரீ அருணை வடிவேல் முதலியாரின் கூற்றை அடிப்படையாகக் கொண்டு டாக்டர் சுல்மன் கூறியுள்ள நிகழ்ச்சிகள் வருமாறு:

“காஞ்சிபுரத்தில் நிகழ்ந்த அரங்கேற்றத்தில், சிவஞான யோகியின் மீது பொறாமை கொண்டவர்கள் அவரைத் தொல்லைப் படுத்தமுயன்றனர். அவர்களின் கட்டளைகளின்பேரில் செயற்பட்ட ஓதுவார் ஒருவர் (தேவாரப் பாடல்களை இசைப்பதில் பயிற்சி பெற்றவர்) நடராசரைக் குறித்து ஓதப்பெற்ற கடவுள் வாழ்த்தின் மூன்றாவது செய்யுளுக்கு ஒரு மறுப்பை எழுப்பினர். “காஞ்சி புரத்தைக் குறித்த புராணம் ஏகாம்பரநாதரை (காஞ்சிபுரத்தில்

உள்ள சிவபெருமான்) வாழ்த்துவதாகத் தொடங்க வேண்டு மேயன்றி சிதம்பரத்தில் உள்ள கடவுளை வாழ்த்துவதாகத் தொடங்கக்கூடாது" என இகழும் நோக்கில் கூறினார். சிவஞான யோகியின் மாணவரானகச்சியப்பர் அந்த ஓதுவாரைக் காஞ்சிபுரத் தலத்திற்குரிய தேவாரத்தை ஓதுமாறு கேட்டுக் கொண்டார். ஓதுவார் உடனடியாக அதனை ஏற்றார். அவர் பயபக்தியோடு தொடங்கினார். ஆனால் வழக்கமான முறையில் அவர் தொடக்க மாகக் கட்டளைச் சொல்லான 'திருச்சிற்றம்பலம்' என்று கூறித் தொடங்கவும் கச்சியப்பர் அவரை இடைமறித்து, "நீங்கள் காஞ்சித் தேவாரத்தை இசைப்பவரானால் 'பிருதிவியம்பலம்' என்று கூற வேண்டாவா" எனக் கேட்டார். ஓதுவார் "எல்லாத் திருக்கோயில்களின் அருட்பாடலையும் ஓதுமுன் 'திருச்சிற்றம்பலம்' என்று கூறுவது மரபென்றார். கச்சியப்பர், "சரி. சைவப் படைப்பு களைத் தொடங்கும்போது அதேபோல நடராசப் பெருமானைத் தொழுது வேண்டுவது முறையென்பது உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும், நீங்கள் முறைாகப் படித்திருந்தால்' எனக் கூறினார்.

காஞ்சிப்புராணம் முதன்முறையாக வெகுதான்ய ஆண்டில் (1878)6 வெளியிடப்பெற்றது. இப்பதிப்பு இரண்டு காண்டங்களையும் கொண்டது. இவற்றில் முதலாவது நம் யோகியாலும் இரண்டாவது அவர்மாணவர் கச்சியப்பராலும் இயற்றப்பெற்றன. இங்கு நாம் யோகியின் படைப்புக் குறித்தே காண்கிறோம். நம் யோகியே இந்நூல் சமஸ்கிருதத்திலிருந்து மொழிபெயர்க்கப்பெற்றது எனக் கூறியிருப்பினும், சேக்கிழார்பெருமானின் திருக்குறிப்புத் தொண்டர் புராணம் என்னும், பெரிய மாளிகையின் மீதே தம் புராணத்தைக் கட்டமைப்புச் செய்துள்ளார் என்பதில் நான் நம்பிக்கை கொண்டுள்ளேன். திருக்குறிப்புத் தொண்டர் புராணம் 128 செய்யுட்களைக் கொண்டது. அவற்றில் முதல் 110 பாடல்கள் தொண்டை மண்டலத்தை, அதிலும் குறிப்பாக, காஞ் சிபுரமாகிய தொண்டர் அவதாரத் தலப் புகழைப் பாடுகின்றன. அவை செய்திகளின் சுரங்கமாகத் திகழ்கின்றன. காஞ்சி காசியை (வாரணாசி) ஒத்த பெருமையுடையது. காஞ்சி அளவிறந்த கல்வியுடையது. கல்வியிற் கரையிலாத காஞ்சி மாநகர் என்பது அப்பர் பெருமான் வாக்காகும். ஆதி சங்கர பகவத் பாதர் இங்கு தான் சர்வாங்க மடத்தை நிறுவினார். காஞ்சியில் உள்ள சைவ சித்தாந்த மடம் தொண்டை மண்டல ஆதீனம் எனப் பெயர்

பெற்றது. இது மிகப் பழமையானது. ஏகாம்பரேஸ்வரர் கோயிலில் உள்ள புனித மாமரம் மூவாயிர ஆண்டுக் கால வயதுடையது என்று கூறப்படுகிறது. யுவான் சுவாங் பல செய்திகளை அறியக் காஞ்சியில் தங்கியிருந்தார். காஞ்சியைக் குறித்து அவர் கூறுவன வருமாறு:

"தா-லோ-பி-ச்சா (திராவிடம்) என்னும் நாடு 6000லி (1லி=633 கெஜம்) பரப்புடையது. இதன் தலைநகர் காஞ்சிபுரமாகும். இஃது ஏறத்தாழ 30லில் வட்டமுடையது. இங்கு வெப்பநிலை சூடாக உள்ளது. இங்குள்ள மக்கள் வீரம்நிறைந்தவர். அவர்கள் நேர்மை, உண்மை என்னும் கொள்கைகளோடு நெருக்கமாகப் பிணைக்கப் பட்டவர்கள். அவர்கள் கல்வியைப் பெரிதும் மதிப்பவர்கள்... அங்குச் சில நூறு சங்கிராமங்கள் உள்ளன. 10,000 துறவியரும் உள்ளனர். அவர்கள் அனைவரும் மகாயானத்தின் ஸ்தாவிரப் பள்ளியின் போதனைகளைப் பயில்கின்றனர். அங்கு ஏறத்தாழ எண்பது தெய்வக் கோயில்களும் நிக்கந்தர் எனப்பெற்ற கடவுள் மறுப்புக் கொள்கையுடைய பலரும் இருந்தமை அறியப்பெறும். காஞ்சிநகர் தர்மபால போதிசத்துவரின் பிறந்த இடமாகும்.8

காஞ்சியின் பலதிறப்பட்ட புகழால் ஈர்க்கப்பெற்ற நம் யோகி பலவற்றை இடைமிடைந்து தம் புராணத்தை எழுதினார். காஞ்சிப்புராணத்தை அணுக்கமாகப் படிப்பவர்களை ஈர்ப்பது. யோகியின் காஞ்சிப்புராணத்தில் பல அறிவுக் கூறுகளை ஒழுங்குகுற அமைத்துள்ள திறனாகும். இந்நூலில் உள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்கள் பத்தொன்பது ஆகும். இவற்றின் பின் யோகி இப்புராணத்தை எழுதியதற்கான காரணத்தைக் கூறுகின்றார். அதனை அடுத்துத் தொடரும் மூன்று பாடல்கள் அவையடக்கப் பொருள் உடையன. அதன்பின் சிறப்புப் பாயிரமாக நம் யோகியைப் பின்பற்றுபவர் அல்லது அவர் மாணவர் ஒருவரால் எழுதப்பட்டதாக ஐயமின்றி அறியப்பெறும் ஒரு பாடல் உள்ளது. இந்நூல் 65 படலங்களில் 2742 செய்யுட்களைக் கொண்டுள்ளது.

காஞ்சியிலும் அதைச் சுற்றியும், தேவாரப் பாடல்களை அருளிய மூவரில் ஒருவர் அல்லது அதற்கு மேற்பட்டவர்களால் பாடப்பெற்ற திருக்கோயில்கள் உள்ளன. கோயில்களை வரலாற்றுப் படுத்தும் நோக்கில் நம் யோகி, சம்பந்தப்பெருமான்

தம் பதிகத்தில் போற்றிப் பாடியுள்ள கச்சிநெறி காரைக்காடு என்னும் கோயிலை முதலாவதாகத் தேர்ந்து கொள்கிறார். அதன் பின் அவர் சுற்றிலுமாகத் தொடர்ந்து சென்று இறுதியில் திருவேகம்பம் என்னும் மூலக்கோயிலுக்கு வருகிறார். அவர் அதன்பின் காமாட்சி சிவலிங்கத்தை வழிபடுவதையும், வெள்ளம் பெருகி வந்து சிவலிங்கத்தை அடித்துச் செல்ல முயல்வதையும், அதனை வெள்ளப் பேரழிவிலிருந்து காப்பாற்றக் காமாட்சி அந்த லிங்கத்தை தழுவிக் கொள்வதையும், இதன் விளைவாக இறைவன் தனதுடம்பில் இறைவியின் முலைச்சுவடுகள் பதிந்த அடையாளத்தைக் கொள்வதையும் கூறுகின்றார். பிறகு யோகி களிப்பூறும் பக்திப் பாடல்கள் பலவற்றால் காமாட்சி - ஏகம்பர் திருமணத்தைக் கொண்டாடுகின்றார். பின்பு யோகி, காஞ் சிபுரத்தோடு தொடர்புடைய பெருமைமிக்க அற்புதங்களை ஆழ்ந்த ஈடுபாட்டுடன் எடுத்துரைக்கின்றார். இறுதியாக யோகி, இப்புராணத்தைக் கற்பதன் வழியாக ஒருவர் பேரின்பம் எய்துவர் எனக்கூறுகின்றார். புண்ணியப் பேறான வாழ்க்கையை இப்புராணம் பரிந்தளிக்கிறது. நல்வினை ஆற்றிய உயிரே இறுதியாக சிவனின் திருவடிகளைச் சார்ந்து நிலைபேறான பேரின்பத்தைத் துய்க்க முடியுமென்பதைக் கருத்திற்கொண்டு யோகி சைவர் அடைய வேண்டியனவும் பேணவேண்டியனவுமாகிய பல நல்வினைகளை யும் தகவுகளையும் இந்நூலில் விளக்குகின்றார்.

நம் யோகி ஒவ்வொரு கோயிலுக்கும் ஒரு படலத்தை உரித்தாக்கியுள்ளார். சுருக்கமான வரலாறுகளைக் கொண்ட கோயில்களை மிகப் புகழ்பெற்றனவும் பக்கத்தில் உள்ளனவுமான கோயில்களின் வரலாறுகளோடு இணைத்து, அதன்வழி அவை மிக விரிவாகப் பேசப்பட்டிருக்கின்றன. காசி மயானத்தைத் தவிர்த்து, வாலீச்சரம், வெள்ளக்கம்பம், கள்ளக்கம்பம், நல்லக்கம்பம் ஆகியவை 'தழுவக் குழைந்த படல'த்தில் சேர்க்கப்பெற்றுள்ளன. வரலாற்றுத் தொடர்புகளை உள்ளத்திற்கொண்டு கணேசம், கடக்கேசம், யுகேசம் ஆகியவை குறித்த அவர் விளக்கங்கள் 'தழுவக்குழைந்த படல'த்திலும், 'சிவ புண்ணியப் படல'த்திலும் சேர்க்கப் பெற்றுள்ளன. கோயில்களின் வரிசைக்கே முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருப்பதால் காலவரிசைப்படியாகச் சொல்லுதல் இடம் பெறவில்லை.

புராண முழுமையும் மிகப்பெரிய உண்மைகளைச் சூல் கொண்டுள்ளது. இந்நூல் அரியதும் நுணுக்கமானதும் ஆன கருத்துக்களின் செறிவாக உள்ளது. படலத்தின் அளவு அதன் தகுதிக்குரிய அடையாளமன்று. சிறிய படலங்களும்கூட தன்மையில் பெரிய படலங்களே. அவை இன்றியமையாதனவும் வலிமை மிக்கனவுமான செய்திகளைச் செறியக் கொண்டுள்ளன. எடுத்துக் காட்டாகச் சந்தானப் படலம் பதின்மூன்று செய்யுட்களைக் கொண்டது. இது பசுதருமம், பதிதருமம் ஆகியவற்றின் உண்மை நிலையைக் கூறுகின்றது. பணாதரேச படலம் ஏழு பாடல்களின் தொகுப்பாய், நற்பண்புகளை உடையவர்கள் பெரியாரோடு இணைந்திருக்க வேண்டிய தவிர்க்கமுடியாத தேவையை உரிமை யோடு எடுத்துரைக்கின்றது. முப்புராக் கோட்டப் படலம் படிப்ப வரிடையே உபயாச் சரியை, உண்மைச் சரியை மற்றும் பிறவற்றை வற்புறுத்தும் வகையில் சிந்தையுட் செலுத்துகின்றது.

உபநிடதங்களும் இதிகாசங்களும், புராணங்களும் சைவ ஆகமங்களும் சமஸ்கிருத தமிழ்ச் செவ்விலக்கியங்களும் அருநிதியங் களாகக்கொண்ட பேருண்மைகள் காஞ்சிப்புராணத்தில் தகுதியுற விரித்துரைக்கப் பெறுகின்றன. உண்மையில் இந்நூல் உபநிடதங்களும் புராணங்களும் கூறும் செய்திகளை மகிழ்ச்சி நிரம்பவும் தெளிவுற வும் அழகு தமிழில் நிரப்பி வைத்துள்ளது. அவருடைய மொழிபெயர்ப்பைக் கெடுக்கும் நிலையில் எந்த மிகையான தெளிவற்ற சொல்லும் இல்லை. அவர் இறுக்கமான சமஸ்கிருதச் சொற்படிவங்களின் வேர்களுக்குள் உட்புகுந்து, சீரொழுங்குபடாத சொல் மூலங்களாகிய தங்கத்தாதுக்களை அகழ்ந்து எளிதில் புரிந்து கொள்ளும் வண்ணம் வெளிக்கொணர்கிறார். இவற்றைத் தமக்கே உரிய ஒரு செயல்முறையால் தூய்மை செய்து இயலுமான உச்ச அளவு ஆக்கம்பயக்கும் வகையில் காட்சியகப்படுத்துகின்றார். மந்திரங்களைப் பிழைபடாமல் வெளியிடுவதற்காக நாம் யோகிக்கு நன்றிக்கடன்பட்டுள்ளோம்.

அவருடைய முழுமையான குறிக்கோள் உயிர்களை மேம்படுத்தும் பொருட்டாகச் சைவசித்தாந்தத்தைப் பரப்புவதாகும். அவர் மறை நூல்களின் பொருளுணர்த்தும் உத்தியில் கைதேர்ந்தவர். இந்நூல் முழுமையும் சைவசித்தாந்தக் கூறுகள் பரவியுள்ளன. சில இடங்களையாவது இங்குக் குறிப்பிடுவது தவிர்க்க முடியாததாகும். 'மாயை காரிய' என்னும் சொற்களோடு தொடங்கும் செய்யுள்

பதியின் பரிக்ரக சக்தியைக் குறித்த ஒரு சிறிய ஆய்வேடாகும். சிவபெருமானின் இருப்பால் பல படிவங்களில் தோன்றும் மாயை உண்மையில் அப்பெருமானின் அருள் வடிவங்களே என்பது இதன் மையக் கருத்தாகும். "போத மேலாக' என்ற சொற்களோடு தொடங்கும் செய்யுள் 'வாசனா மலக்' கோட்பாட்டை அழுத்தமாக எடுத்துரைப்பதாகும். திருநாட்டுப் படலத்தின் 17ஆம் செய்யுள் 'ஏகம் சத் விப்ரா பகுதா வதந்தி' என்ற வேத உறுதிப்பொருளை மீண்டும் உரைப்பதாகும். இப்படலத்தின் 32ஆம் செய்யுள் சற்காரியவாதத்தின் வலிமையைப் போற்றுகின்றது. காஞ்சியின் சிறப்பை மொழியும்போது யோகி ஓர் இனிய ஒப்பீட்டை அறிமுகம் செய்கிறார். தங்கள் நகரமே பெரியதென்று கருதும் தேவர்கள் காஞ்சியைக் காணும்போது வெட்கித் தலைகுனிகின்றனர். அவர் களின் அப்போதைய நிலை, நீண்ட காலம் பிற சமயங்களைத் தொடர்ந்து சென்று இறுதியில் மேம்பாடுமிக்க சைவத்தைத் தழுவியது போலிருந்தது.[10] 'கொங்கு அவிழ்' எனத் தொடங்கும் செய்யுள் இதயக்குகையில் இறைவனைப் போற்றி மேற்கொள்ளும் 'தருமவித்தை'யை உட்பொருளாகக் கொண்டது. சித்தாந்திகள் மெய்கண்ட சாத்திரங்களை நன்கறிந்து கொள்ளப் பிழையற்ற ஒரு வழிகாட்டியாக உதவுமாறு யோகி இப்புராணத்தை அழகுற ஆக்கியுள்ளார்.

காஞ்சிப்புராணம் ஸ்மிருதிகளின் ஸ்மிருதியாகும். 'ஒழுக்கப் படலத்தின்' முப்பத்தொன்றாம் செய்யுளால் இது தெளிவாகிறது. இச்செய்யுள் "இப்புராணம் உண்மையில் வேத சாரமாக உள்ளது. அக்கறை மிக்க வாசகரை இப்புராணம் அறம், பொருள், இன்பம், வீடென்னும் நன்கு உறுதிப் பொருள்களில் ஈடுபடுத்துகின்றது. அது தெய்வீகக் கலைத்தொகுப்பின் களஞ்சியமாகும். அந்நூல் ஏகம்பர், மற்றுமவர் தேவி காமாட்சியின் புகழ் மேம்பாடுகளைப் போற்றுகின்றது. அது வருணாச்சிரம தர்மத்தின் மீதான நுணுக்க மிக்க ஆய்வாகும். எனவே இதனைத் தக்க கவனத்தோடு பயில வேண்டும். 'ஒழுக்கப் புராணம்' அறிவியல் மற்றும் நீதியியலின் சாரமாகும். அது சாதகர் ஒருவர் தெரிந்து கொள்ள வேண்டிய, தெரிந்து கொள்ளத் தேவையான எல்லாவற்றையும் உடையது" என்கிறார்.

காஞ்சிப்புராணம் ஒரு சைவக் கலைக்களஞ்சியமாகும். அது சைவ சித்தாந்தத்தின் பொருளடக்க நூலாகவும் பயன்படுகிறது.

இந்நூலில் இந்திய மெய்யியலின் ஆறு கோட்பாடுகளும் விளக்கப் பெற்றுள்ளன. இந்நூல் தமிழ் யாப்பியல் குறித்தும் இயன்ற மிகச் சிறந்த படைப்பாகும். யோகி போற்றத்தக்க தம் கைத்திறனால், தமிழை வளப்படுத்தியுள்ள பலவகை யாப்புகளை இந்நூலில் கையாண்டுள்ளார். யோகி கையாண்டுள்ள பல்வகை யாப்புகளை உல்ரிக் நிக்கலஸ் போன்ற அறிஞர்கள் சிறப்புற ஆராயவும், அவற்றின் பெருமையை ஒப்பிலக்கண நோக்கில் எடுத்துக் காட்டவு மான நாற்பணியில் ஈடுபடவேண்டும். சுரகரேசப் படலத்தின் சில பாடல்கள் (எல்லாமாக 45 பாடல்கள் அடங்கியது) தங்கத் தகடுகளில் வைர எழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியவை. திரிபு, இரண்டடிப் பாடக மடக்கு, முரசபந்தம், கோமூத்ரி, கூட சதுக்கம், மாத்திரைச் சுருக்கம், மாத்திரை வருத்தனை, எழுத்து வருத்தனை, உபய நாக பந்தம், சருப்பதோ பத்திரம், மாலை மாற்று, காதை கரப்பு ஆகியவற்றின் செழுமையான எடுத்துக்காட்டுகள் இப்படலத்தில் காணப்படுகின்றன. நம் யோகி தனித்தன்மை வாய்ந்த ஒரு சித்திர கவியுமாவார். இதைக் குறித்துப் பொதுவாக வழக்கிலுள்ள ஒரு நிகழ்ச்சி இங்குப் பதிவு செய்யப் பெறத் தகுதி யுடையது.

நம் யோகி நாட்பூசை செய்வதற்காக வழக்கமாக நீண்ட நேரம் எடுத்துக் கொள்வார். அவருடைய மாணவர் தம் வழிபாட்டிற்கு அவ்வளவு நேரம் கொள்வதில்லை. ஒருநாள் கச்சியப்பர் தம் குருவைக் காணவந்தபோது, யோகி வழிபாட்டில் மூழ்கியிருப்பதைக் கண்டார். மாணவர் மெதுவாகப் பின்வாங்கி மடத்தின் பின் பக்கத்திற்கு வந்தார். அவர் அங்குத் தரையில் புதுமணல் பரப்பியிருப்பதைக் கண்டார். அவர் சில நாட்களாகச் சிக்கல் மிக்க சித்திர கவி ஒன்றை உருவாக்குவதில் ஈடுபட்டிருந்தார். அவர் தம் விரலால் தரையின்மீது அச்சித்திரத்தை வரைந்து தம் படைப்பை உருவாக்குவதில் முழுமையாக ஈடுபட்டார். எனினும் அவர் அச்செய்யுளை முழுமை செய்வதற்குத் தக்க குறிப்பிட்ட ஓரெழுத்தைக் குறித்து நினைக்க முடியவில்லை. ஒவ்வோர் எழுத்தாக அவர் மாற்றிப் பார்த்தும் பயனில்லை. இந்நேரத்தில் தம் வழிபாட்டை முடித்துக்கொண்ட யோகி பின்புறம் வந்தார். அவரைக் கவனிக்காமல் தம் பணியிலேயே மாணவராகிய கச்சியப்பர் ஈடுபட்டிந்தார். இச்சூழலில் கண்ணிமைக்கும் நேரத்திற் குள்ளாகத் தம் மாணவரை நோக்கி, "எவ்வாறு உம்மால் குறிப்பிட்ட

இவ்வெழுத்து நினைக்கப்படாமல் போயிற்று" என்று கேட்டார். உண்மையில் அந்த ஓரெழுத்து மட்டுமே அங்குக் கருதிய உத்தியைச் செய்யவும் பாட்டை நிரப்பவும் முடியும். இப்போது எல்லாம் அதனதன் இடத்திற்பொருந்த அமையுமாறு யோகி அளித்த எழுத்து நினைந்து போற்றற்குரியது. கச்சியப்பரான அம்மாணவரே கல்வியல்ல பெரியவர். அவர் மாணவரைவிட ஆசிரியர் எக்காலும் பெரியவர் என்பதை உணர்ந்தார்.

காஞ்சிப் புராணத்தில் பல சித்திரக் கவிகள் உள்ளன. வழக்கமாக ஒரு சித்திரக்கவி எழுதப்படும்போது, அஃது இலக்கண விதிகளுக்கு முற்றிலும் பொருந்துவதாக இருந்தாலும் அது கவிதைப்பாங்கில் குறைவுடையதாக இருக்கும். ஆனால் நம் யோகி கவிதையின் உயர்ச்சி சித்திரக்கவிக்கு உயிர்ப்பூட்டுமாறு எழுதுவது இயலாததன்று எனச் செய்து காட்டினார். நம் யோகி மாலைமாற்றுச் செய்யுள் வல்லுநர். இருவழியும் ஒத்துவரும் இச்செய்யுளைத் தமிழில் மாலைமாற்றென்பர். நம் யோகியின் மாலை மாற்றுச் செய்யுளில் நான் ஓரடியைக் கீழே தருகிறேன்.

**வீ யா வா மா மா வா யா வீ**

இவ்வசைகள் இருபுறமும் படிக்கக்கூடியன.

நன்கு கற்றுத்தேர்ந்த அறிஞர் குழாம் காஞ்சிப்புராணத்தில் ஆராய்ச்சி மேற்கொள்ள வேண்டும். அந்நூல் பல்வேறு கோணங்களிலிருந்து அணுகப்பெற வேண்டும். இப்பணி செய்யப் பெற்றால்புலமை மிக்க பெருநூல்களின் வரிசை ஒன்று வெளிவரும். வருங்காலத்தில் அத்தகைய பணித்திட்டம் மேற்கொள்ளப்படலாம். இன்றைய அளவில், காஞ்சிப் புராணத்தில் பலதுறையைச் சிறப்புக் களைச் சுருங்க உரைப்பதாக ஒரு சிறிய நூலே உள்ளது. அந் நூலின் ஆசிரியர் தாகூர் சட்ட விரிவுரையாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை ஆவார்.

**குறிப்புகள்**

1. *தமிழில் தலபுராணங்கள், டாக்டர் வே.இரா.மாதவன், பாவை வெளியீடு, சி-1 தமிழ்ப் பல்கலைக்கழகம் ஆசிரியர் குடியிருப்பு, தஞ்சாவூர், 1995*

2. Tamil Temple Myths by David Dean Shulman, Princeton University Press, New Jersey, 1980. p. 3.

3. ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் சரித்திரம், பகுதி-1, டாக்டர் உவேசுவாமிநாத ஐயர், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1985, பக்: 274-275.

4. மேலது, பகுதி-2, பக்: 44-46.

5. Tamil Temple Myths by David Dean Shulman, Princeton University Press, New Jersey, 1980, p.87.

6. காஞ்சிப் புராணம், ஆதி கலாநிதி அச்சகம், சென்னை, வெகுதான்ய- புரட்டாசி.

7. St. Sekkizhar's Periya Puranam, Part-I, Translated by T.N. Ramachandran, Sahitya Akademi, New Delhi, 1994.

8. Kanchi of the Early Seventh Century in Saint Sekkizhar, T.N. Ramachandran, Sahitya Akademi, New Delhi, 1994.

9. காஞ்சிப் புராணம், பதிப்பு சி. அருணைவடிவேலு முதலியார், குமரன் அச்சகம், காஞ்சிபுரம், முன்னுரை, ப. 15.

10. மேலது, திருநகரப் படலம், செய்யுள் - 4.

11. மேலது, செய்யுள் 19.

12. சிவஞான முனிவர், வரலாறும் நூலாராய்ச்சியும், கா. சுப்பிரமணிய பிள்ளை, ஹிலால் அச்சகம், திருநெல்வேலி, 1932.

## 8

# சிவஞான யோகியின் ஏனைய நூல்கள்

**ப**ல்கலை வல்லவராகிய நம் யோகி இருபத்தெட்டு நூல்கள் எழுதியுள்ளார். இவற்றுள் மூன்று இலக்கணம் சார்ந்தன; பதினைந்து இலக்கியம் சார்ந்தன; ஆறு சைவசித்தாந்தத்தையும் ஒன்று தருக்கத்தையும் சார்ந்தன.

## இலக்கண நூல்கள்

### 1. தொல்காப்பியச் சூத்திர விருத்தி

**இ**ந்நூலின் தெளிவான மதிப்பீடு ஒன்று சிவஸ்ரீ டி.சி.எஸ். இராமச்சங்கு பாண்டியனால் இந்த நூற்பெயரிலேயே அமைந்த ஒரு கட்டுரையில் பெறப்பட்டுள்ளது.[1] யோகியின் இந்நூல், கிறித்து நூற்றாண்டுக்கு முற்பட எழுந்த தமிழ் இலக்கணமான தொல்காப்பியத்தின் பாயிரம் மற்றும் முதற் சூத்திரத்தின் பெருமையையும் உரைக்கின்றது. இந்நூல் வெளிவருவதற்கு முன்னர் கற்போர் பல ஐயங்களால் அலைக்கழிக்கப்பட்டனர். நம் யோகி இக்கருத்துகளுக்குத் தந்த விளக்கங்கள் வரம்போல உதவின. இதனை எழுதுவதற்கு யோகி பதஞ்சலியின் மகா பாஷ்யத்தைப் பயன்படுத்தியுள்ளார். எனினும் அதே நேரத்தில் தமிழின் தனிச்சிறப்புக் கூறுகளையும் அவர் முன்னெடுத்துக் காட்டு கின்றார்.

### 2. இலக்கண விளக்கச் சூறாவளி

**இ**ந்நூலை நம் யோகி, தருமபுர ஆதீன பக்தரும் புலவருமான ஒருவர் எழுதிய இலக்கண விளக்கம் என்னும் நூலுக்கு மறுப்பாக எழுதினார். அந்நாளில் இரண்டு ஆதீனங்களும் கருத்தொற்றுமை இல்லாதிருந்த நிலையில் நம் யோகி தம் ஆதீனத்தால் இந்நூலை எழுதுமாறு தூண்டப்பட்டிருக்கலாம். நம் யோகி இலக்கண விளக்கத்தைத் திறனாய்ந்து எண்பத்திரண்டு தடைகளை எழுப்பி யுள்ளார். நம் யோகியால் தாக்கப்பட்ட இந்நூல் உண்மையில் தமிழ் இலக்கணம் குறித்த ஒரு சிறந்த படைப்பாகும். அந்நூல் குட்டித் தொல்காப்பியம் எனவும் புகழப் பெற்றது. மகா

வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை இந்நூலை மிகவும் பாராட்டுகின்றார்.[2] சி.வை. தாமோதரம் பிள்ளை இந்நூலின் பதிப்பொன்றை வெளிக்கொணர்ந்துள்ளார். அவருடைய முன்னுரை இந்நூலுக்கு ஒரு வலிமையான காப்பாகும். நம் யோகி இந்தக் கண்டன நூலை எழுதியிருக்க வேண்டியதில்லை என்று கூறப்படுகின்றது. மெக்காலே பிரபுவின் கூற்றுப்படி ஒரு மனிதன் அறிவாளியும் பண்பாளனுமானாலும் மனிதன்தானே!

5. நன்னூல் விருத்தியுரை

**ந**ன்னூல் ஒரு தமிழ் இலக்கண நூல். இதன் ஆசிரியர் சமண முனிவரான பவணந்தியாவர். இந்நூல் பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலோ பதின்மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியிலோ தோன்றியதாகும். இந்நூலுக்கு மயிலைநாதரின் உரை உள்ளது. இவரும் சமணரே. இவ்வுரையால் நிறைவுறாத திருநெல்வேலிச் சங்கர நமச்சிவாயர் ஒரு புதிய உரை எழுத முடிவு செய்தார். இவர் திருவாவடுதுறை ஆதீனத் தம்பிரான் சுவாமிநாத தேசிகரின் மாணவராக இருந்தவர். நம் யோகி சங்கர நமச்சிவாயரின் உரையைத் திருத்தவும் விரிவாக்கவும் கருதினார். இந்த விரிவான உரையே (விருத்தியுரை) இன்று மதிப்புக்குரியதாகக் கொள்ளப்பட்டுள்ளது. இவ்விடத்தில், கீழ்வரும் ஒரு முரண்பாடு கவனத்தில் கொள்ளத்தக்கது. நன்னூல் தொல்காப்பியத்திலிருந்து பல கூறுகளில் வேறுபடுகிறது. எடுத்துக்காட்டாக, தொல்காப்பியம் மூன்று சார்பெழுத்துகளே உள்ளன என்று கூறுகின்றது. நன்னூல் பத்து எழுத்துக்களைச் சார்பெழுத்துக்களாக எண்ணுகின்றது. இத்தகைய அடிப்படை வேறுபாடுகள் தவிர்க்கமுடியாத சிக்கல்களை உண்டாக்குவன ஆகும். நன்னூல் விதிகளோடு ஒத்துச் செல்லும் இலக்கண விளக்கத்தைத் தொல்காப்பிய நோக்கில் கண்டனம் செய்யும் யோகி, சங்கர நமச்சிவாயரின் நன்னூல் உரைக்கு விருத்தியுரை செய்திருப்பதை நோக்க யோகியிடம் நடுவு நிலைமை இல்லை என்று கூறவேண்டியுள்ளது.

## இலக்கியப் படைப்புகள்

1. காஞ்சிப்புராணம்

**இ**து குறித்து ஏழாம் இயலில் விரிவாக நாம் கண்டுள்ளோம்.

### 2. சோமேசர் முதுமொழி வெண்பா

**சோ**மேசர் என்னும் சொல் இரட்டைப் பொருளைக் காட்டுகின்றது. இச்சொல் சந்திரனை அல்லது உமாவைக் குறிப்பதாகலாம். இந்நூல் 133 வெண்பாக்களைக் கொண்டது. திருக்குறளின் ஒவ்வோர் அதிகாரத்துக்கு ஒரு வெண்பாவாக இந்நூல் அமைந்துள்ளது. யோகியின் வெண்பாவின் இரண்டாம் பகுதி திருக்குறளாகவும், முதற்பகுதி இதற்குரிய யோகியின் கருத்தாகவும் அமைகின்றன. இந்நூல் ஒரு நீதிநூலாகும். இவை வெண்பாவாக இருத்தலால் எளிதில் மனனம் செய்யக்கூடியன. ஒவ்வொரு செய்யுளும் மெய்யறிவை ஒரு மருந்துப் பொதிவு *(capsule)* போல அளிப்பது. இந்நூலை எழுதுவதற்கு யோகி பெரிய புராணம், கந்தபுராணம், இராமாயணம், மகாபாரதம், ஸ்ரீமத்பாகவதம், சிவஞானபோதம், தமிழ்த்திருமுறைகள், காசிகாண்டம், சேக்கிழார் நாயனார் புராணம், தமிழ் மற்றும் சமஸ்கிருத புராணங்கள் பஞ்ச தந்திரம், இதோபதேசம், நைடதம், இறையனார் அகப்பொருள் உரை, திருவாதவூரர் புராணம், உபதேச காண்டம், இரகுவம்சம், பிரபுலிங்க லீலை, பிரமோத்திரகாண்டம், விக்கிரமோர்வசியம், சீவகசிந்தாமணி போன்ற நூல்களின் துணையை நாட வேண்டியதாயிற்று.[3] இந்நூலின் மிகச் சிறந்த பதிப்பொன்று 1921இல் வெளிவந்தது.

### 3. குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி

**ஜி.யு.** போப்பின் கருத்துப்படி, அந்தாதி என்பது ஒரு பாட்டின் இறுதிப் பகுதி அடுத்த பாட்டின் முதலாகத் தொடரும் செய்யுட்களில் அமையும் நூலாகும். வழக்கமாக இந்நூல் நூறு பாடல்களைப்பெறும். பதிற்றுப்பத்தந்தாதி பத்து வேறு யாப்பில் அமைவதாகும். இந்நூல் குளத்தூரில் எழுந்தருளியுள்ள மூலவரைக் குறித்தது. சோமேசர் முதுமொழி வெண்பாவும் இக்கடவுள் மேலதே. அப்பெருமானின் தேவி மீது நம் யோகி அமுதாம்பிகைப் பிள்ளைத் தமிழ் என்னும் நூலை இயற்றினார். குளத்தூர் குளந்தாபுரி என்றும் அறியப்பெறும்.

குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி இவ்வாறு தொடங்குகிறது.

சீரும், கல்வியும் செல்வமும் ஞானமும்
பாரும் விண்ணும் பரிக்கும் இறைமையும்

சாரும் தென்குளந் தாபுரி மேவிய
காருண் கண்டனைக் கைதொழு வார்கட்கே (1)

கொண்டலும் சமழ்ப்பக் கவிஞருக் குதவும்
கொள்கையோர் குழாம்பயில் கீர்த்தித்
தண்டக நாடுங் குளந்தையும் வாழ்க
சார்அமு தாம்பிகை வாழ்க
அண்டர்கோன் சோம நாயகன் வாழ்க
அவன்திரு வடித்தொழிற் குரிய
தொண்டர்பார் மீதெண் செல்வராய் வாழ்ந்து
துதியொடும் பெறுகமெய்ச் சீரே. (100)

4. இளசைப் பதிற்றுப்பத்தாந்தி

இளசை என்பது இளங்காடு; இது சென்னைக்கு அருகில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. இவ்வூர் அடையாளம் கண்டு அறியப்பட்டுள்ளதா எனத் தெரியவில்லை. இவ்வூரின் மூலவர் பெயர் அகத்தீச்சுரர் (அகத்தியர்) அவருடைய தேவியின் திருநாமம் பிரதானநாயகி. இந்நூல் அகத்தீச்சுரரைப் பெருமைப்படுத்துவது. சைவசித்தாந்தத்தின் தலைமைக் கூறுகள் இந்நூலில் விரித்துரைக்கப் பெறுகின்றன. இந்நூலின் தொடக்கச் செய்யுள் வருமாறு:

**இளசைப் பதிற்றுப்பத்தாந்தி**

காடு கொண்ட கடைமுடிக் கண்ணுதல்
தோடுகொண்ட கடுக்கைத் தொடையலான்
ஏடுகொண்ட பொழில்இளங் காட்டினான்
வீடு கொண்டனன் மீட்டென துள்ளமே. (8)

இந்நூலை, இறைவனின் அடியவர்களின் பாதுகாப்பையும் நல்வாழ்வையும் குறித்து இறைவனின் இன்னருளை வேண்டுவதாக யோகி நிறைவு செய்கிறார்.

5. கலசைப் பதிற்றுப்பத்தந்தாதி

கலசை என்பது தொட்டிக்கலை என்ற பெயருடைய சிற்றூராகும் இது தேவார வைப்புத் தலங்களுள் ஒன்றாகும் வைப்புத் தலமென்பது ஒரு முழுப் பதிகத்தில் இடம்பெறும் சிறப்பைப் பெறாவிடினும், ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட தேவாரப் பாடல்களில் இடம்பெறும் திருத்தலமாகும். தொட்டிக்கலை சுப்பிரமணியத் தம்பிரான் நம் யோகியின் மாணவராவார்.

இவரின் வேண்டுகோளை ஏற்றுயோகி இவ்வூரில் தங்கியிருந்தார். இம்மாணவர் ஒப்பற்ற ஒரு கவிஞராவார். இவர் கலசைச் சிலேடை வெண்பாவின் ஆசிரியராவார். சிலேடை என்பது (சமஸ்கிருதம்: ஸ்லேஷம்) இரட்டைப் பொருளுடையது.

**கலசைப் பதிற்றுப்பத்தந்தாதி**

புதியான் பழையான் புறத்தான் அகத்தான்
முதியான் இளையான் முதலான் முடியான்
பதியாம் கலைசைப் பகவன் பெருமை
மதியால் எவர்தே றிடவல் லவரே. *(3)*

இந்நூலின் மிகச் சிறந்த பதிப்பொன்று 1951இல் வெளி வந்துள்ளது.[4]

**6. கச்சி ஆனந்த ருத்திரேசர் பதிகம்**

இந்நூல் பதினொரு செய்யுட்களில் அமைந்தது. கச்சி என்பது காஞ்சி (புரம்) ஆகும். காஞ்சி தெய்வத் திருக்கோயில்கள் அமைந்த புனித நகரமாகும். ஆனந்த ருத்ரேசம் என்பது காஞ்சியின் கோயில்களுள் ஒன்றாகும். நம் யோகியின் காஞ்சிப்புராணத்தின் படி, காயா ரோகணத்தின் மேற்கிலிருந்து சிரவண தீர்த்தம் உள்ள வடமேற்கு எல்லை வரை 118 ருத்திரர்கள் சிவனை வழிபட்ட பல ருத்ரேசங்கள் உள்ளன. இப்பதியில் அமைந்த கோயில்களுள் ஒன்று ஆனந்தருத்ரேசம். இது பிள்ளையார் பாளையத்தில் உள்ள திருவாவடுதுறை மடத்துக்கு வடமேற்கில் அரை கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. ஆனந்த ருத்ரேசர் 118 ருத்ரேசர்களின் தலைவராவார். நம் யோகியின் மாணவரான கச்சியப்பர் கச்சி ஆனந்த ருத்ரேசர் வண்டுவிடு தூது என்னும் நூலின் ஆசிரியராவார்.[5]

**7. திருவேகம்பர் ஆனந்தக் களிப்பு**

இஃது ஓர் இசைப்படைப்பாகும். தலைவி தன் தோழியை விளித்து ஏகாம்பரத்தில் உள்ள மூலவராகிய தலைவரின் புகழ் மேம்பாடுகளை ஆனந்தக்களிப்போடு பாடுகிறாள். இந்நூல் இவ்வாறு தொடங்குகின்றது.

ஆனந்தம் ஆனந்தம் தோழி-கம்பர்
ஆடும்திருவிளை யாட்டினைப் பார்க்கில்
ஆனந்தம் ஆனந்தம் தோழி.

ஒன்றுவிட் டொன்றுபற் றாமல்- என்றும்
ஒன்றுவிட் டொன்றினைப் பற்றவல் லாருக்
கொன்றும் இரண்டுமல் லாமல்-நின்ற
ஒன்றினை வாசகம் ஒன்றில ளிப்பார். (1)

8. கலசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்

இந்நூல் 53 செய்யுட்களை உடையது. இது புராண நிகழ்ச்சிகள் பலவற்றைக் கொண்டது. சிவன் விஷ்ணுவுக்கு சக்கரத்தை அளித்தது, சிவன் வானார்ந்த திரிபுரங்களை எரித்தது. அவர் மன்மதனை எரித்தது, அவர் யமனை இறப்பித்தது, ஆலகால நஞ்சை ஒரு மூச்சிற் பருகியது, அவர் சரப உருத்தாங்கியது, அவர் நரசிம்மத்தை வென்றடக்கியது, அவர் பிரம்மனின் தலையை அகற்றியது, அவர் தலையில் மதி சூடியது, அவர் புலியையும் யானையையும் கொன்றது ஆகியவை இந்நூலிற் கூறப்பட்டுள்ளன. விநாயகரைக் குறித்த நிகழ்ச்சிகளில் அவர் கஜமுகாசுரனை அழித்தது, அவர் தம்முடைய உருவில் ஐந்து மூலப்பொருள்களை நிறுவியது, அவர் மதி சூடியது, அவர் இராவணனைக் கையால் அடித்தது ஆகிய சில கூறப்பட்டுள்ளன. நம் யோகியின் கருத்துப் படி விநாயக வழிபாடு நமக்கு இப்போதும் எப்போதும் உள்ள துன்பங்களை வெட்டியெறியக் கூடியது.

9. அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்[6]

இந்நூல் குளத்தூரில் கோயில் கண்டுள்ள தாய்த் தெய்வமாகிய அமுதாம்பிகையைப் பெருமையுறக் கூறுவதாகும். இந்நூலில் சைவசித்தாந்தத்தின் பல சிறப்புக் கூறுகள் இணைக்கப் பெற்றுள்ளமையைக் காணலாம். இத்தகைய இணைப்பு உடன் இயைவதாகவும் போற்றுதற்குரியதாகவும் உள்ளது. இந்நூல் உருவகங்களிலும், கருத்துகளிலும் மிக வளமாக உள்ளது. சைவ சித்தாந்தத்தில் தாய்க்கடவுள் சக்தியாகும். சக்தியின் வழியாகச் சிவன் உயிர்களை மீட்டருள்கிறார். சைவசித்தாந்தத்தில் சக்தியின் பணி மையமானது; வைணவத்தில் ஏகதேசமாக வரையறுக்கப் பட்டது.

10. அகிலாண்டேஸ்வரி பதிகம்

இப்பதிகத்தைக் குறித்த நம் கட்டுரை[7] இந்நூலின் புகழை எடுத்துரைக்கின்றது. நம் கருத்தில் இந்நூல் சோபான முறையில்

அமைந்த அருள் வெளிப்பாட்டின் தன்மையில் உள்ளது. எனவே நாம் இந்நூலின் செய்தியைத் தசகாரியத்தோடு ஒப்பிட்டுள்ளோம். இந்நூலுக்கு மிகச் சிறந்த உரை ஒன்று இலக்கண சுவாமியால் 1958இல் வெளியிடப் பெற்றுள்ளது.[8] இந்நூலின் ஆங்கில மொழி பெயர்ப்பு நூலின் பின் இணைக்கப்பெற்றுள்ளது.

### 11. திருவேகம்பர் அந்தாதி

அந்தாதி வழக்கமாக நூறு செய்யுட்களை உடையது. இந்நூல் 94 செய்யுட்களைப் பெற்றுள்ளது. உண்மையாகக் கூறின் இந்நூல் காஞ்சிப்புராணத்தின் சுருங்கிய வடிவாகும். காஞ்சிக்குப் பன்னிரண்டு பெயர்கள் உள்ளன. அவை 1. புவனேஸ்வரம், 2. மும்மூர்த்தி வாசம், 3. விஷ்ணுபுரம், 4. காஞ்சி, 5. களி சித்து, 6. இலய சித்து, 7. சகல சித்திபுரம், 8. தபோமயம், 9. பிரம்ம புரம், 10. ஆதி பீடம், 11. கன்னி காப்பு, 12. சிரபுரம் என்பன.

இந்நூலில் சிவன், ஏகம்பர் வாழ்வு, மாவுறை கம்பன், கம்பத்தன், காமகோடி மணாளன், கம்பம் மேவிய வான்பொருள், கம்பைக் கம்பர், ஏகம்பவாணன், கம்பமாவடி வாழுவான், கச்சி வானவன் என்றும் பிறவாறும் போற்றப் பெறுகின்றார்.

இந்நூலின் மிகச்சிறந்த பதிப்பு 1967இல் வெளி வந்துள்ளது.[9]

### 12. திருமுல்லை வாயில் அந்தாதி

இந்நூலில் 100 செய்யுட்கள் உள்ளன. தமிழ்நாட்டில் இரண்டு திருமுல்லைவாயில்கள் உள்ளன. இந்நூல் போற்றும் திருமுல்லைவாயில் வைஷ்ணவி கோயிலுக்கு (சென்னை) அருகில் உள்ள வடதிருமுல்லைவாயிலாகும். இந்நூல் திரிபு யமகச் செய்யுட் களால் ஆனது. சித்திரகவியும் சொல்லணியுமான 'நடுவெழுத்து அலங்காரம்' இந்நூலில் சிறந்தமைந்துள்ளது. திருமுல்லைவாயிலில் மூலவர் திருப்பெயர் 'மாசிலாமணி' என்பதாகும். மூலவரின் இப் பெயர் இந்த அலங்கார உருவில் அமையுமாறு நம் யோகியால் நடுவெழுத்து அலங்காரச் செய்யுள் புனையப்பெற்றுள்ளது. இச்செய்யுள் வருமாறு:

புதல்வி மண் ஒரேயுந்தி கஞ்சம் தெளிவி
முன்பின்.. நல்லெழுத்தான்

| சொல் | : | அதன் இணை |
|---|---|---|
| புதல்வி | : | குமாரி |
| மண் | : | காசினி |
| ஓர்உந்தி (ஓர் ஆறு) | : | பாலாறு |
| கஞ்சம் | : | தாமரை |
| தெளிவு | : | துணிவு |

மேலுள்ள ஈரசை மூவசைச் சொற்களில் இரண்டாம் அசைகள் மா, சி, லா, ம, ணி என உள்ளன. இவை திருமுல்லைவாயில் மூலவரின் பெயரைக் காட்டுகின்றன.

**13. திருத்தொண்டர் திருநாமக்கோவை**

இந்நூல் கடவுள் வாழ்த்துப் பாடலையும் சேர்த்து இருபத்து மூன்று குறட்பாக்களைக் கொண்டது. இந்நூல் சிவனடியார் அறுபத்துமூவரைப் போற்றுகின்றது. இது மேலும் சிவனடியார்களுள் தொகையடியார் ஆன ஒன்பது குழுவினரையும் போற்றுகின்றது. இந்நூல் சுந்தரமூர்த்தி நாயனாரின் புகழ்பெற்ற திருத்தொண்டத் தொகையின் சுருக்க வடிவமாகும்.

**14. பஞ்சாக்கர தேசிகர் மாலை**

இந்நூல் திருவாவடுதுறை ஆதீனத்தின் நிறுவனரும் தலைவருமான பஞ்சாக்கர தேசிகரைப் பத்துப் பாடல்களில் பெருமையுறப் பேசுவதாக உள்ளது. இந்நூல் தொடங்குமாறு:

அறிவே அருட்செல்வ மேநிறை வேஅரச சேஅடியார்
உறவே என்னாயிரு ரேமணி யேஉரு காதநெஞ்சில்
பிறிவே துரியங் கடந்த சிவானந்தப் பேரமுதச்
செறிவே கருணைப் பிழம்பே பஞ்சாக்கர தேசிகனே (1)

**15. கல்ப ராமாயண முதல் செய்யுள் சங்கோத்தர விருத்தி**

இந்த உரைநடை நூல் தெள்ளத் தெளிந்த சொற்பகட்டு வித்தையாகும். நம் யோகி பல துறைகளில் கைதேர்ந்தவர். அவர் சொற்களை எப்படிக் கையாள்வது என்பதை அறிந்தவர். அவற்றை எப்படி மாற்றுவதென்றும் அறிந்தவர். அவர் அழிக்கவும், அவற்றுக்கு மறுஉயிர்ப்பு அளிக்கவும் வல்லவர்.

அறிவுத் தோற்றவியல் பற்றிய நூல்
தருக்கசங்கிரகமும் அன்னம் பட்டியமும்

இந்தியத் தருக்கவியல் ஐரோப்பியத் தருக்கவியலினின்றும் மாறுபட்டது. இந்தியத் தருக்கம் தமிழில் 'அளவை' எனப்படும். இச்சொல் சமஸ்கிருதச் சொல்லிணைகளாற் குறிக்கப்பெறுகின்றது. அவை: ஆன்வீக்ஷிகி, நியாயவிஸ்தாரம், நியாய தரிசனம், தர்க்க சாத்திரம், பிரமாண சாத்திரம். "காணாதம் பாணினீயம் ச சர்வ சாஸ்திரோபகாரம்" என்பது இந்தியாவில் அடிக்கடி மேற்கோளாகக் காட்டப்பெறும் முதுமொழி. இதன் பொருள் "அறிவுத் துறை ஒவ்வொன்றுக்கும் தருக்கமும் இலக்கணமும் தவிர்க்கமுடியாத துணைக் கருவிகளாகும்" என்பது. தமிழ் அளவை சமஸ்கிருத மூலங்களிலிருந்து பெறப்பட்டதாகும். எனவே நம் யோகி அன்னம் பட்டர் இயற்றிய தருக்க சங்கிரகம் என்ற இந்தியத் தருக்கவியலின் தரமிக்க நூலை மொழிபெயர்த்தார். அது மட்டுமன்றி பட்டரே எழுதிய தருக்க சங்கிரக தீபிகை என்றும் கூறப்படும் அன்னம் பட்டியத்திற்குரிய உரையையும் யோகி மொழிபெயர்த்தார். இஃதன்றியும், நையாய போதினி, நிருக்தி, சித்தாந்த சந்திரோதயம், தருக்க சங்கிரக சந்திரிகை, பத கிருத்தியம், தருக்க சங்கிரகோபன்னியாசம் என்ற பிறர் உரைகளும் உள்ளன. தருக்க சங்கிரக தீபிகைக்கு, ஹனுமத்தியம், நீலகண்டீயம், முகுந்த பட்டியம், தீபிகா பிரகாசிகை, தீபிகை வியாக்யானம் என்ற ஐந்து உரைகள் உள்ளன. நெல்லிப்புழை வித்துவான் சிவானந்த ஐயர், நியாய போதினி, பத கிருத்தியம், நீலகண்டியம் என்பவற்றின் உரைகளையும் தர்க்க சங்கிரகம் உரையையும் மொழிபெயர்த்துள்ளார்.[10]

## சமய நூல்கள்

### 1. சிவஞான மாபாடியம்

இதைக் குறித்து இந்நூல் இயல் ஐந்தில் கூறப்பட்டுள்ளது.

### 2. சிவஞானபோதச் சிற்றுரை

இதைக் குறித்தும் இயல்மூன்றிற் கூறப்பட்டுள்ளது. எனினும் சில சொற்கள் இதன் பெருமை குறித்து இங்குக் கூறுவது பொருத்தமற்றதாகாது. சிற்றுரை ஒரு செறிவான உரையாகும். அது சைவசித்தாந்தத்தின் கையேடாகப் பயன்படுகிறது. இதனையும் எளிதாகப் படித்துவிட முடியாது. காலந்தோறும் சிற்றுரையின் எளிமைப்படுத்தப்பட்ட விளக்கங்களும் வெளியிடப்பெற்றுள்ளன. இவற்றுள் காலத்தால் முற்பட்டது தூத்துக்குடி முத்தையா

பிள்ளையினுடையது." காசிவாசி செந்திநாதையர், தம் 'சிவஞான போத வசனாலங்கார தீபம்' என்ற நூலில் சைவாகம நோக்கில் சிற்றுரையின் பல்வேறு சிறப்புகளைக் காட்டியுள்ளார்.[12] திருவாவடு துறை ஆதீனப்புலவர் த.ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் நூல்களும் பேருதவி புரிவன.[13] புகழ்பெற்ற கழகப்புலவர் காலஞ்சென்ற பதிப்பாசிரியர் இராமநாதன் பிள்ளை சிற்றுரையின் மிகுதியும் தமிழ்மைப்படுத்தப்பட்ட விளக்கத்தைக் கொண்டு வந்தார்.[14] இவ்விடத்தில் கூறத்தக்கது உலகப் புகழ்பெற்ற நூலான 'தத்துவ நோக்கில் சைவம்' என்னும் டாக்டர் சிவராமனின் படைப்பு சிற்றுரையை அடிப்படையாகக் கொண்டது என்பதாகும்.[15] சைவ சித்தாந்தத்தின் தரம்வாய்ந்த பாடநூலாக மதிக்கத்தக்கது சிற்றுரையாகும்.

**3. சிவஞான சித்தியார் (சுபக்கம்): பொழிப்புரை**

சிவஞானபோதத்திற்குச் செய்யுளாலான உரை அருள் நந்தி சிவாச்சாரியாரால் அருளப்பெற்ற சிவஞான சித்தியாராகும். சித்தியார் இரு பகுதிகளையுடைய நூலாகும். முதல் பகுதி பரபக்கம் என்பது (சமஸ்கிருதம்: பரபக்ஷம்) இரண்டாவது சுபக்கம் என்பது. (சமஸ்கிருதம்: சுவபக்ஷம்) சுபக்கத்திற்கு ஆறு உரைகள் உள்ளன. நம் யோகியின் பொழிப்புரை அவற்றிலொன்று. நம் யோகியின் உரையை அடிப்படையாகக் கொண்டு தூத்துக்குடி முத்தையா பிள்ளையின் உரை ஒன்றும்[16] இலங்கையைச் சேர்ந்த திருவிளங்கம் பிள்ளையின் உரை ஒன்றும்[17] ஆக இரண்டு உரைகள் வெளி வந்தன.

**4. 'என்னை இப் பவத்தில்' என்னும் செய்யுட் சிவ சமவாத உரை மறுப்பு**

இந்த உரைநடை நூல் ஏறத்தாழ எண்பது பக்கங்களே உடையது. இந்நூல் இலங்கையைச் சார்ந்த ஞானப்பிரகாசரின் விளக்கத்திற்கு மறுப்பாக எழுதப்பெற்றது. இந்த ஞானப்பிரகாசர் சிவஞான சித்தியாருக்கு (சுபக்கம்) உரையெழுதிய அறுவரில் ஒருவர். இவர் பெரிய தியாகியுமாவார். இவர் பல்லாண்டுகள் காசியில் வாழ்ந்து சமஸ்கிருதத்தில் நல்ல தேர்ச்சியைப் பெற்றார். பின்னர் அவர் திருவண்ணாமலை ஆதீனத் தம்பிரான் ஆனார். இவருடைய குடியிலிருந்து தோன்றியவர் ஆறுமுக நாவலராவார். ஞானப்பிரகாசரின் விளக்கங்கள் தடம்புரண்டிருந்தன ஆதலால் அவருடைய விளக்கங்கள் நம் யோகியின் தாக்குதலுக்கு இலக்காயின. திருவாவடுதுறை நம் யோகியின் நினைவில் வெளி

யிட்ட மலரில் ஒரு பகுதியாக நம் யோகியின் மறுப்பைக் குறித்து ஒரு கட்டுரை அமைந்துள்ளது.[18]

**5. 'எடுத்து' என்னும் சொல்லுக்கு இட்ட வைரக்குப்பாயம்**

**'எ**ன்னை இப் பவத்தில்' எனத் தொடங்கும் சித்தியார் பாடலில் இடம்பெறும் எடுத்து என்னும் சொல்லின் பொருளை ஞானப்பிரகாசர் தவறாக அறிந்து கொண்டிருக்கிறார் என்பது நம் யோகியின் கருத்தாகும்.

வைரக்குப்பாயம் என்னும் சொல்லுக்கு 'வைரத்தால் ஆன கவசம்' என்பது பொருள். இந்த உரைநடை நூலில் நம் யோகி ஞானப்பிரகாசர் தவறாகப் பொருள் கொள்வதைக் கண்டனம் செய்வதோடு, கீழ்வரும் உண்மைகளின் தகுதியை எடுத்துக் காட்டுகிறார். 1. 'மெய்கண்டான் நூல் சென்னியிற் கொண்டு' என்று அருள்நந்தி கூறுவதால், அவர்க்குக் குரு மெய்கண்ட தேவர் என்பது. 2. அருள்நந்தி 'அருளினாலே' என்ற சொல்லைப் பயன்படுத்துவதால் மெய்கண்டார் அவருடைய தீட்சாகுரு ஆவார் என்பது. 3. 'எடுத்து சித்தத்தே வைத்துத் தாளினைச் சூட்டும்' (என் தலையில் அவர் தம் காலடி வைப்பதால் என்னை வாழ்த்த உளம் கொண்டு) என அருள்நந்தி கூறுவதால் மெய்கண்டார் இந்நூலை அருள்நந்திக்குக் கற்பித்தார் என்பது ஆகியவை.

**6. சித்தாந்த மரபு கண்டன கண்டனம்**

**தி**ருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்திருந்த ஒருவரால் எழுதப்பெற்ற நூல் சித்தாந்த மரபு என்பதாகும். அது மிகவும் போற்றத்தக்க நூலன்று. எனவே யாரோ ஒருவர் அதனை முற்றுமாகக் கண்டனம் செய்தார். எனினும் இக்கண்டனம் குறித்து நம் யோகி மகிழ்ச்சி அடையவில்லை. அவர் அக்கண்டன நூலுக்குக் கண்டனம் தெரிவிக்கக் கட்டாயப்படுத்தப்பட்டார். நம் யோகி இதனை ஏன் செய்ய வேண்டும்? இஃதொரு சரியான வினாவாகும். சித்தாந்த மரபு என்னும் நூலை அரண் செய்வது நம் யோகியின் கருத்தன்று என்பது இதற்குரிய விடையாகும். எனினும் அந்நூலில் கண்டனத்திற்கு உரியவை அல்லாத பத்திகள் கண்டனத்தால் பாதிக்கப்படுவதை அவர் விரும்பவில்லை. டாக்டர் எஸ். கங்காதரன் இந்நூலைக் குறித்து எழுதியுள்ள கட்டுரை பாராட்டத்தக்கது.[19]

## யோகியால் மொழிபெயர்க்கப் பெற்ற நூல்கள்

### 1. சித்தாந்தப் பிரகாசிகை

இதன் மூலநூல் சமஸ்கிருதத்தில் சர்வாத்ம சம்பு சிவாச்சாரியரால் எழுதப்பெற்றது. நம்யோகி இந்த அறிஞரிடத்துச் சிறந்த ஈடுபாடு கொண்டவர். உண்மையில் நம் யோகி தம் மாபாடியத்தில் வலிமையான சான்றாக அவரைக் காட்டுகின்றார்.

இதன் மூலநூல் சைவசித்தாந்தத்துக்கு ஒரு வழிகாட்டும் நூலாகப் பயன்படுகிறது. இராமநாத தீபிகை, மத்யார்ச்சன தீபிகை போன்றவை கையேடுகளாக இருந்தாலும், யோகியின் கருத்தில் சித்தாந்த பிரகாசிகையே மிகச் சிறந்ததாக இருந்ததால் அவர் இந்நூலை மொழிபெயர்ப்புக்காகத் தேர்ந்தார். இந்நூல் தத்துவங்கள், அவற்றின் உரு மலர்ச்சிகள் அத்துவாக்கள், அவற்றின் செயல்கள், தீட்சை மற்றும் அதன் வகைகள், சைவ ஆகமங்களின் இன்றியமையாகக் கூறுகள் ஆகியவற்றைப் பற்றிக் கூறுகின்றது. டாக்டர் உவே. சாமிநாதையரின் மகன் சா. கல்யாண சுந்தர ஐயர் நம் யோகியின் மொழிபெயர்ப்பை 1947இல் வெளியிட்டுள்ளார்.[20]

### 2. ஸ்லோக பஞ்சகம்

இதன் சமஸ்கிருத மூலச் செய்யுள் ஸ்லோக பஞ்சகம் அல்லது பஞ்ச ரத்ன மாலிகா எனப் பெயர்பெறும். இதன் தலைப்பே கூறுமாறு. இந்நூல் ஐந்து ஸ்லோகங்களை உடையது. இதன் ஆசிரியர் ஹரதத்தர். சிவஸ்ரீ அருணைவடிவேல் முதலியார், நம் யோகி இம்மொழிபெயர்ப்பை வேறு ஒரு காரணத்திற்காகச் செய்ததாகக் கருதுகின்றார். ஸ்லோக பஞ்சகத்தை ஐந்து தனிச் செய்யுட்களாக மொழிபெயர்க்கவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது. உண்மையில் தமிழ்ச் செய்யுள் அகவலாக இயற்றப் பெற்றுள்ளது. அகவல் என்பது ஒரு தொடர் கூற்றாக வருவது. எனவே நாம் நம் யோகி கடைப்பிடித்த முறையை ஆராய வேண்டும். அதனாற் கிடைக்கும் முடிவு வருமாறு: யோகி எடுத்துக்காட்டுச் செய்யுளை (அதிகரணம் 2, சூத்திரம் 1) விளக்க வேண்டும். அச்செய்யுள் சிவனின் தலைமையை உறுதியுறக் கூறுவது. அவர் சிவனே தலைமைத் தெய்வமாவார் என்றும் வாசுதேவர் அல்லரென்றும் நிறுவியாக வேண்டும். இது முன்பே ஹரதத்தரால் நிறுவப்பட்டுவிட்டது. எனவே யோகி, இது குறித்து ஹரதத்தர் முன்னெடுத்து மொழிந்த காரண காரியங்களை அப்படியே

இணைத்துக் கொள்ள விரும்பி அவ்வாறே அனைத்துக் காரண காரியங்களையும் ஓர் எளிய செய்யுளில் அடக்கித் தம் நோக்கை நிறைவேற்றினார். நாம் ஏற்கனவே யோகியின் மொழிபெயர்ப்பை ஆங்கிலத்தில் ஐந்தாம் இயலில் தந்துள்ளோம்.

**5. சிவதத்துவ விவேகம்**

இதன் மூலநூல் சமஸ்கிருதத்தில் அப்பைய தீட்சிதரால் இயற்றப் பெற்றது. இந்நூல் சிகரினி மாலை எனவும் பெயர்பெறும். இந்நூல் இரு பகுதிகளைக் கொண்டது. முதற்பகுதி, அதர்வசிகா, ஸ்வேதாஸ்வதாரா, அதர்வசிரஸ், கைவல்யம், பிருகதாரண்யம், மாண்டூக்யம் முதலான உபநிடதங்களின் செய்திகளைக் குறித்தது. இரண்டாம் பகுதி இதிகாசங்கள், புராணங்கள், ஸ்மிருதிகள், பகவத் கீதை மற்றும் பிறவற்றைக் குறித்தது. எல்லாச் சமயத் திருமறைகளும் சிவனே தலைமைத் தெய்வம் என உறுதிபடக் கூறுகின்றன. சிவதத்துவ விளக்கத்தின் மூலநூல் அறுபது பாடல்களைக் கொண்டது. நம் யோகியின் மொழிபெயர்ப்பு 70 செய்யுட்களால் ஆனது. முதல் ஏழு செய்யுட்கள் பாயிரம். பின்தொடரும் 60 செய்யுட்கள் நூலின் மூலப்பகுதி, இறுதி மூன்று செய்யுட்கள் இறையன்பு அடையும் பயன் என்பன நூலின் வகைப் பாடாகும்.

**குறிப்புகள்**

1. திராவிட மாபாடியக்காரர் ஸ்ரீமாதவச் சிவஞான முனிவர் அருள்நூல் கட்டுரைகள், திருவாவடுதுறை ஆதீனம், 1986, பக்: 117-126.
2. ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் சரித்திரம், உவே. சாமிநாத ஐயர், பகுதி-1, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ் சாவூர், 1986, ப: 141.
3. சோமமேசர் முதுமொழிவெண்பா, உரையாசிரியர் வா.மகா தேவ முதலியார், தென்னிந்தியச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் திருநெல்வேலி லிமிடெட், 1921.
4. கலசைப் பதிற்றுப்பத்தந்தாதி, பதிப்பு த.ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, ஸ்ரீவெங்கடேஸ்வர் பிரஸ், கும்பகோணம், 1951.
5. கச்சிஆனந்த ருத்ரேசர் வண்டுவிடுதூது, பதிப்பு சா.கல்யாண சுந்தர ஐயர், கபீர் பிரஸ், சென்னை, மூன்றாம் பதிப்பு 1947.

6. அமுதாம்பிகைப் பிள்ளைத்தமிழ், பதிப்பு த.ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, ஸ்ரீ நடராஜா பிரஸ், கும்பகோணம், 1953.

7. எண் 1இல் உள்ளது, பக்: 75-78

8. இலக்கண சுவாமிகள் என்னும் ஸ்ரீமத் முத்துக்குமாரத் தம்பிரான் நினைவு மலர், கலா நிலையப் பதிப்பகம், யாழ்ப்பாணம், 1958.

9. திருவேகம்பர் அந்தாதி பதிப்பு, த.ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, திருவாவடுதுறை ஆதீனம், 1967.

10. தர்க்க சங்கிரகம் (நையாயபோதினியும் பிறவும்) மொழி பெயர்ப்பு வித்துவான் சிவானந்த ஐயர், கொக்குவில், சோதிடப்பிரகாச அச்சியந்திர சாலை, 1910.

11. சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம், பி.முத்தையா பிள்ளை, சைவசித்தாந்தப் பெருமன்றம், சென்னை, மறுஅச்சு 1989.

12. சிவஞானபோத வசனலங்கார தீபம், காசிவாசி செந்திநாத ஐயர், சைவ வித்தியானுபாலன் அச்சகம், சென்னை, 1916.

13. சிவஞானபோதம் உரைநடை, நான்கு தொகுதிகள், திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை, வெளியீட்டு எண்கள் 269, 270, 271, 274, 1972-1973.

14. சிவஞானபோதமும் சிற்றுரையும், திரு. ப. இராமநாதப்பிள்ளை எழுதிய விளக்கமும், தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம் திருநெல்வேலி லிமிடெட், 1953.

15. Saivism in Philosophical Perspective, Dr. K. Sivaraman, Motilal Banarsida, Delhi, 1973.

16. சிவஞானசித்தியார் மூலமும் முத்தையா பிள்ளை எழுதிய பொழிப்புரை முதலியனவும், காரைக்குடி ஊழியன் அச்சகம், இரண்டாம் பதிப்பு 1926.

17. சிவஞானசித்தியார் சுபக்கம், திருவிளங்கம் அவர்கள் எழுதிய புத்துரை, யாழ்ப்பாணம், 1925.

18. எண் 1இல் உள்ளது, பக். 179-185.

19. மேலது, பக்: 186-191.

20. சித்தாந்தப் பிரகாசிகை, வெளியிட்டவர் சா.கல்யாணசுந்தர ஐயர், கபீர் அச்சுக்கூடம், சென்னை, 1947.

9

## தமிழ் இலக்கியத்தில் சிவஞான யோகியின் இடம்

**உ**ண்மைக் கவிஞர்களைப் போற்றும் கவிஞனே, உண்மைக் கவிஞர்களால் மீளவும் போற்றப் பெறுகின்றான். சேக்ஸ்பியரைக் குறித்து மில்டன்,

நினைவின் மகனே புகழின் பெரிய வழிமுறையே
என்ன வேண்டுகிறாய் நீ...?
எங்கள் வியப்பில், திகைப்பில் நீ
அவ்வாறே பகட்டான கல்லறைப்பட்டனை நீ!
இத்தகைய கல்லறைக்காய் வேந்தரும்
இறக்க விழைவரே!

மில்டனைக் குறித்து வோர்ட்ஸ்வொர்த் "உன் ஆன்மா விண்மீன் தகையது; அது தனியே துலங்குகிறது..." என்கிறார். 'கற்றாரைக் காற்றாரே காமுறுவர்' என்பது தமிழ் மூதுரை.

டென்னிசனின் வாழ்க்கை வரலாற்றில் ஆர்.பி. மார்ட்டின் குறிக்கத்தக்க ஒரு நிகழ்வைக் கூறுகின்றார். டென்னிசன் இறந்த போது அவர் மரியாதையோடு அடக்கம் செய்யப்பட்டார். அவருடைய பாடையில் அவர் தனியாக இல்லை. சேக்ஸ்பியரின் 'சிம்பலின்' நாடகம் அவருடனிருந்தது.[1] இவ்விடத்து நாம் மிகுந்த பெருமிதத்தோடு, நம் யோகி புலமையை வழிபடுவதில் தன்னிகரற்றவராய் உயர்ந்து நின்றார் என உறுதிபடக் கூறலாம். அவர் உயிருடன் இருந்த காலமெல்லாம், சிவப்பிரகாச சுவாமி களின் நால்வர் நான்மணிமாலையை எழுதிய நன்கு நறுக்கப்பட்ட பனை ஓலைகளைத் தம் கழுத்தில் கண்டிகையோடு (உருத்திராட்ச மணிமாலை) இணைத்து அணிந்திருந்தார்.

நம் யோகி, அறிஞர்களை மிகுதியும் போற்றுபவராய் இருந்தவர், அறிஞர்களால் போற்றப்பட்டார். குறிப்பாக உலக மெங்கும் உள்ள தமிழறிஞர்களால் அவர் ஏத்தப்பட்டார். அவருடைய வாழ்நாளிலேயே, அவர் அவருடைய மாணவர்களின் வழிபடு கடவுளாக விளங்கினார். அவர் திருமுன் உண்மையில் தீபதூபம் காட்டினர். நம் யோகியின் மாணவர், தொட்டிக்கலை மதுரகவி ஸ்ரீமத் சுப்பிரமணிய முனிவர் தொட்டிக்கலை சிதம்பரரேசர் கோயில் சன்னதி மண்டபத்தில் நம் யோகியின்

திருவுருவம் நிறுவி அதற்கு அருச்சனை, நைவேத்தியம் ஆகியன செய்தார். அவருடைய செய்யுளொன்றில் யோகியின் பெருமை குறித்துப் புகழ்ந்து போற்றுவது வருமாறு:

கருணைபொழி திருமுகத்தில் திருநீற்று நுதலும்
கண்டாரை வசப்படுத்தும் கனிந்தவா யழகும்
பெருமைதரு துறவோடு பொறையுளத்திற் பொறுத்தே
பிஞ்ஞகனார் மலர்த்தாள்கள் பிரியாத மனமும்
மருவினர்கள் அகலாத ஞானமே வடிவாம்
வளர்துறைசைச் சிவஞான மாமுனிவன் மலர்த்தாள்
ஒருபொழுதும் நீங்காமல் எமதுளத்திற் சிரத்தில்
ஓதிடுநா வினிலென்றும் உன்னி வைத்தே.

பதினாறாம் ஆதீனத் தலைவர் காலத்தில் திருவாவடுதுறை ஆதீனத்தோடு இணைந்திருந்த தளிகை நமச்சிவாய தேசிகர் இயற்றியதாகக் கூறப்பெறும் ஒரு பழஞ்செய்யுளில், நம் யோகியின் பெருமையின் அளவை மதிப்பிடுகிறார். அச்செய்யுளின் கருத்து வருமாறு: "அவர் துறைசையில் (திருவாவடுதுறை) அன்பாய் உறைந்தார்; சிவஞான யோகி எனப் பெயர் தாங்கினார். கருணையால் அவர் தெய்வீக நூலான சிவஞானபோதத்திற்கு கற்றோர் மனங்களிக்குமாறு இரண்டு உரைகளை (சிற்றுரை, பேருரை) அருளினார். புலமை மிகுந்தோர் அவர் தெய்வத் திருமறை களைத் தேர்ந்தவர் ஆதலாலும், நிறைவான ஞானம் கைவரப் பெற்றிருந்தவர் ஆதலாலும் அவரைச் சிவனெனவே போற்றினர்." இச்செய்யுள், யோகியின் பெருமை அவருடைய இரண்டு உரைகளில் அமைந்துள்ளது என்பதைத் தெளிவுறுத்துகின்றது. இஃது முற்றிலும் உண்மையாகும். இவ்வுண்மையின் மதிப்பு, கடுமுயற்சியால் மேற்கொள்ளும் ஆய்வுக்குப் பின்னரே வெளிப் படும்.

நாம் இந்நூலின் மூன்றாம் இயலில், இந்திய உரை மரபுக்குரிய கூறுகளைக் குறித்து விரிவாகக் கூறியுள்ளோம். எல்லா பாஷ்யங் களும் சமஸ்கிருதத்திலேயே எழுதப்பட்டுள்ளன. எல்லா உரைகாரர்களும் நன்கு அமைந்த ஒரு மாதிரிப் படிவத்தையே பின்பற்றியுள்ளனர். ஒவ்வொருவருடைய குறிக்கோளும், தத்தம் சமயக் கோட்பாட்டின் மீறமுடியாத பண்பை நிறுவுவதாகவே இருந்தது. அவர்கள் தம் முழு முயற்சியையும் பகைவர்தம் சமய நம்பிக்கையை அழிக்கவே பயன்படுத்துவர். எனவே உரைகாரர்

என்பவர் வெல்லமுடியாதவராக இருக்கவேண்டும். அவர் மிகச் சிறந்த தருக்க வன்மை பெற்றவராதல் வேண்டும். இதற்காக அவர் தருக்கவியலை ஆழமாகக் கற்றவராக இருத்தல் வேண்டும். தமிழ் நாட்டில் சமயச் செயல்திட்டங்களில் தருக்கம் ஓர் உயர்நிலைக்கு உரியதாக அமைக்கப்பெறவில்லை. நம் யோகியார் காலம் வரையில் தருக்கம் குறித்த நூல் தமிழில் இல்லை. அவரும் சமஸ்கிருதத்தில் தருக்கத்தைப் பற்றி எழுதப்பெற்ற தரமிகுந்த நூலை மொழிபெயர்த்தவரே. எவ்வாறாயினும், அவர் பலர் அவாவிய தேவையை நிறைவு செய்தார். அதுமட்டுமன்று, இந்த தருக்க சங்கிரகம் அன்னம்பட்டியம் ஆகியவற்றுக்கான அவருடைய மொழியாக்கத்தால் அவருக்குத் தருக்கத்திலிருந்த தகுதியை அவரே மெய்ப்பித்துவிட்டார். சிவஞானபோதமென்னும் பெருநூல், அதன் உண்மையான இயல்பால் பலதிறப்பட்ட சிறப்புகளைக் கொண்டது. அவற்றை ஓர் உரையால்தான் வெளிப்படுத்த முடியும். மெய்கண்டப் பெருமானே, ஓர் உரை அமையத்தக்க எல்லா அடிப்படை விவரங்களையும் அளித்துள்ளார். சிவஞானபோதத்தின் ஒவ்வொரு சூத்திரமும் மெய்ம்மையின் அதிகாரபூர்வமான அறிவிப்பாகும். அஃது இரண்டு அல்லது அதற்கு மேலான அதிகரணங்களைக் கொண்டது. ஓர் அதிகரணம் என்பது ஒரு விவாதம் போல் அமைக்கப்பட்டுள்ளது. அது, 1. விஷயம்-ஆய்வுப் பொருள், 2. சம்சயம்-ஐயம் அல்லது தடைகள், 3. பூர்வபட்சம் கருதுதற்குரிய கொள்கையின் முதற்கருத்து வரைவு-கருதுகோள், 4. சித்தாந்தம், சரியான, மறுக்கமுடியாத முடிவு அல்லது துணிபு, 5. சங்கதி-விவாதநிரல் என்றவற்றை உள்ளடக்கியது. இவ்வகையான அணுகு முறை கடைப்பிடிக்கப்பட்டால் நேர்மையான காரண காரிய தொடர்ச்சியுடைய வாத உண்மை விளையும். நம் யோகிக்கு முழுச் செயல்முறையும் குழந்தையின் விளையாட்டுப் போன்றது. அவருடைய உரை குற்றமற்ற அற்புதப் படைப்பாக அவரால் ஆக்கப்பெற்றது. யோகி சொற்களைக் கையாளுவதில் சதுரர். அவர் அவற்றை நல்ல விளைவுண்டாகுமாறு பயன்படுத்துவார். அவர் ஒரு சிறந்த இலக்கணி. அவருடைய விளக்கத்தில் இலக்கண விதிகள் எப்போதும் அவர் பக்கம் இருந்தன. அவர் எப்போதும் எல்லாப் பக்கங்களிலும் கூர்த்த விழிப்புணர்ச்சி உடையவராக இருந்தார். அவர் எதிர்பாராத வகையில் சிக்கிக் கொள்பவராக இல்லை. இந்தப் பண்புகள் யோகியின் உரை உருவாக்கத்தில் உட்புகுந்தமைந்தன.

இவ்விடத்தில், படிப்பவர் முன்னே ஓர் இன்றியமையாத செய்திப் பகுதியைக் கொண்டுவர விரும்புகிறோம். நாம் முன்னரே, யோகி, சிவப்பிரகாச சுவாமிகளைப் போற்றுபவர் என்பதைக் கூறியுள்ளோம். இந்தச் சுவாமிகள் தருமபுர ஆதீனத்தின் வெள்ளியம்பலத் தம்பிரானின் மாணவர். இம் மடத்தை நிறுவியரும் தலைவருமான குருஞான சம்பந்த சுவாமிகள் ஞானாவரண விளக்கம் என்னும் பெருநூல் ஒன்றை எழுதினார்கள். வெள்ளியம்பலத் தம்பிரான் இந்நூலுக்கு வியக்கத் தக்க உரையொன்றை எழுதினார். உண்மையில் இந்நூல் பெருந் தகுதியுடைய நூலாகும். எனினும், காலத்தால் தெளிவாக முற்பட்ட இவ்வுரை யோகியின் உரையோடு சமமான மதிப்பைப் பெறவில்லை. மேலும் குருஞானசம்பந்த சுவாமிகளின் 'முத்தி நிச்சயம்' நூலிற்கான வெள்ளியம்பலத் தம்பிரானின் உரை குறிப்பிடத்தக்கது. எனினும் இதனை யோகியின் மாபாடியத்தோடு ஒப்பிடமுடியாது. இதற்கான காரணம் அறியமுடியாததன்று. நம் யோகியின் உரை எல்லாவிடங்களிலும் தருக்கத்தால் உயிர்ப்பூட்டப்பட்டுள்ளது. நம் யோகியின் அறிவாதார ஆய்வியலைப் பயன்கொள்ளும் முறை தனிச் சிறப்புடையது. அவருடைய கூற்றுக்கள் ஊறு பெற முடியாதனவாகவும் மறுக்க முடியாதனவாகவும் உள்ளன. உண்மையாகக் கூறும் நிலையில் நம் யோகி ஒருவரே தமிழ் பாடியக்காரர். அவருடைய புகழ் மாபாடியத்தால் திடமாக நிலை பெற்றுள்ளது. அவருடைய சிற்றுரையும் ஒப்பற்ற ஓர் உரையாகும். அஃது உண்மையில் சைவசித்தாந்தப் பாட நூலாகும். நம் யோகி ஐயத்திற்கிடமின்றிச் சைவசித்தாந்தப் பொருள் விளக்க அதிகாரியாவார்.

இரண்டாம் இயலில் நாம் சைவசித்தாந்தத்தின் சிறப்புக் கூறுகளைக் கூறியுள்ளோம். மெய்கண்ட முனிவர் 'அத்வைதம்' என்பதற்குக் கொண்ட பொருள் சிறப்புடையது. மெய்கண்ட முனிவர் ஒருவரே அத்வைதம் என்பதைச் சரியாக விளக்கியவரென்று தாயுமான சுவாமிகள் போற்றுகின்றார். தாயுமானவரின் கருத்து குறிக்கத்தக்கது. மெய்கண்டார் கொண்ட அத்வைதம் சங்கரபகவத் பாதர் கண்ட அத்வைதத்தோடு எந்தத் தொடர்பும் இல்லாதது. நம் யோகி, மெய்கண்ட முனிவர் உருவாக்கிய அத்வைதத்தோடு இணைந்த பொருளின்படித் தம் உறுதியுரையை மேற்கொள்கிறார். எப்போதும் விழிப்புடைய, ஒருபோதும் கவனக்குறைவாக இல்லாத நம் யோகி மெய்கண்ட முனிவரின் கருத்துகட்கு மிகச்சிறந்த

முறையில் அரண் செய்கிறார். மெய்கண்டார் என்ற பெயரே உச்சநிலைச் சிறப்புடையது. "அவர் பொய்யைச் சுட்டிக் காட்டவும், அதனை அகற்ற ஆவன செய்யவும், உண்மையான அல்லது உள்ளதை இயல்பான அறிவுத்திறமும் பேரின்பமும் இவையெனக் குறித்துக் காட்டவும் வல்ல ஒருவர்' என அவர் விளக்கப் பெறுகின்றார்.[4]

மெய்கண்ட முனிவர் வேதங்களையும் ஆகமங்களையும் அணுக்கமாக ஆராய்ந்ததன் வழியாகத் தனது கருத்தைப் பெற்றார். அவருடைய கருத்திற்கு ஆதரவாக ஆகமம் அல்லது வேதத்திலிருந்து எந்தப் பகுதியையும் அவர் நேரடியான மேற்கோளாகக் காட்டவில்லை. அவர் வேதத்தைக் குறித்துக் கொண்ட கருத்தைக் கூறித் தனது கருத்து தவறற்றது என வாதிடுகின்றார். மெய்கண்ட முனிவரின் குறைகாணமுடியாத கருத்துரைகளால் நிறைவுற்ற நம் யோகி மெய்கண்ட முனிவரை முழுமூச்சுடன் அரண்செய்ய முற்படுகிறார். அதனை அவர் திறம்படச் செய்வதுடன், மிகவும் ஏற்குமாறும் செய்கிறார். இத்தொடர்பில் வாசகர் 'அத்துவித வாக்கியத் தெளிவுரை' என்னும் சிற்றேட்டைக் கற்பது நன்மை பயக்கும். இச்சிற்றேட்டில் பலமூலங்களிலிருந்து அத்வைதம் என்ற சொல்லையும் கோட்பாட்டையும் குறித்த யோகியின் ஏட்டுத் திரள்கள் உள்ளன. இப்போது, சைவசித்தாந்தத்தின்படி அத்வைதம் என்பது ஆகம சைவத்திற்குத் தனி உரிமையுடைய கோட்பாடு என்பதும், சைவ சித்தாந்தம் உண்மை என ஏற்றுக்கொண்ட இக்கோட்பாட்டிற்கு மாறாகச் செல்லும் எக்கருத்தும் ஒருங்குதிரண்டு வெற்றியடைய முடியாது என்பதும் நன்கு நிறுவப்பட்டுவிட்டன. கோட்பாட்டின் உறுதிப்படுத்தப்பட்ட இந்த நிலைக்கு நம் யோகியே காரணமாவார் எனக் கூறவேண்டும்.

தமிழில் கவிதை நான்கு வகைப்படும். அவை ஆசு (உடனடி ஆக்கம்) மதுரம் (ஒழுகிசை ஆக்கம்), வித்தாரம் (விரிவாக்கம்), சித்திரம் (படவரைவாக்கம்) என்பன. நம் யோகி இந்நான்கும் ஒன்றிணைந்த ஒருவர். அவருடைய ஆசுகவிகள் சிலவே இப்போது இருப்பிலுள்ளன. எனினும் இவை நம் யோகியின் தனித்திறக் கூறுகளை உடனே நேரடியாகவும் வலிமைமிகத் தோன்றவும் காட்சியுறக் காட்டுகின்றன. மதுரகவிகட்கு அவருடைய கவிதைப் பொழிவுகளிலிருந்து அத்தகைய அடிகளை எடுத்துக்காட்டலாம். இவை காதுகளில் இனியவாய் நுழைகின்றன; உட்புலன்கள்

வழிச்சென்று அவற்றைத் தூய்மை செய்கின்றன; இறுதியில் உயிர்க்கு வலிமை சேர்ப்பனவாய் அதனோடு ஒன்றுகின்றன. நம் யோகியின் காஞ்சிப் புராணம் அவர் ஒரு வித்தார கவி என நிறுவு கின்றது. அவருடைய மிகச் சிறந்த மாணவர் கச்சியப்பராவார். இவரே காஞ்சிப் புராணத்தின் இரண்டாம் பகுதியை எழுதியவர். இவர் சில தலபுராணங்களையும் எழுதியுள்ளார். நம் யோகி சித்திரகவி என்பது காஞ்சிப் புராணத்தால் தெளிவாகும். இதற்குரிய எடுத்துக்காட்டுகள் இணைப்பில் சேர்க்கப்பெற்றுள்ளன.

நம் யோகி அவருடைய புலமைக்காகவும் தகுதிகளுக்காகவும் அவருடைய காலத்திலேயே கொண்டாடப்பட்டிருந்தாலும், அப்போதும் இப்போதும் அவர் பெருமையைக் குலைப்பவர் இல்லாமலில்லை. இவர்கள் ஒவ்வொருவரும், தனக்கெனத் தன்னல நோக்குடையவராய் இருந்தனர். இலக்கண விளக்கத்திற்குக் கண்டனம் தெரிவித்த யோகியின் செயலை ஏற்க இயலாது என்பதில் ஐயமில்லை. முன் இயலில் இதுபற்றிக் கூறியுள்ளோம். நம் யோகி, பெரியோர்களாலும் நேர்மைக்கு மாறாகக் குறை கூறப்பட்டிருக்கின்றார். தினமணி 06.12.1935 நாளிட்ட இதழில் 'சிவஞானபோதம் ஆறாஞ்சூத்திர ஆராய்ச்சி' என்ற கட்டுரை வெளி வந்தது.[6] இக்கட்டுரையின் ஆசிரியர் பெரிய தேசப் பற்றாளாராகிய வ.உ.சிதம்பரம் பிள்ளை ஆவார். அவர் நம் யோகியைத் தாக்கி யுரைப்பதோடு, 'அசத்து' என்ற சொல்லை அவர் தவறாகப் பொருள் கொண்டிருப்பதாகவும் கூறுகின்றார். மேலும் அவர் தம் திறனாய்வில் கடுஞ்சொற்களைப் பயன்படுத்தவும் செய்கிறார். இச்சூத்திரத்தைக் கவனமாக ஆய்ந்து நோக்கும்போது, நம் யோகி கொண்ட பொருள் குற்றமற்றது என்பது தெரியவரும் பெரும் தேசப் பற்றாளராகிய வ.உ.சிதம்பரம் பிள்ளை ஒரு வேதாந்தி. அவரும், அவர் நோக்கில் சிவஞான போதத்தின் ஒரு பதிப்பை வெளிக்கொணர்ந்துள்ளார்.[7] அவர் பணி மேற்கொண்ட நூல் சைவ சித்தாந்தத்திற்குரியது என்பதை அவர் நினைவில் கொண்டிருக்க வேண்டும்.

'நாலாம் வருணத்து நைஷ்டி கருக்கன்றிக் கிரகத்தாருக்குக் குருத்துவமின்று என்று விளக்கிய காமிகப் பொருள் மறுப்பாக்கிய சூத்திர கிரகஸ்தாச்சாரிய மறுப்பு' என்ற தலைப்புடைய நூல் 1922இல் வெளிவந்தது.[8] இது முப்பத்தொன்பது பக்கங்களில் ஆன சிற்றேடாகும்.

சிதம்பரம் முத்து கற்பகத்தையா, நடேச ஐயர், மற்றும் பிறர் 'கிரகத்தாச்சாரிய நிர்ணயம்' என்ற சிற்றேடு வெளியீட்டை உண்டாக்கி, மாபாடியத்தில் நம் யோகி உறுதிப்பட மொழிந்த கருத்துகளுக்கு மாறான கருத்துக்களைப் பரப்பத் தொடங்கினர். தகுதியற்றவர்களுக்கு குருப்பட்டம் வழங்குவதன் வழியாக இந்த விஷமச் செயலை மேற்கொள்ள முனைந்தபோது, ஆகமங்களின் மீதும், ஆகமங்களைப் பின்பற்றி எழுந்த நூல்களின் மீதும் அவற்றிலும் குறிப்பாக நம் யோகியின் மகாபாடியத்தின் மீதும் உண்மையாகத் தோன்றிய பக்தியால், அவ்விஷமச் செயல் கடுமை யாகத் தாக்கப்பட்டது. இதற்கான இத்தனி நூல் நம் யோகியைத் திறம்பட அரண் செய்வதோடு, அவரின் பெருமை குலைக்க முயன்றோரின் உண்மைத் தோற்றத்தை வெளிக்காட்டுகின்றது. அந்நாளில் சிதம்பரத்திலிருந்த சிவஞானத் திருத்தளி மிகுந்த ஆர்வத்தோடு பணி செய்ததோடன்றி, சைவசித்தாந்த நெறியிலிருந்து அறிந்தோ அறியாமலோ இடம்பெற்ற நெறிவிலகலை நேராக நிமிர்த்து வைக்கும் பணியை மேற்கொள்ளவும் செய்தது. இப்போது உருவாகும் இந்நூல் மாபாடியத்தைப் பயிர்செய்யும் பரந்த நிலமாகக் குறிக்கின்றது. இதன் சிறிய பரப்பென்று இந்நூல் குறிக்கும் பகுதியில் காமிகாமக விதைகள் விதைக்கப்பட்டன. அவை வளமான பயிர்களாகத் தளிர்த்து மேலோங்கின. இப் பயிர்கள் திரளாக இருக்கும் நிலையை அழிக்க, அவற்றை இல்லாமலாக்கச் சமய உணர்வற்றவர்களால் தீய நோக்கத்துடன் களைகள் உட்புகுத்தப்பட்டன. எனவே களைகளை நீக்கும் செயல் கருத்தூன்றிச் செய்யப்பட வேண்டும்.

நம் யோகியின் புகழுக்கு மாசு கற்பிக் முயன்ற முதன்மையான வர்களில் ஒருவர் இராணிப்பேட்டைப் புலவர் சோமசுந்தரம் ஆவார். அவர் 'பெரியோர் செய்த பெரும்பிழைகள்-1 சிவஞான முனிவர்- முதல் பகுதி'[9] என்ற நூலை 1922இல் வெளியிட்டுள்ளார். இந்தப் புலவர் 1985இல் நம் யோகியைப் பெரிதும் போற்றியுள்ளார் என்பதை இங்குக் குறிப்பிட வேண்டியுள்ளது. நம் யோகியைக் குறித்த 1986இல் வெளியிடப் பெற்ற மலரில் வந்துள்ள இவருடைய இரண்டு கட்டுரைகளால் இக்கருத்து உறுதிப்படுகிறது.[10] எனினும் 1992இல் நம் யோகியை இவர் தாக்கக் கருதி மேற்கண்ட தனி நூலை வெளியிட்டுள்ளார். நாம் புலவரின் நூலைக் கவன மாகப் படித்தோம். பெரும்பாலும் இந்நூல் நகைப்புக்குரிய பண்பின் வெளிப்பாடேயாம். எண்ணற்ற காலத்துக்கு முன்

ஆகமங்களால் என்ன கூறப்பட்டதோ அதனையே யோகி எடுத்துரைக்கிறார் என்பதை மறந்து சாதிக்கும் சாதிக்கும் இடையிலான வேறுபாடுகளைக் கூறுவதாக நம் யோகியைக் குறித்து இவர் குற்றம் சாட்டுகின்றார். சேக்கிழார் பெருமான் 'சாதிகள் நெறியில் தப்பா' என்று கூறியுள்ள கருத்தை இப்புலவர் கருத்தில் கொள்ளவில்லை எனத் தெரிகிறது. மேலும் புலவர் தம் நூலின் 25ஆம் பக்கத்தில் உறுதியாகக் கூறியிருப்பது அவரே பக்கங்கள் 43, 66இல் ஆணையிட்டு உரைக்கும் பகுதிகளால் நீக்கப்பட்டு விடுகிறது. எவ்வாறாயினும், கொள்கை மாறாமை என்பது புலவரின் பண்பாகத் தெரியவில்லை. புலவரின் நூல் அதனியல்பில் ஒரு மறுப்பை வேண்டி நின்றது. அம்மறுப்பு 1993இல் தோன்றியது.[11] இந்நூல் அதன் எடைக்குத் தங்கமும் வைரமும் பெறத்தகுந்தது. இதனை ஆழமாகப் பயில வேண்டும். இந்நூல் பதினேழு இயல்களை உடையது; ஒவ்வொன்றும் செய்திச் சுரங்கமாக விளங்குவது. ஆசிரியரால் முன்மொழியப்பெற்ற உண்மைகளும் விவாதங்களும் போற்றத்தக்க வகையில் ஆதாரங்களைக் கொண்டன.

1993இல் பேராசிரியர் வை.முருகேசனின் 'மெய்கண்டான் அருளிய சிவஞானபோதமும் விளக்கவுரையும்'[12] வெளிவந்தது. சைவ சித்தாந்தத்தில் வல்லுநராக ஏற்கப்பெற்ற சிவஸ்ரீ அருணை வடிவேல் முதலியார் அவர்களை இந்த நூலாசிரியர் தம் நூலுக்கு ஓர் அணிந்துரை வழங்கி வாழ்த்தியருளக் கேட்டபோது, முதலியார் அதனைச் செய்ய இயலாமையை ஒரு கடிதத்தின் வழியாகத் தெரிவித்தார். இம்மறுப்பைக் கொண்ட கடிதம் ஆசிரியரின் நூலில்73-76ஆம் பக்கங்களில் அச்சிடப்பட்டுள்ளது. இக்கடிதத்தின் செய்திகள், யோகிக்கு எதிராகப் பேராசிரியர் கூறியுள்ள குறைகள் ஆதாரமற்றவை எனக் காட்டுகின்றன. பேராசிரியரின் இந்நூலும் ஒரு மறுப்பை வேண்டியது. அம்மறுப்பு 1994இல் வெளிவந்தது.[13] இம்மறுப்பு நூல் உண்மையில் பக்தியின் விளைவாகும். இந்நூல் ஆசிரியர் யோகியிடம் கொண்ட பக்தி எல்லைகளை இகந்தது. அவர் இப்பேராசிரியரை இந்நூலில் உண்மையில் மொத்து மொத்தென்று மொத்திவிட்டார் எனலாம். இந்நூல் ஆசிரியர் அவருடைய அண்மைக்கால நூல் மேலும் பெருமை கொள்ளுதற்குரிய ஒன்று. இந்நூல் அதன் தெளிவு, நம்பகத் தன்மை, குற்றஞ்சாட்ட முடியாத, சார்ந்திருப்பதற்கு ஏற்ற தகைமை ஆகியவற்றுக்காகப் போற்றப் பெறுகின்றது.

நம் யோகி தருக்கநெறி வல்லவராதலால் அத்தகைய மற்றவரால் எப்போதும் தாக்கப்படும் இலக்காக இருக்கிறார். எனினும் அவருக்கு எதிராக எவ்வளவு எழுதினாலும் அவரிடத்து எப்போதும் எந்த வடுவும் உண்டாக்க இயலாது. அவர் உண்மையில் மகாயோகியாவார். அவருடைய பேரின்ப நிலையை ஆலிவர் கோல்டு ஸ்மித்தின் சொற்களில் கீழ்வருமாறு விளக்கக் காணலாம்.

நெடும்பாறை தன் வீறார்ந்த தோற்றம் நிமிர்ந்திடக்
கடும் பள்ளத்திலிருந்து மேடுற எழும்;
இடைவழியிற் புயலைச் செல்லவிடும்;
புரளும் முகில்கள் அதன் மார்பைச் சுற்றிப் படரினும்,
உறையும் நிலைத்த பகலொளி அதன் தலைமீதே.

சென்னைப் பல்கலைக்கழக இராதாகிருஷ்ணன் தத்துவ உயராய்வு நிறுவனம் 1986 மார்ச் மாதத்தில் மூன்று நாள் கருத்தரங்கு ஒன்றை நிகழ்த்தியது. இந்நிறுவன இயக்குநர், இக்கருத்தரங்க நிகழ்வுகளைப் பத்தொன்பதாம் இந்தியத் தத்துவ ஆண்டு மலர்த் தொகுப்பாக அச்சு வடிவில் வெளிக்கொணரும் நற்பணி ஆற்றினார்.[15] இந்நூல் தமிழில் ஒன்பது கட்டுரைகளையும் ஆங்கிலத்தில் ஒன்பது கட்டுரைகளும் கொண்டது. இத்தொகுப்பு தமிழ் இலக்கியத்தில் யோகி பெறுமிடத்தை நடுவுநிலையோடு மதிப்பிடும் மதிப்பீட்டைக் கொண்டுள்ளது.

யோகியின் உரைநெறி இப்போது உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் ஆழ்ந்து கற்கப் பெறுகின்றது. 'கடாமரும் சிவஞான முனிவரும்கொள்ளும் திருமறைப் பொருள்கோள்' (The Hermeneutics of Gadamer and Sivaganana Muniver' என்னும் கட்டுரை பயன்மிக்க ஒரு படைப்பாகும். கடாமரின் 'உண்மையும் நெறியும்' (Truth and Method) என்னும் நூலும் நம் யோகியின் மாபாடியமும் ஆய்வுக்கு மேற்கொள்ளப்பட்டுள்ளன. 'கடாமரின் முயற்சி, மனித அறிவியலின் மெய்ம்மையை உரிமை கொள்ளும் தத்துவ முறைப் படுத்தலைப் பொருளாகக் கொண்டது. இதனை அவர் குறிப்பாகக் கலை, தத்துவம், வரலாறு ஆகியவற்றை மனிதர் அறியும் இயல் நிகழ்வுகளை ஆழமாக ஆராய்வதன் வழியாக மேற்கொண்டார்." கடாமர், 1. மனித அறிவியலைப் புரிந்து கொள்ளுதல் என்பது, அவர்களிடையே வெளிப்படும் பொருளால் தீர்மானிக்கப்படுமேயன்றி, அகத்தெழும் மனநிகழ்வுகளால் அன்று. 2. எல்லாப் புரிந்து கொள்ளுதல்களிலும் வரலாறு வலிமை மிக்கது.

3. புரிந்து கொள்ளுதற்குரிய பொருள், மொழிவழியாக மட்டுமே தொடர்பு கொள்ளப்பெறும். யோகியின் புரிந்துகொள்ளும் கோட்பாடு பற்றி ஆராய்வதும் இதன் நேருக்கு நேராக உள்ள கடாமரின் பொருள்கோள் நெறி பொதுநிலை கடந்த புலன் காட்சிகளைத் தோற்றுவிப்பதும், உண்மையில் இக்காலத்தில் முன்னேற்றம் பெற்றுள்ளன. யோகியின் ஆய்வு நெறி, தகுதிவாய்ந்த முறைகள் என்றும் புறக்கணிக்கப்படா என்பதை நிறுவுகின்றது.

சேக்கிழாரின் வருகைக்குப் பின்னர் யாரும் தேவாரத் திருப் பாடல்களை அவர் வழியாகவன்றிக் கற்க இயலவில்லை என்று சொல்லப்பட்டது.[17] இதே கருத்து சைவசித்தாந்தத்திற்கும் பொருந்தும். நம் யோகியின் வருகைக்குப் பின் இதனை அவர் வழியாகவன்றிக் கற்க இயலவில்லை. சைவ ஆதீனங்களில், திருவாவடுதுறை ஆதீனத்திற்கெனத் தனிப்பட்ட புகழ் உள்ளது. அது நம் யோகி இந்த ஆதீனத்திற்கு உரியவர் என்ற உண்மையா லாகும். யோகி பொருள் கண்டவாறு சைவ சித்தாந்தம் வழக்கில் உள்ளது. அவருடைய விளக்கம் இரண்டு வழிகளில் பயனுடையது. கற்பவரின் ஐயங்கள் நீக்கப்படுகின்றன; அவர் தெளிவு பெறுவதோடு, காலம் செல்லச் செல்லவும், தெளிவற்ற இருண்மையால் துன்புறுவ தில்லை என்பன அப்பயன்கள். இவ்விடத்தே கற்பவர் பார்வைக்கு டாக்டர் வை. இரத்தின சபாபதியின் நூலான 'சிவஞான முனிவர் நோக்கில் சைவ சித்தாந்தம்' என்பதைக் கொண்டு வருகிறோம்.[18] நாம் இதனை நிறைவுபடுத்தும் நிலையில் அளவு கடந்து கூறவில்லை. நம் யோகி மானுட வடிவிலான சைவ சித்ததாந்தமாவார்.

### குறிப்புகள்

1 Tennyson, The Unique Heart, Robert Bernard Martin, Faber and Faber, Clarendon Press. Oxford, 1983, p. 582.

2. வித்துவான் தியாகராச செட்டியார், டாக்டர் உ.வே. சாமிநாத ஐய, கலைமகள் காரியாலயம், சென்னை, 1951, ப: 19.

3. ஸ்ரீமாதவச் சிவஞான சுவாமிகள் மீது தோத்திரப்பா, தனிப்பாடல்களும் கீர்த்தனங்களும், திருவாவடுதுறை ஆதீனம், 1969.

4. உண்மை விளக்கம், செய்யுள் 1.

5. அத்துவித வாக்குத் தெளிவுரை, பதிப்பு தசமீனாட்சிசுந்தரம் பிள்ளை, ஸ்ரீ வெங்கடேஷ்வர் அச்சகம், கும்பகோணம், 1949.

6. வ.உ.சி. கட்டுரைகள், தொகுப்பு, மா.இரா.அரசு, பாரி நிலையம், சென்னை, 1989.

7. சிவஞானபோதம், வ.உ.சிதம்பரம் பிள்ளை உரை, அய்யனார் அச்சகம், தூத்துக்குடி, 1935.

8. இந்நூல் சிதம்பரத்தைச் சேர்ந்த ஆடூர் கணபதிப் பிள்ளையால் வெளியிடப்பெற்றது. இந்நூல் சென்னை மவுண்ட் சாலை 14ஆம் எண்ணில் இருந்து வெஸ்ட் & கம்பெனியால் அச்சிடப்பெற்றது.

9. பெரியோர் செய்த பெரும் பிழைகள் 1. சிவஞான முனிவர்-முதல் பகுதி, நூலாசிரியர் இராணிப்பேட்டை புலவர் பி.மா. சோமசுந்தரம், 1992.

10. திராவிட மாபாடியக்காரர் ஸ்ரீமாதவச் சிவஞான முனிவர் அருள் நூல் கட்டுரைகள், திருவாவடுதுறை ஆதீனம், 1986.

11. திரு. பி.மா. சோமசுந்தரனாரின் பிழைகள், டி.சி.எஸ். இராமச்சங்குப் பாண்டியன், தூத்துக்குடி, 1993.

12. சிவஞான போதமும் விளக்க உரையும், பேராசிரியர் வை. முருகேசன், மெய்கண்டான் பண்ணை, திருவத்திபுரம், 1993.

13. சிவஞானபோதம் உரைக்குழப்பம், டி.சி.எஸ். இராமச்சங்குப் பாண்டியன், தூத்துக்குடி, 1994.

14. The Deserted Village, Translated by Vidwan T.V. Srinivasan, T.R.N.M.L.and Publications and Bharathi Sangkam, 5 D. Selvam Nagar, Thanjavur, 1995, Lines 189-192.

15. Indian Philosophical Annual, Volume 19, Radhakrishnan Institute for advanced Study in Philosophy, University of Madras, 1986-87.

16. Ibid, pp. 61-70.

17. Towards Reading the Tevaram, p. xiii in Tevaram, Vol. I, Institute Francais D' Indologie, Pondicherry, 1984.

18. சிவஞானமுனிவர் நோக்கில் சைவசித்தாந்தம், டாக்டர் வை. இரத்தின சபாபதி, உலகத்தமிழ்க் கல்வி இயக்கம், சென்னை, 1986.

## துணை நூற்பட்டியல்

1878 காஞ்சிபுராணம்: சிவஞான யோகிகளும் கச்சியப்ப முனிவரும், இராமநாதபுரம் இராமசுவாமி பிள்ளை என்னும் ஞானசம்பந்தப் பிள்ளையால் மூலம் பரிசோதனை செய்யப் பெற்றுச் சென்னை ஆதி கலாநிதி அச்சக்கூடத்தில் அச்சிடப் பெற்றது.

1889 சிவஞானயோகிகள் அருளிச் செய்த பிரபந்தத் திரட்டு, பரிசோதகர் இ. இராமசாமிப் பிள்ளை என்னும் ஞானசம் பந்தப் பிள்ளை. சென்னை இந்து தியாலஜிகல் அச்சுக்கூடத்திலும், சித்தாந்த வித்யாநுபாலன அச்சுக் கூடத்திலும் அச்சிடப் பெற்றது.

1892 சிவஞான யோகிகள் அருளிச்செய்த பிரபந்தத் திரட்டு, பரிசோதகர் இ.இராமசாமிப் பிள்ளை என்னும் ஞான சம்பந்தப் பிள்ளை. இரண்டாம் பதிப்பு சென்னை இந்து தியாலஜிகல் அச்சுக்கூடத்தில் அச்சிடப்பெற்றது.

1896 சிவஞானசித்தியார், சிவஞான சுவாமிகளின் உரையுடன் வித்யாநுபாலன அச்சுக்கூடம் யாழ்ப்பாணம், இரண்டாம் பதிப்பு.

1921 சோமேசர் முதுமொழி வெண்பா, சிவஞான யோகிகள் பதிப்பாசிரியர் வா. மகாதேவ முதலியார், தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

1922 சிவஞானசுவாமிகளின் உரைச்செய்யுள், தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

1923 சிவஞானசித்தியார் சுபக்க மூலமும் ஸ்ரீ சிவஞான சுவாமிகள் அருளிச் செய்த பொழிப்புரையும் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிகள் அருளிச் செய்த பதவுரையும், தென்னிந்தியச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

1925 சிவஞானசித்தியார் - சுபக்கம் உரையாசிரியர் மு. திரு விளங்கம், யாழ்ப்பாணம் கொக்குவில் சோதிடப் பிரகாச அச்சுக்கூடம், முதற்பதிப்பு.

1928 சிவதத்துவ விளக்கம்: சிவஞான சுவாமிகள் பதிப்பாசிரியர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர், ஐந்தாம் பதிப்பு, வித்யாநுபாலன அச்சுக்கூடம், சென்னை.

1936 கலைசைச் சிலேடை வெண்பா, தென்னிந்தியச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, மறு அச்சு.

1944 ஸ்ரீமத் மாதவச் சிவஞான சுவாமிகள் மீது தோத்திரப்பா- இரண்டாம் பாகம், பதார்த்தவசனி அச்சுக்கூடம், கும்பகோணம்.

1947 சித்தாந்தப் பிரகாசிகை, சிவஞான சுவாமிகளால் மொழி பெயர்க்கப்பட்டது. கபீர் அச்சுக்கூடம், சென்னை.

1949 அத்துவித வாக்கியத் தெளிவுரை: ஸ்ரீமத் சிவஞான சுவாமிகள், ஸ்ரீவெங்கடேஷ்வர் அச்சகம், கும்பகோணம்.

1950 திருவாவடுதுறை ஆதீன வரலாறு, த.ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, ஸ்ரீ வெங்கடேஷ்வரர் அச்சகம், கும்பகோணம்.

1950 ஸ்ரீமாதவச் சிவஞானயோகிகள் பிரபந்தங்கள், ஸ்ரீ வெங்கடேஷ்வர் அச்சகம், கும்பகோணம்.

1951 கலைசைப் பதிற்றுப்பத்தாந்தாதி, ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள், ஸ்ரீநடராஜா அச்சகம், கும்பகோணம்.

1952 குளத்தூர்ச் சோமேசர் முதுமொழி வெண்பா, ஸ்ரீமாதவச் சிவஞான யோகிகள், ஸ்ரீவெங்கடேஷ்வர் அச்சகம், கும்பகோணம்.

1953 அமுதாம்பிகைப் பிள்ளைத்தமிழ், ஸ்ரீமாதவச் சிவஞான சுவாமிகள், ஸ்ரீ நடராஜா அச்சகம், கும்பகோணம்.

1953 மெய்கண்ட நாயனார் சிவஞானபோதமும் மாதவச் சிவஞான முனிவர் சிற்றுரையும், பதிப்பாசிரியர் ப. இராமநாத பிள்ளை, கழகம், முதற் பதிப்பு.

1953 கவி இராட்சச ஸ்ரீ கச்சியப்ப முனிவர் பிரபந்தங்கள், முதல் பகுதி, ஸ்ரீமுருகன் அச்சகம், கும்பகோணம்.

1954 மேலது, இரண்டாம் பகுதி.

1954 சித்தாந்த மரபு-சிந்தாந்த மரபு கண்டனம்-சித்தாந்த மரபு கண்டன கண்டனம், பதிப்பாசிரியர் த.ச. மீனாசிசுந்தரம் பிள்ளை, ஸ்ரீ முருகன் அச்சகம், கும்பகோணம்.

1958 குளத்தூர் அமுதாம்பிகைப் பிள்ளைத் தமிழ், ஸ்ரீசிவஞான யோகிகள், ஸ்ரீநமசிவாய யோகிகள், ஸ்ரீநமசிவாய மூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

1959 சிவஞான சுவாமிகள் இரட்டை மணிமாலை, ஸ்ரீ பாண்டித் துரைத் தேவர், ஸ்ரீநமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

1960 கலசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ், ஸ்ரீமாதவச் சிவஞான யோகிகள், ஸ்ரீநமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

1961 தத்துவ விவேகம், ஸ்ரீமாதவச் சிவஞான யோகிகளால் மொழிபெயர்க்கப் பெற்றது. ஸ்ரீநமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

1962 தர்க்க சங்கிரகம்-தர்க்க சங்கிரக தீபிகை: மாதவச் சிவஞான யோகிகளால் மொழிபெயர்க்கப்பெற்றது. ஸ்ரீநமச்சிவாய மூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

1963 சித்தாந்தப் பிரகாசிகை, ஸ்ரீசிவஞான யோகிகளால் மொழி பெயர்க்கப்பெற்றது. ஸ்ரீநமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடு துறை.

1963 ஸ்ரீசிவஞான யோகிகள் சரித்திரம், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, ஸ்ரீநமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

1964 கம்பராமாயண முதற் செய்யுள் சங்கோத்தரவிருத்தி, ஸ்ரீ சிவஞான யோகிகள், ஸ்ரீநமசிவாய மூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

1965 குளத்தூர்ப் பதிற்றுப்பத்தாந்தாதி, ஸ்ரீசிவஞான யோகிகள், ஸ்ரீ நமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

1965 இளசைப் பதிற்றுப் பதித்தந்தாதி, ஸ்ரீ சிவஞான யோகிகள், ஸ்ரீநமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

1967 திருவேகம்பர் அந்தாதி, ஸ்ரீ சிவஞான யோகிகள், ஸ்ரீ நமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

1968 தொல்காப்பியச் சூத்திர விருத்தி, ஸ்ரீ சிவஞான யோகிகள், ஸ்ரீநமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

1970 துறைசை யமக அந்தாதி, ஸ்ரீ சிவஞான யோகிகள், ஸ்ரீ நமச்சிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

1974 திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு, ஸ்ரீ சிவஞான யோகிகள், ஸ்ரீ நமச்சிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

1974 கச்சி ஆனந்த ருத்திரேசர் பதிகம், ஸ்ரீ சிவஞான யோகிகள், ஸ்ரீ நமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

1978 இலக்கண விளக்கச் சூறாவளி, ஸ்ரீசிவஞான யோகிகள், ஸ்ரீநமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

1982 குளத்தூர் அமுதாம்பிகைப் பிள்ளைத்தமிழ், ஸ்ரீ சிவஞான யோகிகள், ஸ்ரீநமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடு துறை.

1984 ஸ்ரீமத் சிவஞான யோகிகள் புகழ்மாலை, ஸ்ரீநமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

1984 மெய்கண்ட தேவரின் சிவஞானபோதமும் மாதவச் சிவஞான யோகிகளின் பொழிப்புரையும், ஸ்ரீநமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

1985 ஸ்ரீமாதவச் சிவஞான சுவாமிகள் புலமைச் சிறப்பு நரா. முருகவேள், ஸ்ரீநமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடு துறை.

1986 திராவிட மாபாடியக்காரர் ஸ்ரீசிவஞான முனிவர் அருள் நூல்கட்டுரைகள், ஸ்ரீநமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடு துறை.

1986-87 Indian Philosophical Annual, Vol. Nineteen, Radhakrishnana Institute for Advanced Study in Philosophy, University of Madras.

1989 வ.உ.சி. கட்டுரைகள், மா.இரா.அரசு அவர்களால் தொகுக்கப் பெற்றது, பாரி நிலையம், சென்னை.

1989 சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம், பி.முத்தையாபிள்ளை, நிழற்பட மறு அச்சு, சைவசித்தாந்தப் பெருமன்றம், சென்னை.

1991 சிவஞானபோத மாபாடியப் பொருள்நிலை விளக்கம், சி.அருணை வடிவேல் முதலியார், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

1991 Guiding Star of Saivites by M. Pattamutthu, ஸ்ரீநமச்சிவாய மூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

1982 பெரியோர் செய்த பெரும்பிழைகள்-1, சிவஞான முனிவர் முதல் பகுதி, பி.மா.சோமசுந்தரம், கண்மணி அச்சகம், மதுரை.

1993 திரு.பி.மா. சோமசுந்தரரின் பிழைகள், டி.சி.எஸ். இராமச் சங்குப் பாண்டியன், ஸ்ரீ கிருஷ்ணா ஆர்ட் அச்சகம், தூத்துக்குடி.

1993 மெய்கண்டார் அருளி சிவஞானபோதமும் விளக்கவுரையும், பேரா.வை. முருகேசன், பாரதி அச்சகம், செய்யாறு.

1994 சிவஞானபோத விளக்க உரைக் குப்பாயம், டி.சி.எஸ். இராமச்சங்குப் பாண்டியன், தூத்துக்குடி.

1994 மாதவச் சிவஞான முனிவர் அருளிய சிவஞான மாபாடியம் (விளக்கத்துடன்), சி.சு.மணி, ரெக்சி அச்சகம், திருநெல்வேலி.

(ஆண்டு இல்லை)

தமிழ் சிவஞானபோதம் முதல் நூலா? வழி நூலா?, டி.சி.எஸ். இராமசங்குப் பாண்டியன், தூத்துக்குடி.

(ஆண்டு இல்லை)

சூத்திர கிரகஸ்தாச்சாரிய நிர்ணய மறுப்பு, ஆடூர் கணபதிப் பிள்ளை, சிவஞானத்திருத்தளி, சிதம்பரம், வெஸ்ட் & கம்பெனி, சென்னை.

## மாபாடியம் சிற்றுரைப் பதிப்புகள்

1906 சிவஞானபோதமும், சிவஞான போத மாபாடியமும் சிற்றுரையும், பரிசோதகர் யாழ்ப்பாணம் சுவாமிநாத பண்டிதர், சைவ வித்தியாநுபாலன் அச்சுக்கூடம், சென்னை.

1908 சிவஞானபோத மூலமும் சிவஞான பாஷ்யமும், சுப்பிரமணிய பிள்ளையால் வெளியிடப் பெற்றது, விவேக பானு அச்சகம், மதுரை.

1916 வடமொழிச் சிவஞானபோதத்து முதற் சூத்திர வியாக்யானமும், தென்மொழிச் சிவஞான போதத்து இரண்டாம் சூத்திரத்து மூன்றாம் அதிகரணத்திராவிட மாபாடியமும், பதிப்பாசிரியர் சுவாமிநாத பண்டிதர், சைவ வித்யாநுபாலன அச்சகம், சென்னை.

1921 சிவஞானபோதமும் சிவஞான பாடியமும், வெளியிட்டவர் பால்வண்ணம் பிள்ளை, வித்யாநுபாலன் அச்சகம், சென்னை.

1936 சிவஞானபோதமும் சிவஞான பாடியமும், தென்னிந்தியச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி லிமிடெட், சென்னை, முதல் பதிப்பு.

1952 மேலது, இரண்டாவது பதிப்பு.

1936 சிவஞானபோதமும் சிவஞான பாடியமும், சைவ சித்தாந்த மகா சமாஜம், சென்னை.

1977 சிவஞானபாடியத் திறவு, கூவச்சிரவேல் முதலியார் டாக்டர் இராதாகிருஷ்ணன் தத்துவ உயராய்வு மையம், சென்னைப் பல்கலைக்கழகம்.

1986 சிவஞான மாபாடியம், பதிப்பாசிரியர் ச.வே. சுப்பிரமணியன், சென்னை.

1885 சிவஞானபோதச் சிற்றுரை, பதிப்பாசிரியர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர்.

1918 சிவஞானபோதச் சிற்றுரை, பதிப்பாசிரியர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர்.

1952 சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம், ஔவை துரைசாமிப் பிள்ளை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

இணைப்பு – அ

உ

திருச்சிற்றம்பலம்

செப்பறைப்பதி

## அகிலாண்டேஸ்வரி பதிகம்

பண்டைவினை யாலும்வரு பழவினையி னால்உறு
பாழ்த்தகன் மத்தி னாலும்
பாழ்ஆன மாயைப் புணர்ச்சியா லும்தொலைவில்
பலபல தநுக்கள் தூக்கிக்
கொண்டுசுழல் பாவியேன் செய்கின்ற பிழைஎலாம்
குணம்எனக் கருதி எளிதாக்
கோலங்கள் காட்டிஎனை இவ்வளவு எடுத்தாண்ட
குணமேரு வேநி றைந்து
மண்டுமா னந்தவெள் ளத்தைஉண் டின்புறவும்
வைப்பதென் றோஅ றிகிலேன்
வானாகி மண்ணாகி மற்றுளஎ லாமாகி
மறைநான்கும் அறியா மலே
அண்டபகி ரண்டப் பரப்புமாய் அப்புறமும்
அளவற்று நின்று லாவும்
அருள்ஞான வாரியே ராசை-மே வியசெல்வ
அகிலாண்டம் என்னும் அரசே. 1
கல்ஒத்த நெஞ்சராய் வாழ்வர்சிலர் புவியில்
கறங்குசக டென்ன ஓடிக்
கால்ஓய்வர் சிலர்மரப் பேய்போல நாடொறும்
கதறுவார்சிலர்கு விந்த
வில்ஒத்த நுதலினார் போகத்தை நாடியே
மெலிவர்சிலர் பசைஇ லாத
வெற்றென்பி னைக்கடித் தலகுபுண் ணாய்க்கருதி
விழுமதைப் பருகு நாய்போல்
சொல்லற்ற உலகிலுறு துன்பெலாம் சுகமாய்த்
துடிப்பர்சிலர் அவர்க ளோடு
துடியாத வண்ணமெனை இவ்வள வெடுத்திருள்
தொகைஎலா நீக்கி அல்லோடு

* ராசை ராசவல்லிபுரம்

அல்லொத்த பேரின்ப வெள்ளத் தழுத்தியே
அசைவற் றிருக்க வைத்த
அருள்ஞான வாரியே ராசைமே வியசெல்வ
அகிலாண்டம் என்னும் அரசே. 2

தூலஉடல் அரவினது தோலென்ன நீங்கவே
சூக்குமத் தோடு யிரினைத்
துன்பமுறு யாதனா உடலத் திருத்தியே
சுடருமெரி வாயில் இடுவார்
மேலதில் கனலெனச் செம்பினை உருக்கியே
விடுவர்விழி தன்னில் ஊசி
விம்முற இறக்குவார் நரகுதொறும் வெவ்வேறு
விதமாக ஊழி ஊழி
காலம தழுத்துவார் தலைஎழும் பிடிலுச்சி
கவிழுற வடிப்பர் அந்தக்
கனல்ஒத்த யமதூதர் கையிலடி யேன்தனைக்
காட்டிக் கொடுத்தி டாதே
ஆலமமு துண்டமரர் தமைஆண்ட நீள்கருணை
அன்னமே உனைநம் பினேன்
அருள்ஞான வாரியே ராசைமே வியசெல்வ
அகிலாண்டம் என்னும் அரசே. 3

செம்புறு களிம்பென அநாதிமல மூழ்கிஇருள்
சேருமலர் விழிஎன் னவே
தெளிவற்ற கேவலத் தசைவற் றிருந்துமல
சேட்டையால் குழவி குருடர்
தம்பிணியி னால்உற்ற பால்கோலை நோக்கஅவை
தமைஅளிப் பார்என் னநான்
சார்கன்ம மாயையை விரும்பநீ தந்திடச்
சகலனாய்ச் சுழல்க றங்கு
பம்பரம தென்னநீள் பிறவிச் சுழிக்குளே
பட்டுழல் பெரும்பா வியேன்
பாழான மலமற்று வினைஅற்று மாயையின்
பற்றுவிட் டெனஅறிந்துன்
அம்பொனடி நீழல்சேர்ந் தானந்தம் உண்டுநான்
அதுவாய் இருப்ப தென்றோ
அருள்ஞான வாரியே ராசைமே வியசெல்வ
அகிலாண்டம் என்னும் அரசே. 4

முன்னைமலம் என்னுமொரு பேய்பிடித் திருவினை
முதிர்ந்தவெளி அரவு சுற்றி
முடியாத பிறவிக் கடற்குள்வீழ்ந் தாசைஎன
மூண்டசுழி வந்த மிழ்த்த
மின்அனைய மாதரெனு மகரமீன் ஒருபுறம்
விழுங்கவும் பொறிகள் ஆன
விறல்சுறா ஐந்தும்வந் தெங்கணும் இழுக்கநான்
வீணிலே நைவ தானேன்
பொன்னனைய நின்னடித் தாமரைத் தலமலால்
புகலிடம் பிறிது காணேன்
பொய்யனேன் ஆகிலும் கைவிடா தாளுவாய்
புவனங்க ளியாவும் ஈன்றி
அன்னையே பகிரண்ட முகடெலாம் கரைபுரண்
டப்புறமும் அலைத தும்பும்
அருள்ஞான வாரியே ராசைமே வியசெல்வ
அகிலாண்டம் என்னும் அரசே. 5

இசைஒத்த பண்களும் சொல்லோடு பொருள்களும்
இருளினொடு வெளியு நீண்ட
இன்பமொடு துன்பமு நரகொடு சுவர்க்கமும்
எண்ணுதற் கரிய ஆன
வசைபெற்ற யோநிபே தங்களும் அவைதம்மின்
மருவுமுயிர் யாவும் ஓங்கு
மறைநாலு வர்க்கமு மற்றுமுள கலைகளும்
அலைகடல் எலாமு மலையும்
திசைஎட்டும் இரவியொடு சோமனும் சமயத்
திரட்சிகளும் ஒருவ ராலும்
தேடரிய புனவகோ டிகளுமதில் வாழ்கின்ற
தெய்வங்கள் பலவும் யாவும்
அசைவற்ற பரவெளிக் குள்ளே இருக்குமென்
றறிவித் தெனைக்க லந்த
அருள்ஞான வாரியே ராசைமே வியசெல்வ
அகிலாண்டம் என்னும் அரசே. 6

நீஉள்ள தென்றன்று நானுமுளன் அன்றுமுதல்
நீங்காமல் என்னி டத்தின்
நேசம்வைத் தேநீஇருக்கநான் மலமாகி
நின்றதே துடல்எ னக்கங்

கேயுமுறை எங்ஙனே வினைசுடரும் எனிலவைகள்
ஏறிடா தநுஇ லாமல்
எட்டாத கேவலம் இருப்பமேல் அவைகன்மம்
ஆகா அவிச்சை கண்டு
காயாம தளிப்பதெனில் இன்பதுன் புறமுன்பு
கன்மமே திதனை அருள்வாய்
ககனமுக டும்கடந் தளவில்பு வனங்களும்
கரைபுரண் டெங்கும் ஓங்க
ஆயும்மறை காணா தகண்டமாய் நின்றதிரு
அக்கினீ சுரர்ம ருவுநீள்
அருள்ஞான வாரியே ராசைமே வியசெல்வ
அகிலாண்டம் என்னும் அரசே. 7

உடலத்தில் இன்றெனக் கொழியாத விச்சைதான்
உற்றதே துன்ற னாலே
உற்றதே னிதநு அளித்திடும் போதெலா
முறவேண்டும் என்றன் இயல்பேல்
கடலொத்த பிறவிதனில் எந்நாளும் அவ்விச்சை
கட்டுற்று நிற்க வேண்டும்
கடியமல சத்திசற் றகலவரும் எனிலவை
கழித்ததார் நீக ழிக்கில்
கெடலுற்ற எல்லா உயிர்க்குநீக் குவையாங்
கெடுத்தாலும் அம்ம லந்தான்
கெட்டாலும் உனைவந்து கிடடிவழி படுவதென்
கேடிலா இவைஅ ருளுவாய்
அடலுற்ற திரிபுரம் அடங்கலும் எரித்ததிரு
அக்கினீ சுரரை மருவும்
அருள்ஞான வாரியே ராசைமே வியசெல்வ
அகிலாண்டம் என்னும் அரசே. 8

மங்கையர்கள் இன்பமே முத்திஎன் றும்கந்த
மடிவதே முத்தி என்றும்
வருமுக் குணங்கெடுதல் முத்திவினை மாய்வதே
வளர்முத்தி மூன்று மலமும்
பங்கமுற லேமுத்தி என்றுநித் தியதேகம்
பற்றுவது முத்தி என்றும்
பலவும் பகுத்தறிதல் முத்திஉயிர் கெடுவதே
படர்முத்தி சித்தி களெலாம்

தங்குவது முத்திபா டாணமொத் திடுவதே
தகுமுத்தி என்றும் உயிர்கள்
தடுமாற மலமறுத் தகலாத திருவடித்
தாமரைஎன் முடியில் ஊன்றி
அங்கமுயிர் பொருளெலாம் கைக்கொண்டு நாயினேற்
காநந்த முத்தி தந்த
அருள்ஞான வாரியே ராசைமே வியசெல்வ
அகிலாண்டம் என்னும் அரசே. 9
பூதமே என்றும்வர பொறிஎன்று மனமாதி
பொருளென்று நீள்க லாதி
பொருளென்றும் உயர்சுத்த மாயைபொருள் என்றுமிப்
புவியில் சிருட்டி செய்யும்
நாதர்பொருள் என்றுமர வணையில் துயின்றஒரு
நாரணன் பொருள தென்றும்
நானாவி தம்குளறி னோர்குருடர் பலர்கூடி
நாடிஒளி தேடு மாபோல்
பேதமுறு பிறவியில் சுழல்வதல் லால்உண்மை
பெற்றிடுவ துண்டோசொ லாய்
பின்னுமுன் னும்பக்க மேல்கீழு மாய்அண்ட
பித்திகள் உடைத்து மண்டி
ஆதிநடு அந்தமும் இலாமலடி நாயேனை
அகலாமல் ஆண்டு கொண்ட
அருள்ஞான வாரியே ராசைமே வியசெல்வ
அகிலாண்டம் என்னும் அரசே. 10

அகிலாண்டேசுவரி பதிகம் முற்றிற்று

## இணைப்பு – ஆ

## யோகியின் சித்திரகவி மாதிரிகள்

(சிவ அருணைவடிவேலு முதலியார் பதிப்பித்த காஞ்சிப் புராணத்திலிருந்து (1937) படியெடுக்கப்பெற்றவை.)

### முரச பந்தம்



## சருப்பதோ பத்திரம்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| வீ | யா | வா | மா | மா | வா | யா | வீ |
| யா | வா | யா | ரா | ரா | யா | வா | யா |
| வா | யா | டே | மா | மா | டே | யா | வா |
| மா | ரா | மா | தோ | தோ | மா | ரா | மா |
| மா | ரா | மா | தோ | தோ | மா | ரா | மா |
| வா | யா | டே | மா | மா | டே | யா | வா |
| யா | வா | யத | ரா | ரா | யா | வா | யா |
| வீ | யா | வா | மா | மா | வா | ளா | வீ |

## காஞ்சிப் புராணம்

### சுழிகுளம்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ம | தி | ப | க | வே | யா | ன் | ற |
| தி | னை | ம | னி | மா | வா | வ | ன் |
| ப | ம | ர் | து | று | சே | வா | யா |
| க | னி | து | வ | ன் | று | மா | வே |

## உபயநாக பந்தம்



இந்நூலாசிரியர் முதுமுனைவர் த. ந. ராமச்சந்திரன்:

இவர் சைவ சமய நூற்பணிகளுக்காக யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தின் டி.லிட். பட்டம் பெற்றவர். சைவ சமய சாத்திர தோத்திர நூல்களிற் புலமை மிக்கவர்; அவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர். தமிழ்ப் பல்கலைக்கழகம் வெளியிட்ட மகாகவி பாரதி பாடல்களின் ஆங்கில மொழியாக்கப் பதிப்பின் முதன்மைப் பதிப்பாசிரியர்.

இந்நூலின் மொழிபெயர்ப்பாளர் முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன்:

இவர் தமிழ்ப் பல்கலைக்கழக இலக்கியத் துறையின் மேனாள் தலைவர். ஆராய்ச்சி, கவிதை, சிறுகதை, நாவல், நாடகம் மொழிபெயர்ப்பு எனப் பல துறைகளில் 61 நூல்களைப் படைத்துள்ளவர்.


ISBN : 81-260-4122-0
9788126041220

Sivagnana Munivar (Tamil)

₹ 50



Design by PSS Rao, Spectrum Graphic Studio, Chennai